## திருமெய்ஞானி

# தில்லையமுதம்

## தெய்வ வாக்கியங்கள்

## நிகழ்வுகள் • நீதிக்கதைகள்

ஆதியேதுணை

பிரம்மோதய

மெய்வழி சாலை ஆண்டவர்களின்

# திருமெய்ஞ்ஞான




# சீர்வேயமிர்தம்

## வாக்கியங்கள் - நிகழ்வுகள் - நீதிக்கதைகள்

சாலைக்கொரல்
மடலின் தொகுப்பு....

அன்பளிப்பு :
தஞ்சாவூர்
நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

73-3

ஆதியே துணை

# முத்தி முகப்புரை

ஆருயிர்ப் பிறவியர்களுக்கு,

ஙமஸ்காரம்.

இந்ந னூலில் இடம் பெற்றுள்ள ஙமது தெய்வமவர்களின் திருவாக்கியங்ஙள், திருனிகழ்வுகள் மற்றும் அவர்கள் அருளிய னீதி போதனை கதைகள் அனைத்தும் அவ்வளவும் ஞும் அறிந்நதுதான் என்றாலும் ஙம்முடைய கவனத்தளவில் மட்டும் தான் இது உள்ளது. அச்சு ஏட்டில் மெய்வழி தமிழில் புத்தகமாக வரவில்லை.

அப்படி வந்நால் தானே எதிர்காலத்தில் ஙமது சந்நதியினருக்கும் மெய்வழியை ஞுடிவரும் இவ்வுலகின் னன்மக்களுக்கும் ஙமது தெய்வீக செய்திகளை விரிவாக எடுத்துச் சொல்ல முடியும்.

ஙமது தெய்வமவர்களை பற்றிய இது போன்ற வாக்கியங்ஙளும், னிகழ்வுகளும் காலத்தால் மறந்நுவிடாமலும் னிலைத்து னிலைபெற வேண்டும் என்ற ஞேக்கத்திலும் முடிந்நவரை அனந்நாதி தேவர்களின் பெருமுயற்சியால் இந்ந னூல் வெளிவந்நுள்ளது.

அருமையான இந்ந தெய்வனூலை மெய்வழி மக்கள் குலத்திற்கு வழங்ஙுவதில் பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

அன்புடன்

மெய்வழி சாலை வர்க்கவான்

அட்சரகலா ஆதினர் & சபைக்கரசர்

## இந்ந ஹூலில்

அங்கம் - அங்கி - அங்கு - அங்கே
*அங்ஙம் - அங்ஙி - அங்ஙு - அங்ஙே*

அந்த - அந்தி - அந்தோ - சந்தை
*அந்ந - அந்நி - அந்நோ - சந்நை*

அஞ்ச - அஞ்சா - அஞ்சி - அஞ்சு - அஞ்சே
*அஞ்ஞ - அஞ்ஞா - அஞ்ஞி - அஞ்ஞு - அஞ்ஞே*

*மேல்வரியில் எழுத்துவாசகமாயிருப்பது - கீழ்வரியில் சாய்ந்ந எழுத்திலிருக்கும் - அச்சர வாசகமாய் எழுதியிருப்பதைப் பிழையா யிருக்கிறதென்று எண்ணுதீர்கள்.*

மொழிக்கு முதலில் 'ன' - எழுத்திருக்கும்
பார்த்துப் படித்துக்கொள்ளுங்ஙள்.

**தெய்வ திருவாக்கியங்ஙளும்,
னிகழ்வுகளும், சின்னஞ்ஞிறு னீதிக்கதைகளும்
அடங்ஙியது இன்னூல்**

*"சாலேக்கொரலே"*

*மெய்வழி மடலில்*

*வெளிவந்ந தொகுப்புகள்*

ஆதியே துணை

# அருந்தவ
# தெய்வ
# திருவாக்கியங்கள்

....தில்லைய முதமெ னக்கெடுத் தூட்டினி
தித்தித்த ளுள்முதலாய்ப்
புல்லும்பூ மிதனி லுள்ளவு ணவுபு
சிக்கரு சிக்குதிலை...

- ஞான முறையீடு

# தில்லையமுதம்

| உள்பகுப்பு | பக்கம் |
|---|---|
| அருந்நவ தெய்வ திருவாக்கியங்கள் | 7 – 27 |
| தெய்வீக விறைவிரி சோபனதிருவருள் விகழ்வுகள் | 27–68 |
| தெய்வம் அருளிய வீதி போதனைக் கதைகள் | 76–155 |

ஓ
ஆதியே துணை

## ஆண்டவர்கள் வாக்கியம்

மகசர் தீர்ப்பு மைதானத்தில் பல்லாயிரம் ரிஷிமார்களும் னபிமார்களும், சித்தர் முத்தர்களும் கூடியிருக்கும் அந்த சபையில் எம்பிள்ளைகளாக உங்களை முன்வரிசையில் அமரச்செய்வோம்.

இதைபார்க்கும் அந்த சான்றோர் பெருமக்கள் எம்மைபார்த்து ''னீங்கள் எப்படி அனந்நர்களை மட்டும் முன்வரிசையில் உட்கார வைக்கலாம் - அவர்கள் எங்களைப் போல 'குருபிரானே கதி' என்று இருக்கவில்லையே. னுங்கள் குருபிரானே கதி என்றல்லவா வாழ்ந்து வந்தோம். எங்களுக்கல்லவா முதலிடம் தந்திருக்க வேண்டும். இது சரியல்ல'' என்று கூறி எம்மிடம் சண்டை போட எண்ணுவார்கள்.

ஆனால் னும் உங்களை தினமும் எம்மை அறம் சுற்ற அனுமதித்தோமல்லவா - அந்த விஞடி னிமிஷ மணித் துளிகளில் னும் உங்களுக்கு அளந்த அந்த தவ ஏற்றத்தை கண்டு அவர்கள் எம்மிடம் எதுவும் பேசமாட்டார்கள்.



*விய கார்த்திகை 2 - ஞாயிறு காலை 20/11/46*

னீ பெற்றுள்ள இந்த மண்ணுலக போக போக்கியங்கள் செல்வங்கள் அனைத்தும் உனக்கு உள்ளத்தால் பயத்தைதான் தருவதாகவே இருக்கும். செல்வமும் இக சுகமும் னீ அதிகம் அதிகமாக பெற்று வரவர உன் உள்ளத்து அச்சமும் அதிகமாகி கொண்டுவரும். இருபுறமும் திகிலும் தீயும் தான் னிறைந்து பெருகி இருக்கும். ஆம். இகச் செல்வம் உன் உள்ளத்திற்கு கவலைதருவதாகவே தான் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

ஆனால் சாதாரணமானவராக இருந்நாலும் ஏழையாக இருந்நாலும் நீ மெய்யான மெய்ஞ்ஞான ஆசானை சார்ந்து அவரின் நோக்கிற்கு நிற்கும் போது உன் மனதில் உள்ள பயம் பிய்த்து எரியப்படும். அப்படி எரித்துவிட்டு வீரம் மலிந்ந உணர்வை உனக்கு நிரப்புவார்கள். அதனால் தான் நீ மரண பயத்தை கடக்கிறாய்.



சர்வாகம கிரந்நத்தின் - அகிலத்திரட்டு அம்மானை - தீர்க்கதரிசன பாடல் வரிகள் பாடிவரும்போது.... "உங்கள் பாட்டையர் தனிகை மணிப்பிரான் அவர்கள் எம்மை பார்த்தும் 'மனச்சடவெல்லாம் தீர்ந்நேன்.' என்று கூறுகிறார்கள். எமது தந்தைக்கே எம்மை பார்த்த உடன் 'மனச்சடவெல்லாம்' தீர்ந்நது என்றால் எம் பிள்ளைகளாகிய நீங்களும் எம்மை பார்த்த உடன் மனச் சடவெல்லாம் தீர்ந்நவர்களாகத் தானே இருப்பீர்கள்" என்று அருளினார்கள்.



*விய அற்பசி 4 - புதன் இரவு 1/11/46*

கோழியை விறட்ட மண்ணை எடுத்து இரைத்தால் போதும். கழுதையை விறட்ட தடிக்கம்பு வேண்டும். நாயை விறட்ட கல்லைத்தான் எடுத்து அடிக்க வேண்டும். பேயை ஓட்ட வேண்டும் என்றால் நாம் பேயுடன் தான் ஆட வேண்டும். நரனாகிய உன்னிடம் சிவசெம்மல்கள் பேயாக நின்றும் உறவாடித்தான் உன் மீது உள்ள பேய் பழக்கத்தை மாற்றி ரட்சித்து ஆட்கொள்கிறார்கள். அப்படி பேயாடும் பெருமானாக இருந்து உன்னை ரட்சித்து தேவனாக ஆக்கினாலும் நரன் புத்தியுடன் தான் இவ்வலகில் நீங்கள் வாழ்கிறீர்கள். அழியாத

உயிர் வாழ்க்கைக்கு வரம் பெற்றிருந்நாலும் இவ்வூன உடல் வாழ்க்கையைத்தான் அதிகம் னேசிக்கிறீர்கள். உண்மை னிலையை னினைந்து னினைந்து உணர்ந்து உணர்ந்து உருகி உருகி னின்ருல்தான் அறிவாகாரம் பிரகாசிக்கும்.

*தினைத்துணை னன்றி செயினும் - பனைத்துணையாக்*
*கொள்வர் பயன் தெரி வார் - குறள்*

ஒரு வக்கீலானவர் னீதி மன்றத்தில் கொலைக்குற்றம் சாட்டப்பட்ட ஒருவனை ஒரு சில னிமிஷங்களில், பத்து பதினைந்து சொற்கள் மட்டும் பேசி அவனை குற்றவாளி இல்லை என்று வாதித்து விடுவித்தும் விடுகிருர். அப்போது அவருக்கு னீ எவ்வளவு பீஸ் வேண்டுமானுலும் கொடுக்க தயாராக இருக்கிருய் அல்லவா?

அந்ந வக்கீல் பேசிய ஒருசில னிமிஷங்களுக்கும் ஒருசில வார்த்தைகளுக்கும் காலணு அறையணு தான் தாங்கும் என்று னீ கணக்கிட்டா கொடுக்கிருய்? இல்லையே. அவர் செய்தது ''பனைத் துணை'' செயல் என்றல்லவா னீ னினைக்கிருய்? ஆம். ஆனுல் அதையா பொய்யா மொழி திருவள்ளுவ ஞயனர் 'தினைத்துணை - பனைத்துணை' என்று கூறுகிருர்?

அதுவல்ல. அவர்குறிப்பிடுவது அந்ந வக்கீல் அவனை தூக்கு தண்டனையில் இருந்து காப்பாற்றியது போல மகா ரண காரிருள் சாவில் போக இருந்த உன்னை ஞம் மாற்றி பிரட்டி காப்பாற்றியிருக்கிேருமே அந்ந உதவியைப் பற்றித்தான் அவர் கூறுகிருர். இப்படி ஞம் செய்யும் இந்ந மெய்ஞ்ஞான செயலுக்கு ஈடு இணை உண்டா? இதைத்தான் ''தினைத்துணை னன்றி

செய்யினும் பனைத்துணையாக கொள்வர் பயன் தெரிவார்'' என்று வள்ளுவ னுயனுர் கூறுகிறுர்.

உலகத்தில் னீ னன்றி என்று னினைத்துக் கொண்டிருப்பதை அவர் சொல்லவில்லை. சொல்லவும் மாட்டார்கள். ஏனெனில் இகத்தில் செய்யும் காரியத்தைப்பற்றி ஞானச் செம்மல்கள் பேசமாட்டார்கள். னீ உலகத்தில் னன்றி என்று னினைத்திருப்பது அற்ப காரியம். னும் உனக்கு தந்த சாகாக்கல்வியானது பல கோடி காலத்தை சுருக்கி ஒரு னொடியில் ஆக்கி தந்நது ஆகும். தினைத்துணை னேரத்தில் னும் செய்த இந்த னன்றியைத் தான் ' பனைத்துணை கொள்வர் பயன்தெரிவார்' என்று அவர் குறிக்கிறுர். இதனை அல்லாமல் வேறு எதையும் குறிப்பிடவில்லை! இதையெல்லாம் னீங்கள் கவனித்து எண்ணிப் பார்க்க வேண்டும்?

உடல் போல் இருப்பது வாளின் தகடு. உயிர் அதன் கூர்மை. உயிரில் ஒடுபவன் ஆசான். உடலில் ஒடுகிறவன் சீடன். வாளில் ஒடுவது என்றுல் (ஆண்டவர்கள் தங்களின் கைவாளை எடுத்துக் கொண்டு, அதன் பளபளப்பான அகல விசாலத்தைக் காட்டி) இந்த தகட்டு பகுதியில் னீங்கள் ஒடுவீர்கள். னும் அதன் கூர்மையிலேயே தவறுது ஒடுவேன். பாபி அதன் பக்கமே வரமுடியாது. ஆசான் உன்னையும் தன்னைப் போல் பழக்குகிறுர்.

எம்மை சந்திக்கும் போது எவ்வளவு சந்நேகம் உனக்கு வந்நது. அடுத்தடுத்து கோடானு கோடியாக சந்நேகத்துடன் தானே எம்முன் அப்போது னின்றுய். சந்நேகமற ஞானப் பாதையில் னீ னடக்க. அவை ஒவ்வொன்றையும்

(2)

மாற்றியல்லவா ஞம் இந்த னிலையில் உம்மை ஆக்கினேம். அதற்காக எமக்கு செருப்பாக னீ தேய்ந்நாலும் போதாதே. அழகர் கோயிலுக்கு போய் பார் தெரியும். அவர் ஞமத்தை சொல்லி பணம் கொடுத்து செருப்பு வாங்கி தம்மை அடிக்கச் சொல்லி ஒருவருக்கொருவர் அடித்துக்கொள்கிறார்கள். அப்போது தான் புண்ணியம் வரும் என்று கதறுகிறார்கள். அப்படி இருக்க கண்கண்ட தெய்வமாகிய உன் பெருமான் சன்னதி மட்டும் வேறயா? இந்த ராஜ பாதை மட்டும் வேறு?



உ ரு கத்தவர்கள் கடவுள் - கடவுள் வழிபாடு என்று சொல்லித்திரிவது ஒரு ஒப்பனை. தம் ஒப்பனையாக வாயளவில் சொல்லித்திரிகிறோம் என்று கூட அவர்களுக்கு தெரியாத ஒரு கேவல னிலையில் இருக்கிறார்கள். இப்படியானது இந்த உலகம். எல்லோரும் பொழுது போக்கிற்காகவும் தம்மை எல்லாரும் மதிக்கவும் கடவுள் என்ற ஒப்பனை வழிபாட்டை செய்கிறார்கள்.

அப்படியல்லாமல் பிறவியை கடக்க வேண்டும் என்ற எண்ணம் உடைய மக்களோ முடத்தனமாக விதரணை இன்றி என்னென்னவோ செய்கிறார்கள் - கடவுளைத் தோத்தரிப்பதாக ஒரு மந்நிரத்தை வார்த்தையளவில் பிரணவ மந்நிரம் அது இது என்று இவர்களே தேடி எடுத்துக் கொண்டு ஞளெல்லாம் உருப்போட்டு ஆராதனை செய்கிறார்கள். காலப்போக்கில் பலன் இல்லை என்று அறிந்நவுடன் ஒரு சக்கரம் ஒன்றைபடமாக வரைந்து அதில் அந்த மந்நிரத்தை எழுதி அடைத்து சக்கரபூஜை செய்வதாக சொல்லி ஏதோ செய்து முயற்சிப்பார்கள். அதுவும் பலன் கைவராது. மறுபடியும் அதிலேயே முக்கோணம், அறுகோணம் எண்கோணம், எண்பத்து முக்கோணம் என்று

அனந்நங்நோடி மனதில் என்ன என்னப்படுகிறதோ அதை எல்லாம் கண்டபடி வரைந்து ஜபித்து முயற்சிப்பார்கள். பயன் இராது. உடனே பஞ்சபூதங்ஙளை வணங்ஙவேண்டும் என்று ஒரு சிந்நனைக்கு போவார்கள் - அதுவும் தண்டம். பிறகு தொண்ணூற்று ஆறு தத்துவங்ஙள் என்று நுழைவார்கள். இவ்வாறு இங்ஙும் அங்ஙும் தாவி வாழ்நாள் முழுதும் விணுக்குகிறுர்கள். எக்கோடி காலமானுலும் உண்மையை காண முடியுமா? குழப்பம் தான் மிஞ்னும். ஏனெனில் இவர்கள் உலகம் வேறு. மெய்ஞ்ஞான உலகம் வேறு.

மெய்ஞ்ஞானிகள் உன்னை கற்பகோடி கால புதிய வாழ்விற்கு வழிகாட்டுவோர். னீ இவ்வுலகில் படிக்கும் படிப்பு வழிபாடு வீரம் பரிசுத்தம் எல்லாம் வேறு. அவர்கள் உனக்கு கற்றுக் கொடுக்கும் படிப்பும் வழிபாடும் இடமும் வேறு. ஏன் அவர்களே வேறு. உனக்கு அவர்கள் னீ கல்லாதனவற்றை எல்லாம் கற்பித்து உன் மாய்கையை சங்ஙரித்து முத்தி என்னும் இலக்காகிய ஆயுத்தை உனக்கு அருளுவார்கள்.

அவர்கள் உன்னைப் போல தேகியாக வந்து இருந்நாலும், பரத்தினுடைய லக்ஷணமாகிய சாகாகல்வியென்ற தெய்வீக கல்வியை கற்றவர்கள். இகத்தின் லக்ஷணத்தை உன்னைப்போல் இரண்டு மடங்ஙு கற்றுத் தேர்ந்நவர்களே அவர்கள்.

சிவ லோக பதவியை உன் தலையில் சூட்டுகிற அப்பாரவான்களுக்கு ஒப்பு உவமை ஏது? னீ ஒரு இராஜாங்ஙமே கொடுத்தாலும் அவர்களுக்கு அதனுல் பிரயோஜனமில்லை.

மெய்ஞ்ஞான னேர்பாதையை காட்டுகிற ஒரு கல்வியை உனக்கு போதிக்க வந்ந அவர்களுக்கு னீ செய்ய வேண்டியது

உன் மேல் அவர்களின் இரக்கத்தைச் சாயவைத்து கொள்வதே ஆகும்.

அவர்கள் பெருமையை உணர்ந்து அவர்கள் எப்பேர்பட்டவர் என்ற ஆச்சரியம் உன் உள்ளத்தில் போய் எட்டி அவர்மீது பேரின்ப ஆச்சரியம் உன் உள்ளத்தில் பெருகி வர செய்வது தான் அந்த ஆசானின் இரக்கம் உன்மீது பாயச் செய்யும் தூண்டு கோலாக இருக்கும்.

உன் தாய், தந்தை, மனைவி, பெண்டுபிள்ளை, தம்பி, தங்கை, குலம், கோத்திரம், போன்றவற்றின் மீது வைக்கும் எல்லா அன்பினையும் ஒன்றாகதிரட்டி அவர் மீது நீ அன்புப்பிடி கொள்ளவேண்டும்.

அப்போது தான் நீ, நான், உபதேசப் பொருள் மூன்றும் ஒன்றே என்று தெரியும். ஆசானிடம் நீ நெருங்க நெருங்கத்தான் இதை நீ உணர்வாய். ஆச்சரியம் பிறங்க உன் குருபிரானை நீ நோக்கநோக்க புண்ணியனாவாய். யோகியாவாய். ஆசானுடைய மனத்தின் கண்ணே உன் எண்ணம் ஒட்டிச் கொள்வது தான் நிஷ்டையே.



ஒரு தளபதி போரில் ஜெயித்து அந்த அரசனிடமிருந்து ஒருவைர மாலையை கைப்பற்றி அதை ஒரு தங்கப்பெட்டி செய்து அதில் வைத்து தன் மனைவிக்கு முன்னதாக அனுப்பி வைக்கின்றான். அவள் வைரத்தைப் பற்றி தெரியாதவள் ஆதலால் பெட்டியை மட்டும் அழகாக இருக்கிறதே என்று பத்திரப்படுத்தி தன்னிடம் வைத்துக் கொண்டு, வைர மாலையை அடுப்பங்கரையில் சுவற்றில் மாட்டிவைத்து இருந்தாள். புருஷன் வந்து, தான் அனுப்பிய பரிசுப் பொருள் எங்கே என்று

கேட்ட போது பெட்டியை கொண்டுவந்து கொடுக்கிறாள். அவன் திறந்து பார்த்து அதிலுள்ள மாலை எங்கே என்று கேட்கிறான். அது சமையறையில் ஆணியில் மாட்டி வைத்திருக்கின்றேன் என்று கூறினாள். பதறிப்போய் வைரமாலையை எடுத்து அதன்மேல் படிந்திருந்த கரியை யெல்லாம் போக்கி அழுக்கை துடைத்து அதன் பெருமையை எடுத்துச் சொல்லி விளக்குகிறான்.

தங்கப்பெட்டி தூலதேகம். வைரமாலை ஜீவதேகம். அதுபோல் உனக்கு ஒரு வைரமணிதேகத்தை தூலதேகத்துள் வைத்துப் படைத்துக் கொடுத்திருந்தும் நீங்கள் அதைப்பற்றி அக்கரை கொள்ளாமல் தூலதேகத்திலேயே நினைவை ஒட்டிக் கொண்டிருக்கிறீர்கள்.



சாலையம்பதியில் தெய்வம் தங்கள் சிம்மாசனத்தில் அமர்ந்து இருந்நார்கள்.. அவர்கள் திருமுன்பாக அனந்நாதி தேவர்கள் அமர்ந்து மெய்ஞ்ஞான விஷயங்கள் பற்றிக் கலந்துரையாடிக் கொண்டிருந்நார்கள். இடையிடையே நம் தேவ கோமானவர்கள் திருவாயிடமிருந்து திருவாக்குகள் வெளியாகிக் கொண்டிருந்நது.

அப்போது ஆண்டவர்களை தரிசிக்க வந்ந ஒருபுதியவர் தெய்வமவர்கள் திருமுன்பாக திருவருட்பாவிலிருந்தும், திரிகாலம் கண்ட திருமூலர் திருமந்திரத்திலிருந்தும் சில பாடல்களைப் பாடி தோத்தரித்து நின்றார்.

அப்போது ஒரு அனந்நர் "கண்ட தெல்லாம் பாடினால் பண்டிதனாக முடியுமா?" என்று கேட்டார். சபையில்

இவ்வினுவைக் கேட்ட அனந்நர்கள் "எப்படி முடியும்?" என்று பதில் கூறினுர்கள்.

இதை கேட்டுக்கொண்டும் பார்த்துக்கொண்டும் ஆசனத்தில் வீற்றிருந்த னம் குலதெய்வம் சரேலென னிமிர்ந்து சுற்று முற்றும் தம்பார்வையை அனந்நாதி தேவர்களை னேக்கி சுழலவிட்டு ஆனந்த இளனகை பிறங்க:

"கண்டதெல்லாம் படித்தால் பண்டிதனுக முடியும்!" என்று திருவாய் மலர்ந்நார்கள். தெய்வத்தின் அந்த திருவாயுரையைக் கேட்ட அனந்நர்கள் ஆச்சரியக் குறியுடன் தெய்வத்தை னேக்கினுர்கள். "கண்டதெல்லாம் படித்தால் பண்டிதனுக முடியாது என்று சொல்லிவிட்டோமே, தெய்வம் இப்படிக் கூறிகிறுர்களே! தாங்கள் சொன்னது தவருக அல்லவா இருக்கிறது" என்று சிந்திக்க ஆரம்பித்தார்கள்.

அப்போது தொடர்ந்து வெளியாகிய ஆண்டவர்கள் திருவாக்கு: "இவ்வுலகம் தோன்றிய னுள் முதலாக அணுவுக்குள் அணுவாக இருந்து வரும் தேவரகசிய காட்சிகளை னும் உங்களுக்கு எடுத்துகாட்ட, அதுகண்டு னீங்கள் களிப்படைகிறீர்கள். னீங்கள் அதை உணர்ந்து ஆனந்தத்தில் இருப்பதை கண்டு னுமும் ஆனந்தமடைந்து கொண்டிருக்கிறேம். னீங்கள் அனுதினமும் னேர் தரிசனையில் எதை கண்டு கொண்டிருக்கிறீர்களோ அதை கண்ட பிறகுதான் எதை எல்லாம் னீ படித்தாலும் பண்டிதனுக முடியும். அணுவுக்குள் இருக்கின்ற ஆயிரம் மடங்கு சிறிய னடராஜப் பெருமானைக் கண்டு அதன் பிறகு படித்தாயானுல் னீ பண்டிதனுக முடியும். அதை கண்டதற்கப்புறம் தான் பண்டிதனுக்குரிய ஆனந்த மகிழ்ச்சி வரும்.

அணுவுக்குள் இருக்கின்ற ஆயிரம் மடங்கு சிறிய கந்த பிரானைக் கண்டு தரிசிக்க வேண்டும். அணுவுக்குள் நுழைந்து அனுபவத்திற்குரிய அந்த பேரின்ப நிகழ்ச்சிகளை உனக்கு ஒரு தவப்பாடும் இல்லாமல் நாம் உங்களுக்கு அளிக்கிறோம். இது யுகங்களிலே நடந்நறியாச் செயலாகும். மனுமுறை துவங்கிய கால வரம்பிலிருந்து இதுநாள் வரை தோன்றிய எந்தப் பாரவான்களும் யாருக்கும் அளித்து அறியாத பாதையில் அல்லவா உங்களை இப்போது நாம் கூட்டிச் சென்றுக் கொண்டிருக்கிறோம்'' என்று அருளினார்கள்.

புலன் என்பது உன் நினைவு. பொறி என்பது அறிவு. புலன் வழி செல்லாமல் பொறி வழி செல்லுதல் வேண்டும். புலன்வழி பற்றியோடி போக்கிய உன் வயதையெல்லாம் நலன் தர மீட்டுத் தருபவர் யார்? நாம் தான்.

உங்கள் இதயகமலத்தில் மெய்யின் தீபத்தை நாம் ஏற்றியபோது உங்கள் அனைவரின் எண்ணமும் ஒரே சமமாக பிரகாசிக்க ஆரம்பித்ததே அதுதான் சமரச சன்மார்க்க நிலை.

பிரம்மதேவர் நாவில் நான்கு வேதங்களும் அடக்கம் என்று கூறப்பெறுகிறது. அது உன் ஆசான் திரு ஆலவாயையே. தினமும் நாம் உங்களுக்காக வருஷிக்கும் அருளமுத வற்றாத ஊற்று ஜீவ மரபு நீரில் தினமும் நீ ஊறுகிறாய். என்றென்றும் பெருக்கெடுக்கும் அந்த புனல்நீரில் நீ உறைகிறாய். இதனால் எமபயம் என்கிற குளிர் தேய்ந்து

காய்கிறது. இதையே தான் சர்வ கலைகளின் தெய்வமான கலைமகளும் வாசம் செய்யும் தலம் என்று மறைமுகமாக குறிக்கப்படுகிறது.

இறந்தபின்தான் பேரின்ப பதவி கிடைக்கும் என்கிறார்களே. இதுசரியா? 'ஐயா நீங்கள் இந்த வேலையை செய்யுங்கள். நீங்கள் இறந்த பிறகு அதற்கு சம்பளம் தருகிறேன்!' என்றால் யாராவது ஏற்றுக்கொள்வார்களா? மெய் அறிந்தோரின் ஒரு பாடலை பார்த்தாலே உனக்கு தெரியும். தாயுமானப்பிரபு "எடுத்த தேகம் விழுமுன் அகண்டாகார பேரின்பத்தை புசிப்பதற்குச் சேரவாரும் ஜெகத்தீரே".... என்கிறாரே. இதிலிருந்து ஒருவன் ஜீவிய காலத்திற்குள் இந்த மெய்யைப் பெறவேண்டும் என்று தெரிகிறதல்லவா?

காலை எழுதல், மாலைகுளித்து மனைபுகுதல், உறவினருடன் உண்ணுதல். உயர தூங்குதல் போன்ற உயர் குணங்கள் காகத்திடம் உள்ளது. இவைகள் ஒரு மனிதனிடத்திலும் இருக்க வேண்டிய பண்புகளாகும்.

*பிரம்மப்பிரகாச மெய்வழிச் சாலை ஆண்டவர்கள் தங்கள் தனிப்பெருங்கருணைத் திருவருள் மாட்சியால் தூல உடம்பி லிருந்து புகழுடம்பாகிய பரிசுத்த சூக்கும 'கனக வர்ண கல்பக தேகத்திற்கு சாகாக்கலையின் சகல பரிசுத்த அடையாளங்களும் பொலிவுபெற்று விளங்க பஞ்சாட்சர ஜெயமேற்றும் ஜீவப்பிரயாண பரிசுபதத்தை கண்ணோர் காண வேண்டினவர் எல்லோருக்கும் வழங்கி வருகிறார்கள். அதுபற்றி தெய்வமவர்கள் ஒரு சமயம் விளக்கிய தேவ வாக்கியம்:*

ஜீவாத்மா பூமியில் வந்து பிறந்த ஒரு ஞற்பது ஞட்களும் - தூங்கும் போது தன்னைப் படைத்து அனுப்பிய பரமாத்மாவை இடை இடையில் தரிசிக்கும் ஆனந்தத்தில் - அது அவ்வப்போது முகத்தில் இளனகை பூப்பதையும் அத்தரிசினை மறைந்த உடன் திடீரென அது அழுவதையும் காண்கிறோம்.

அதாவது மூலவள ஞட்டை விட்டு வந்துள்ள ஜீவாத்மாவாகிய உயிர் - இம் மண்ணுலக அறிவு பெற்றுவர - ஒரு ஞற்பது ஞட்கள் ஆகிறது. அது போலவே - இந்த உயிராகிய ஆத்மா இப்போது தூலத்தை உதற்றி ஜீவப்பிரயாணமாகி விட்டாலும், பரிசுத்த ஆவியாகிய பரமாத்மாவோடு கலக்கும் னெடும் பாதைக்கு தொடர்ந்து பயணம் செல்ல ஒரு ஞற்பது ஞட்கள் ஆகிறது என்பது மெய்னிலை கண்டோர் தம் அறிவுக்கண் கொண்டு கண்ட உண்மை.



ஜீவதேக மூல வளஞட்டில் இருந்து ஜீவாத்மாவாகிய மனித உயிர் இப்பூமியில் அரிய மனுத் தூலம் ஏற்று ஜனனமாகி - மனித தூலத்தின் உணர்வறிவு முதலான ஐயறிவினை பெற்ற உடன் - அதன் ஐம்புல னுகர்ச்சியிலேயே கிடந்து உழன்று இறைவனிடம் வாங்கி வந்த அமானிதம் என்னப்பெற்ற வித்தியா தத்துவ எழுகடன் அறிவு சீதனத்தை அடியோடு பைய பைய மறந்து மூலவள ஞட்டின் தொடர்பே இல்லாமல் ஆகிவிடுகிறது.

இது கண்ட இறைவஞகிய பரமாத்மா தம் உடமைப் பொருளாகிய ஜீவாத்மாவான மனித உயிர்களை தடுத்தாண்டு ரட்சித்து மீண்டும் பரமபதத்தில் ஏற்றிட - முன்வந்த ஆருருக்கே அழைத்து செல்ல திருவுளம் கொண்டு - தானும் ஒரு மனித தூலத்திருமேனி ஏற்று குருமூர்த்தமாக இப்பூலகவில் எழுந்தருளி

தன்னை சரணடைந்த மக்களை மந்திர சந்ததியாய் மாற்றிப் பிறப்பிக்க வருகின்றது.

இப்படி அவதாரம் செய்து - ஏகனுயகனுக சர்வ சாட்சி வித்தாகிய சர்வேஸ்வரனுக - முத்திரை சன்னதங்கள் பெற்று வரும் இதயபிரகாச குருபாரவான்களிடம் மட்டுமே - மக்கள் அடைந்து உய்யச்செய்கின்ற பெரும்பத பேரின்பச் சாகாக்கலையாகிய அதிவல்லப தெய்வீக பிரம்ம வித்தையான இந்த முத்தித் தரும் செயல் இருந்து வருகிறது.

*பச்சைக் குழந்தை தன்னை ஒக்கரை யிலெடுக்கப்*
*பாம்பாய்னை ளியக்கண்டேன் -சிவனே அய்யா!*

என்ற பாடல் வரிகள் வரும் போது

*" ஒக்கரையிலெடுக்க.... ஜீவசிம்மாசனத்தில் ஏற்றிவைக்க..."*

-என்ற திருவாக்கியம் அருளப் பெற்றது.

ஒருவனைச் சுற்றி மதிப்பு என்ற கும்பல் இருக்கிறது. பின் அதிகாரம் என்ற கும்பல் இருக்கிறது. பின் அதை சுற்றி அமல் என்ற கும்பல் இருக்கிறது. அதைச்சுற்றி பாதுகாப்பு என்ற கும்பல் இருக்கிறது. ஒருனேரம் இத்தனையும் மாறி காலில் இருந்த செருப்பும்போய் அவன் மேல் விழுகிறது.

பொன்பொருளையே ஒருவர் பெற்றுள்ள்தைப்போல மற்றவன் பெறுவது இல்லையே. அப்படி பெறச் செய்ய முடியுமா? ஒரு பணக்காரனிடம் உன்னிடம் உள்ள செல்வத்தை

ஒரு ஏழைக்கு கொஞ்ஞம் கொடுத்து அவனையும் பணக்காரன் ஆக்கு என்றால் அப்படி ஆக்குவதற்கு அவன் ஒத்துக் கொள்வானா?

நான் எவ்வளவு கஷ்டப்பட்டு முயற்சி அனுபவம் ஆண்மைக் கொண்டு சம்பாதித்துள்ளேன். அதைப்போய் வேறு ஒருவனுக்கு கொடுத்து விடுவதா? என்பான் இல்லையா? இது இகச்செல்வம். பொய்ப்பொருள். இதற்கே இப்படி என்றால் மெய்ப்பொருளான சூக்கும பொருளான ஞானத்தை எல்லாருக்கும் எளிதாக கொடுத்துவிடமுடியுமா? மெய்ப்பொருளை பொய்ப்பொருளுக்கு சமமானதாக நினைத்தால் அவ்வளவுதான். மாசடைந்த மனத்தை சுத்தீகரித்து மனத்தினால் கொடுக்கவேண்டிய மாபெரும்பொருளை அதன் பெருமை-யறியாமல் பொய்பொருளுக்கு சமமாக நினைத்தால் பாவியாகத்தான் ஆகிறாய். அந்த மெய்ப்பொருளின் உயர்வு தெரியாமல் பொய் பொருளுக்கு சமமாக நினைத்து எத்தனையோ பேர் அப்படி பாவிகளாக போய் விட்டார்களே! நாம் அளிக்கும் இந்தப் மெய்ப்பொருளை உங்கள் பொருளாக உங்களுக்கு மட்டும் உரிமை உடைய பொருளாக நீங்கள் நினைக்கா-விட்டால் அவ்வளவுதான்.

நீ உண்ணும் உணவில் சுவை ஒன்றுக்கொன்று பொருத்தமாக சரியாக அமைந்தால் தானே உனக்கு சுவைக்கிறது. உப்பு, உறப்பு, புளிப்பு, தித்திப்பு முதலியவை முறைப்படி அளவுபடி சேர்ந்து ஒன்றோடொன்று இணைந்தால் தானே உனக்கு சுவைக்கிறது. இப்படி ருசி தருவதற்கே இவ்வளவு பொருத்தம் தேவையாக இருக்கிறது. அடுத்து அது நரகலாக

போக இருக்கும் இந்த உணவிற்கே இவ்வளவு பொருத்தம் வேண்டியிருக்கிறது. அப்படியானல் பெரியோர்கள் தரும் அந்த ஞான அமுதுக்கு அந்த மெய்ஞ்ஞான அழியா நிதிக்கு எவ்வளவு பொருத்தமும் முறையும் தொடர்பும் இருக்க வேண்டும் என்று நீ நினைந்து உணர்ந்து அனுபவித்து அது பற்றி எண்ணிப்பார்க்க வேண்டும்.



*விய அற்பசி 29 - செவ்வாய் 16/11/46*

பணத்தை கொடுத்து நல்ல நிலமாக வாங்கிவிட்டால் எல்லாம் சரியாகி விட்டதா? பயன்கிடைக்குமா? எருவிட்டு தண்ணீர்விட்டு உழுது விதைத்து களைநீக்கி காலா காலமாய் கவனித்தால் அல்லவா பயன் கிடைக்கும். அழியக்கூடிய இதுவே இவ்வாறென்றால் அழியா நிதியத்திற்கு - இவ்உலகில் இதுநாள் வரை எல்லார்க்கும் இருளாகவே இருந்த அருள் நிதியை உனக்கு வெளியாக்கி தந்தோமே அது செழித்து ஓங்க நீ எவ்வளவு பாடுபட்டு பாதுகாத்து வரவேண்டும்?



*சபையில் பிறவியர்கள், உலகத்தில குற்றம் செய்த-வர்கள் இறைவனால் தண்டிக்கப் பெறுவதில்லை. குற்றம் செய்து பொருள் சேர்ப்பவர்கள் உலகில் நன்றாகத் தானே இருக்கிறார்கள் - என்ற கருத்தை வெளியிட்டபோது பிறந்த தெய்வ வாக்கியம்:*

ஒரு திருடன் ஒரு வீட்டில் லட்சம் ருபாய் திருடுகிறான். திருடிய பணத்தை வைத்து சந்தோஷமாக இருக்கிறான். அவன் திருடியதில் மாட்டிக்கொள்ளாமல் தண்டனை அனுபவிக்காமல் நன்றாகவே இருந்து வருகிறான் என்றே வைத்துக்கொள். ஆனால்

அந்த திருடன் ஒரு தடவை திருடியதுடன் நின்று- விடுவதில்லை. தொடர்ந்து திருடுவான். ஏதாவது ஒரு திருட்டில் கண்டிப்பாக பிடிபடுவான். அப்பொழுது அவனுடைய திருடெல்லாம் வெளிப்படும். தண்டனையும் பெறுவான். தண்டனை பெறும்போது தான் அவனுடைய துன்பம் அவனுக்கு மிகமிக அதிகமாகத் தெரியும். ஏனென்றால் திருடிய பொருள்களை வைத்து கொஞ்சு காலம் அவன் மிகவும் சந்தோசமாக சுகமாக இருந்து விட்டானல்லவா? அதற்கு நேர்மாறாக இப்போது தண்டனை காலம் அவனுக்கு மிகவும் துன்பமாக பலமடங்கு அதிகமாக தெரியும். இறைவனுடைய நீதி ஒரு தராசைப் போன்றது. ஒரு தராசில் ஒரு தட்டில் எடையை வைத்து மற்றொரு தட்டில் பொருளை வைக்க தராசு அப்படியே இருக்கும். ஆனால் தராசு சம நிலைக்கு வந்தவுடன் அணு அளவு பொருளைத் தட்டில் வைத்தால் கூட தராசு உடனே தலைகீழாக தூக்கிவிடும். அதுபோலத் தான் இறைவனுடைய நீதியும். மனிதன் தவறு செய்ய செய்ய இறைவன் பார்த்துக் கொண்டே இருப்பான். இனித் தாங்காது என்ற நிலைக்கு வந்தவுடன் தூசியளவு குற்றம் செய்தாலும் அவன் தகுந்த தண்டனையை பெறுவான்.

ஒரு மெய்ஞ்ஞான பெரியாரிடம் ஒருவன் வந்து நீங்கள் பெரியார் என்று நிருபிக்க முடியுமா? என்று கேட்டான் அதற்கு அவர், ".... முடியும். உன்னை பெண்ணாகவும் உன் மனைவியை ஆணாகவும் மாற்ற முடியும். ஆனால் மாற்றியவுடன் உன் மனைவி ஆணாக மாறிவிட்டாளா என்று மற்ற ஒரு ஆண் பார்த்து சொல்ல வேண்டும்." என்றார். அவன் உடனே ஓடிப்போய் விட்டான். அவன் மனைவியின் கற்பை விட பெரியோர்கள் மட்டமானவர்களா? அவரை சோதிக்க வந்துவிட்டார்கள் பார்.

பொண்டாட்டியே தெரியாத உலகத்தில் ஒருவன் ஒரு ஞயைப் பொண்டாட்டியாகக் கட்டிக் கொண்டானும். ஆனல், அது 'வள்' என்று கடிக்க வந்தபோது இவன், 'பெண்டாட்டி கட்டிக்கொண்டால் இப்படித்தான் கஷ்டப்பட வேண்டும்' என்று நினைத்துக் கொண்டானும். இப்படிதான் நீங்களும் உங்கள் வாழ்க்கையை நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.



ஞட்டிற்கு விரோதமான ராஜ துரோகிகளுக்கு தரும் தண்டனையானது மிகவும் எவ்வளவு உயர்ந்த பட்சம் கொடுக்கமுடியுமோ அவ்வளவு கொடுக்கப்படும் அல்லவா? அதுபோன்றே மெய்ஞ்ஞான ராஜாங்கத்தில் பஞ்சமா பாதகங்களை செய்யபவனுக்கு விதிக்கப்படும் தண்டனை மிக கடுமையானதாக இருக்கும். அப்பேர்பட்டவனுக்கு ஞானம் ஒட்டவே ஒட்டாது. எட்டவும் எட்டாது. அதனல் தான் சத்திய உத்தம பாதையில் செல்வேன் என்று சத்தியம் வாங்கிய பிறகு அவனுக்கு உபதேசம் கொடுப்பது.



உபதேசம் வாங்கினதும் எல்லாம் முடிந்துவிட்டது என்று எண்ணிக்கொண்டு சென்றவர்கள் பலர். இத்தகையவர்களைக் குறித்து தெய்வம் ஓர் உவமையின் வாயிலாகக் கூறியருளி உள்ளார்கள்.

விருந்துண்டு பசியாறுவதற்கென முதலில் இலை போட்டார்கள். போட்ட இலையை மட்டும் விருந்தென எண்ணிக்கொண்டு சிலர்சென்று விட்டார்களாம். உபதேசம் வாங்கியவுடன் எல்லாம் தெரிந்துவிட்டது என்று சென்று விட்டவர்கள் கதையும் இதுதான்.... என்று ஒரு சமயம் ஆண்டவர்கள் தெரிவித்து உள்ளார்கள்.



ஒருவன் ஒரு தேவ ரகசியம் சொல்லுவதாக ஒருவனுக்கு சொன்னுன். அதை அந்த மற்றொருவன் என்னவென்று தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலில் அவனை உடனே சொல்லும்படி கேட்டுக் கொண்டே இருந்நான். இவன் இந்த அமாவாசையில் சொல்கிறேன். அந்த பௌர்ணமியில் சொல்லுகிறேன் என்று தள்ளிப் போட்டுக்கொண்டே வந்நான். பின் அவனிடம் னன்ருக வேலை வாங்கிவிட்டு ஒரு ஞள் தேவ ரகசியம் வெளியிடுவதற்கு ஒரு முகூர்த்த ஞளை குறித்தான். அன்று அவனிடம் காதை அருகே கொண்டுவரச் சொல்லி காதில் ‘னெல்லுக்குள் அரிசி இருக்கிறது’ என்று ரகசியமாக ‘குசுகுசு’ என்று அவன் சொன்னுனும்... என்று தெய்வமவர்கள் கூறிட ...

*... இதைகேட்டு சபையில் எல்லோரும் சிரிக்க – ஆண்டவர்கள் தொடர்ந்து அருளிச் செய்ததாவது: ‘அகரம்’ என்று வேதத்தில் சொல்லியிருக்க ‘அ’ என்று எல்லோரும் கூறிகிருர்களே? அதை கேட்டுக்கொண்டு னீங்ஙள் சும்மாதானே இருக்கிறீர்கள். இதற்கும் அதற்கும் என்ன வித்தியாசம்? மேலும் அரிக்கு முந்தின அவ்வெழுத்து என்று வேதத்தில் கூறியிருக்கிறதே. விறகை எடை போடும் தராசிலா வைரத்தை எடை போடுவது? வெறும் னூலறிவினர் அகரத்தை ‘அ’ என்று சொல்லுகிருர்கள். அது போல இது இருக்கிறது.” என்று அருளினுர்கள்.*



# மனிதனின் ஆணவம் அடங்காதது

காளி கோயிலுக்கு பலியிடுவதற்காக அந்தக் காலத்தில் புலி வேட்டைக்குப் போவார்களாம். ஒரு இடத்தில் தகட்டுகல்லை ஒரு கம்பு கொடுத்து சாய்வாக நிற்க வைத்து விடுவார்கள். அதில் ஒரு கம்பி கயிறு கட்டி அந்த கயிற்றில் ஒரு ஆட்டுக் குட்டியை கட்டி விடுவார்கள். புலி வந்தவுடன் ஆட்டுக்குட்டி மேல் பாய்ந்து கடிக்கும். அப்போது ஆட்டுக்குட்டியை கட்டியிருந்த கம்பி இழுபட்டு தகட்டுக்கல் அசைந்து புலியின் மேலே விழும். அப்படி மேலே விழுந்த உடன் புலி அகப்பட்டுக் கொள்ளும். உடனே புலி உடம்பு முழுதும் சங்கிலிபோட்டு பிணைத்து கட்டி இழுத்துச் சென்று காளி கோயிலில் தலை கீழாக தொங்கப் போடுவார்கள். தடி கொண்டு ஆளாளுக்கு அடிப்பார்கள். அப்படி அடித்து முடித்து கடைசி அடி விழுந்து அதற்கு உயிர் போகும் வரை புலியினுடைய உறுமல் ஓயவே ஓயாதாம். *"அதுபோலதான் மனிதனுடைய ஆணவமும், என்ன செய்தாலும் கடைசி வரை ஓயாது"* என்பது ஆண்டவர்கள் வாக்கு.



ஆதியே துணை

# தெய்வீக
# னிறைவிரி
# சோபனதிருவருள்
# னிகழ்வுகள்



...போதையா யிங்குள்ள தெல்லாம றந்துவுன்
பின்னாலேயே தொடர்ந்தேன்
பொற்கிண்ணத் தின்பாற்கஞ் ஞாவுங்கலந்நந்த
போதையென் றெதெரிந்தேன் ...

-ஞானமுறையீடு

## ஆண்டவர்கள் வாக்கியம்

அவதாரபுருஷர்களான மெய்ஞ்ஞான செம்மல்கள் ஒரு பிராணியை சந்நர்ப்ப சூழ்னிலே காரணமாக ஒரு அவசியம் வந்து அதனே வதை செய்யும் போது அது அந்த ஜீவனுக்கு காருண்யம் செய்ததாகத்தான் வரும். அவர்கள் அதற்கு சாலோகபதவி தரும் வல்லமை பெற்றவர்கள். ஆனுல் அந்த வல்லமையில்லாத மானிடர்கள் ஒரு பிராணியை வதைசெய்தால் அந்த பிராணிக்கு உயிர் விடும் போது ஏற்படும் கடைசி அவஸ்த்தையும் துன்ப னினேவும் அப்படி வதை செய்த மனிதனின் ஜீவனில் ஒட்டிக்கொள்ளும். அதனுல் அவன் பாப காரியமே செய்தான் என்று தான் தீர்ப்பு.

ஆனுல் ஆன்றோர் பெருமக்களாகிய ஜீவன் முத்தர்கள் அதனே சங்காரம் செய்யும்போது அந்த பிராணியின் ஜீவன் பிரியும்போது ஒரு இன்ப உலகனினேவு அதற்கு வந்து தன்னுலே அது பிரியும். இதனுல் அது பரலோக இன்ப வாழ்க்கையை அனுபவிக்கக் கூடிய ஒரே உலகமாகிய இந்த பூலோகத்தில் மனித பிறவி எடுக்கும் அருகதையை பெற்றுவிடுகிறது. இதனேயே சாலோக பதவி என்பர்.

புராணங்களில் இதனே னீ பார்க்கலாம். இது வேதத்தில் விளக்காத உண்மை என்று கூட னீ னினேத்துக் கொள்ளலாம். அப்படி அந்த மெய்ஞ்ஞான பெரியோர்கள் அதனே வதை செய்து சங்காரம் செய்யும் போது அது மனித பிறவி எடுத்துவிடுகிறது.

மீண்டும் விதி வசத்தால் அது இந்த மனித ஜென்மத்தில் பெரியோர்களே சந்தித்து ஒட்டிப்படிந்தால் மேலும் உயர்ந்து சாயுட்சபதவியை அடையும் னிலேக்கு கூட அது போகிறது. இப்படி ஒரு ஜீவனே இப்படி சாலோக சாயுட்ச பதவி அடைய செய்விக்கும் அந்த மெய்ஞ்ஞான செம்மல்களாகிய ஆன்றோர்களின் இந்த செயல்தான் உண்மையான ஜீவ காருண்ய செயல். மற்றதெல்லாம் தேக காருண்ய செயல்.

## அகில வல காட்சிகள் - இரண்டு ஞுகங்ஙள்

ஒரு சமயம் ஆண்டவர்களும், பாட்டையாவும் அகிலவலம் செல்லும்போது ஒரு சம்பவம் னடந்நது. ஒரு இடத்தில் ஒரு மனிதனை பின்னி கட்டி வைத்து இரு பக்கங்ஙளிலும் இரண்டு ஞுகங்ஙள் தொங்ஙிக் கொண்டிருந்நன. இப்படியே காலையிலிருந்நு மாலை வரை அவன் இருந்நிருக்கிறான். அகிலவலம் செல்லும் போது ஆண்டவர்களும் பாட்டையாவும் இந்ந மனிதனை பார்த்தார்கள். பாட்டையாவின் ஆலோசனைப் படியும், உத்திரவின்படியும், ஆண்டவர்கள் ஒரு மூங்ஙில் கம்பை எடுத்து இரண்டாகப் பிளந்நார்கள். ஒரு கம்பை கீழ்பாகத்திலும், இன்னொரு பாகத்தை மேல் பாகத்திலும் வைத்து பிளந்நிருந்ந இரண்டு மூங்ஙில் கம்புகளையும் ஒரே சமயத்தில் படீரென்றுவிட்டு அமுக்கி, இரண்டு ஞுகங்ஙளையும் கொன்று அந்ந மனிதனை காப்பாற்றினார்களாம்.

சாலோகம் தந்ந சாயுட்ச வேந்நர்

ஆண்டவர்கள் இளம் வயதில் வெளியூருக்கு னடந்நு சென்று கொண்டிருந்நார்கள். அப்படிச் சென்ற பொழுது ஒரு பாம்பை மிதித்து விட்டார்கள். தம் காலை சுற்றிக் கொண்டது பாம்புதான் என்று அவர்கள் தெரிந்நுக் கொண்டார்கள். ஆனால் பாம்பினை மிதித்திருக்கிறோம் என்று அவர்களுக்கு தெரிந்நும் பதட்டபடாமல் கீழே குனிந்நு மெல்ல காலில் சுற்றியிருந்ந உடல் பகுதியை எடுத்து விட்டார்கள். அப்பொழுது பாம்பு வாயை இலேசாக திறந்நது. உடனே அரிவாளை கொண்டு பாம்பின் வாயை பெரிதாக்கி பாம்பை இரண்டாக கிழித்து போட்டார்கள். இதே போன்று பால்ய வயதில் தம்மை கடிக்க வந்ந ஒரு உயர்ஜாதி வேட்டை ஞயின் வாய் தாடையை தம் இருகைகளால் கிழித்து போட்டு ஆபத்திலிருந்நு தப்பி இருக்கிறார்கள். இது பற்றி மான்மியத்திலும் குறிக்கப்பெற்றிருக்கிறது.

## தெய்வத்தின் இளையபருவத்தில் நிகழ்ந்தவை

ஆண்டவர்களுடைய தகப்பனார் மிகுந்த பயந்த சுபாவம் உடையவராம். மார்க்கம்பட்டியில் ஒரு தெருவில் ஒருசமயம் ஆண்டவர்களுடைய தகப்பனார் போய்க் கொண்டிருக்கும் போது இரண்டு பேர் தெருவில் வாய்ச்சண்டை போட்டுக் கொண்டி-ருப்பதை பார்த்தால் உடனே அந்த தெருவழியாக போகாமல், வேறொரு தெரு வழியாக வீட்டுக்கு சென்றுவிடுவாராம். அந்த அளவு பயந்த சுபாவமுடையவர். ஆனால் ஆண்டவர்கள் இளமையிலேயே மிகவும் தைரியசாலி. இளமையில் கீழ் குறிப்பிட்டுள்ள ஒரு சம்பவம் மார்க்கம்பட்டியில் நடந்தது. ஆண்டவர்களுக்கு அப்போது வயது 20 இருக்கும்..

ஆண்டவர்கள் ஒரு சமயம் மார்க்கம்பட்டியில் தெருவழியே சென்றுகொண்டிருந்தார்கள். அப்போது தெருவில் இரண்டு பேர் சண்டை போட்டுக் கொண்டிருந்தனர். ஆண்டவர்கள் அந்த சண்டையில் தலையிட்டு அந்த இருவரையும் விலக்கிவிட்டார்கள். ஆனால் சண்டை போட்ட இருவரில் ஒருவன் மட்டும் அடங்காது மற்றொருவரை முண்டிக்கொண்டுபோய் அடிக்கப்போனான். அப்பொழுது ஆண்டவர்கள் அவனை தடுத்து நிறுத்தி முறைத்து உற்றுப் பார்த்து ‘எங்கே இப்போது நீ... அடி பார்க்கலாம்?’ என்று சவால் விட்டு அவன் எதிரே குறுக்கே முன்னால் நின்றார்கள். அந்த பார்வையை பார்த்தவுடன் அவன் பயந்து தன்னால் அடங்கி நின்றான். பின்பு ஆண்டவர்கள் அந்த இருவரையும் பேசி சமாதானப் படுத்தி அனுப்பினார்கள். ஆண்டவர்கள் இளமையிலேயே வீரமுடையவர்களாக இருந்தார்கள் என்பதற்கு இச்சம்பவமும் ஒரு உதாரணமாகும்



## மெய்வழி னூலின் முதல் பாசுரம்

இது வரைக்கும் வந்த மகத்துக்களில் எத்தனையோ பேர்கள் ஞானம் அடைவதற்கு முன்னரே செய்யுள்களும், பாட்டும் இயற்றுவதில் வல்லவராக இருந்திருக்கிறார்கள். சமீபத்தில் தமிழ்னாட்டில் தோன்றிய வள்ளல் பெருமான் அவர்கள் ஞானம் அடைவதற்கு முன்பே ஐந்து திருமுறைகள் பாடியிருக்கிறார்கள். ஞானம் அடைந்த பின் பாடியது ஆறும் திருமுறையாகும். இரண்டிற்கும் வித்தியாசம் உள்ளது. ஆனால் னம் தெய்வமோ, பூரண னிலையை அடைந்த பின் தான் முதல் பாசுரத்தை இறக்கி யருளினார்கள்.

இப்படி அந்த பாடலை எழுதிய, அந்நக் காலத்தில் இராஜகெம்பீரத்தில் தங்ஙளிடம் இணக்கமாக இருந்த ஒரு முஸ்லிம் தமிழ் புலவரிடம் கொடுத்து இதில் இலக்கணப் பிழையில்லாமல் சுத்தமாக இருக்குதா என்று பாருங்ஙள் என்றார்களாம். அந்நப் பாசுரத்தைப் படித்துப் பார்த்த புலவர் மிகவும் வியப்புற்று. ''பாவா'' னீங்ஙள் எங்ஙளை ஏமாற்றுகிறீர்கள். னீங்ஙள் யார் என்று எங்ஙளுக்கு தெரியவில்லை. ஆனால் இதனை எழுதிய னீங்ஙள் மனிதரல்ல. தெய்வாம்சம் பொருந்நியவர்'' என்றாராம். ''*ஏனெனில் னீங்ஙள் எழுதியுள்ள இந்நச் செய்யுள் மனிதரால் பாடப் பெற்றது போல் தெரியவில்லை. னீங்ஙள் கட்டாயம் ஒரு மெய்ஞ்ஞானி தான். இதை எழுதிய தாங்ஙள் னிச்சயம் ஒரு தேவபுருஷர்தான்*'' என்றாராம். அவர் அவ்வாறு படித்து வியந்த பாசுரத்தை கீழே தருகிறோம்.

*விண்ணுமண்ணும் கதிர்மதியு மின்பனிதா ரகையும்*
*விளங்குவன மலைகளுடன் விரிந்நதலா சலங்ஙள்*
*எண்ணமடங் ஙாதசரா சரங்ஙளுயிர் யாவும்*
*இதுவிதுக்த மிப்படியென் றிருந்நரசா ளிறைவன்*
*என்னகமுன் திருப்பாத மிலங்குமப்பொதி மலையி*
*லிருந்தியெனைத் திருத்தித்தவ னிறுத்தியசற் தருவாய்*
*மண்ணடங்ஙாப் பாவியென்றன் மீதிலன்னு ளிரங்ஙி*
*மனந்நளிர மரபில்வந்ந மௌனதரு காப்பே!*

இந்த பாடலைபார்த்து மேலும் அந்நப் புலவர் மேலும்

*கூறியதாவது: "பாவா! இந்த உலகத்தில் எந்தப் புலவர்கள் பாடத் துவங்கினுலும் மங்களமான சொல் ஒன்றை வைத்து தான் துவங்குவார்கள். அது பூமியின் பொருட்களில் ஒன்றுக இருக்கும். ஆனுல் நீங்களோ "விண்ணும்" என்று துவங்கியிருக்கிறீர்கள். இது மிகவும் ஆச்சர்யமாக இருக்கிறது. இது மாதிரி துவங்க யாருக்கும் நினைவே வராது. மேலோராயிருந்நால் மட்டும் தான் முடியும்" என்ருராம்.*

தெய்வம் பூரண நிலை அடைந்த பிறகல்லவா இந்தப் பாசுரத்தை இறக்குகிருர்கள். அதனுல் அதில் சர்வமும் பொதிந்த மெய்நிலை நன்குபிரகாசித்து தெரியும் பாடலாக இருந்தது.

"தாம் இப் பூமிக்கு வந்த சுவடாவது இருக்க வேண்டும்" என்று நினைத்து இந்த பாசுரத்தை ஆண்டவர்கள் எழுதியாக ஒரு முறை சபையில் தெரிவித்தார்கள்.



## நமது மெய்வழிக் குல அதிபர் - இறை தெய்வ குரு மகான்மியரின் முன் அறியும் நிச விளைவு திருச்செயல்

இராஜகெம்பீரத்தில் ஆண்டவர்கள் இருக்கும் போது ஒரு சம்பவம் நடந்தது. ஒருவன் பனைமரத்தில் ஏறியிருந்தான். அப்பொழுது ஆண்டவர்கள் அந்த வழியாக வந்து கொண்டிருந்தார்கள். பனை மரத்தில் ஏறியிருந்த அவன் தவறி கீழே விழுந்து கொண்டிருந்தான். அவன் கீழே விழுவதை கண்ட ஆண்டவர்கள் அவன் விழுந்து தரையை தொடு முன்னர் அவனை அப்படியே கீழே விழாமல் காலால் பந்து போன்று தூக்கி உருட்டி விட்டார்கள். அவன் அப்படியே உருண்டு உருண்டு அருகிலிருந்த சகதியில் விழுந்தான். தொப்பென்று தரையில் விழாமல் உருண்டு உருண்டு தரையில் உருண்டதால்

அவனுக்கு அடிபடவில்லை. உடனே அவனை நோக்கி "ஆய்!" "ஊய்" என்று சத்தமிட்டு அவனை மிரளச்செய்தார்கள். அப்போது உடனே எதுவோ ஏதோ என்று பயந்து உடனே அவன் எழுந்துவிட்டான்.

உதைத்து சகதியில் உருண்டு விழச் செய்ததால் அவனது உடலில் எந்தவித காயமும் இல்லாமல் போயிற்று. அவனை உடனே சத்தமிட்டு மிரட்டியதால் அவனுக்கு விழுந்தோம் என்ற நினைவு கூட இல்லாமல் போயிற்று. இதிலிருந்து ஆண்டவர்களுடைய சமயோசிதமும் இரட்சக தன்மையும் எவ்வளவு திட்டத்துடன் ஒவ்வொரு செயலிலும் இருந்திருக்கிறது என்பதை நாம் காண்கிறோம்.



## வீரம் மலிந்த - பராக்கிரம தீர வல்லப செயல்கள்

திருப்பத்தூரில் ஆண்டவர்கள் தங்கி இருக்கும் போது அங்கிருந்த முஸ்லீம்கள் ஆண்டவர்களின் பிரசாரத்திற்கு ஊறு விளைவிக்க கலகம் செய்து ஆட்களை கூட்டிக்கொண்டு வேல் கம்பு அரிவாளுடன் ஆண்டவர்களை தாக்க ஆரவாரத்துடன் வந்தார்கள். ஆண்டவர்கள் அவர்களின் வரும், இரைச்சலை கேட்டு வீட்டின் வெளிமுகப்பிற்கு வந்தார்கள். அந்த கூட்டம் வருவதை பார்த்தார்கள். உடனே திரும்பி வீட்டிற்குள் சென்றால் வந்தவர்கள் தாம் பயந்து உள்ளே போவதாக இளப்பமாக நினைத்துவிடுவார்கள் என்ற எண்ணம் வந்தது. அதனால்

அப்படி செய்யாமல் பக்கத்தில் திண்ணையில் இருந்த வீட்டின் தூண் ஒன்றை வேகமாக பலம் கொண்டு அசைத்து பிடுங்கி வீர அபிமன்யு தேர் சக்கரத்தை சுழற்றியது போல எதிரில் நின்றவர்கள் மீது சுழற்றி வீசினார்கள். தூணை பிடுங்கியவுடன் தூண் தாங்கியிருந்த வீட்டு ஓடுகள் பொல பொல வென்று சரிந்து ஒரே இரைச்சலுடன் தமால் தமால் என்று விழுந்தது. அந்த ஓடுகள் கீழே விழுந்த போது எழுந்த பெரும் சத்தம் கூட்டமாக வந்தவர்களை கதிகலங்க செய்துவிட்டது. ஆண்டவர்களின் இந்த திடீர் பராக்கிரம மின்னல் போன்ற வேகமான அந்த செயலையும் ஓடுகள் சரிந்து விழுந்ததால் எழுந்த அந்த இடிபோன்ற சத்தத்தையும் கேட்டு கூட்டத்தினர் எல்லோரும் பயந்து திரும்பி ஓடினார்கள்.

அதன் பின் ஆண்டவர்களை தாக்க வந்தவர்கள், ஆண்டவர்கள் எந்த அடிதடிக்கும் அஞ்சுமாட்டார்கள் அவர்களை மிரட்டுவது இயலாத செயல் என்று தெரிந்து கொண்டதால் காவல் துறையினரிடம் ஓடிச்சென்று ஆண்டவர்கள் மீது பொய்யாக ஒரு பழி சுமத்தி ஒரு பிராது கொடுத்தார்கள். ஆனால் காவல் துறையினர் ஆண்டவர்களிடம் வந்து நடந்த உண்மைகளை தெரிந்து கொண்டு ஆண்டவர்களை தாக்க வந்தவர்களை கண்டித்து நடவடிக்கை எடுத்தார்கள்.



## உலக மக்கள் அதிசயிக்கும்படி தங்கள் திருக்கரத்தில் சன்னதம் தாங்கிய பெருமானுர்

தெய்வமவர்கள் ஊர் ஊராக பிள்ளைகளை தேடி பிரச்சாரம் செய்து கொண்டிருந்த காலத்தில் ஒரு நாள் னன்பகல் சூரிய வெப்பம் தாங்க முடியாமல் ஒரு பெரிய மாளிகையின் விசாலமான ஒரு திண்ணையில் ஓய்வெடுக்க அமர்ந்தார்களாம்.

அப்படி அமர்ந்து அனந்த சயனமாக படுத்து கண்களை மூடிக்கொண்டிருந்த போது ஒரு கையை தம் தலைமீது தாங்கலாகவும் மற்றொரு கையை தங்கள் உடல் மீதும் வைத்து இருகண்களை மூடி படுத்திருந்தார்களாம். அப்போது அங்கு வந்த மாளிகை உரிமையாளர் ஆண்டவர்கள் அருகில் வந்த உடன் அண்டவர்கள் திருக்கரத்தில் உள்ளங்கையில் இருந்த சூலாயித தேவ சன்னதம் அந்த பகல் வெளிச்சத்தில் பளிச்சென அவர் கண்ணுக்கு னன்கு தெரிந்ததாம்.

இது போன்ற சூலாயிதம் போன்ற தேவ சன்னதங்கள் சர்வேஸ்வரனுக்கு மட்டும் தான் இருக்கும் என்று ஏற்கெனவே அந்த வீட்டுக்காரர் தெரிந்திருந்திருக்கிறார். ஆகையால் அதைப்பார்த்து அசந்து தெய்வத்தின் கால்களை தொட்டு வ்ணங்கிவிட்டு எல்லோரையும் அழைக்க சத்தமிட்டு உள்ளே ஓடினாராம்.

ஆனால் தெய்வம் அதற்குள் இந்த சன்னதத்தை யாருக்கும் காண்பிக்க விரும்பாமல் அந்த இடத்தை விட்டு உடனே சென்று விட்டார்களாம்.



## ஞானம்பெற முடியாத படோடப ஆன்மீக மடத்தில் அடைபட்டுக் கிடக்கும் ஜீவன்கள்

ஒரு பெரிய மடாலயம் ஒன்று தமிழகத்தில் உள்ளது. அந்த மடாலயத்திற்கு ஏராளமான சொத்துக்கள். ஏராளமான மாணுக்கர்கள். ஏகமான பணியாளர்கள், மேனேஜர், நிர்வாகிகள் என்ற பலர் இருந்தனர். ஜனங்களும் நாள்தோறும் போவோரும் வருவோருமாக இருப்பார்கள். அந்த மடத்து தலைவரான ஆச்சாரியார் நன்கு வேதங்களை ஒதி கற்றவர். பல மெய்ஞ்ஞான பாடங்களை உருபோட்டவர். மிகவும் ஐதீகமானவர். அவருக்கு மடத்தில் ஏராளமான பேர் மாணுக்கர்களாக தமிழகமெங்கும் இருந்தனர். அந்த வேதபாட சாலையில் வேதங்கள் பயின்ற ஒரு மாணவர் இருந்தார். அவருடைய அதிர்ஷ்டத்தாலும், விதிவசத்தாலும் நமது தெய்வமவர்களை சந்தித்து அறிந்து உணர்ந்து தெய்வத்திடம் உபதேசம் பெற்று தெய்வப் பிள்ளையாக ஆகினர். பிறகு அவர் ஒரு சமயம் தமது பழைய மடாலய ஆச்சாரியரை சந்தித்தபோது அந்த ஆச்சாரியாரிடம் தெய்வம் அவர்கள் அவதாரத்தை பற்றி எடுத்துரைத்தார். நம் படிப்பது எல்லாம் வெறும் ஏட்டு படிப்புதான். மெய்வழி ஆண்டவர்கள் அசலான மெய்ஞ்-ஞானத்தை செயலாக எப்படி எல்லாம் உபதேசிக்கிறார்கள் என்பதை தெரிவித்து நமது தெய்வத்தின் எமனை மிகைத்து மக்களை பரமபதத்திற்கு ஏற்றும் தவச் செயலை விபரமாக கூறி ஆண்டவர்களின் பெருமையை அவர் உணரும்படி செய்தார்.

அதனால் அந்த மடத்து ஆச்சாரியார் நமது தெய்வம் அவர்களை சந்தித்து அவர்கள் திருவடிகளை பற்றி தாமும் வணங்க வேண்டும் என்று தமது பழைய மாணுக்கரும் இப்போது தெய்வப்பிள்ளையாக உள்ள இவரிடம் மன்றாடினர். அவர்

தலைவராக உள்ள அந்த மடம் மிகவும் கட்டுக்காவல் உள்ள மடம். ஆச்சாரியாரை அப்படி இப்படி நகர விடமாட்டார்கள். அவரை எந்த நேரமும் கண்காணிப்பார்கள். அவர் யாரையேனும் தனித்து சந்தித்து பேச வேண்டும் என்று கனவிலும் நினைக்க முடியாது. ஆனால் அந்த ஆச்சாரியார் எப்படியாவது தெய்வத்தை சந்திக்க ஏற்பாடு செய்யும்படி தெய்வப்பிள்ளையுடன் மன்றாடினார்.

ஒரு சமயம் தெய்வமவர்கள் அந்த மடத்துக்கு அருகில் இருந்த ஒரு ஊர் சாலையில் ஒரு சமுதாய நிலையத்தில் வந்து தங்கி பிள்ளைகளுக்கு தரிசனம் தந்து கொண்டிருந்தார்கள். இதனால் இந்த மாணக்கர் இந்த ஆச்சாரியர் தெய்வத்தை சந்தித்து கண்டு வணங்க ஒரு திட்டம் தீட்ட சமயம் வாய்த்தது. இதனை மடத்து ஆச்சாரியருக்கு தெரிவித்து ஒரு வேலையாக அடுத்து ஊருக்கு செல்வதாக சொல்லி புறப்பட்டுவந்து வழியில் அந்த சமுதாய நிலையம் அருகில் வரும்போது இறங்கி நிலையத்திற்கு ஓடிவந்து தெய்வமவர்கள் திருவடிகளை பற்றி வணங்கி தம்மை எமனிடம் இருந்து காக்க வேண்டும்படி ஒரு திட்டத்தை அவருக்கு சொல்லியிருந்தார்.

அந்த ஆச்சாரியாரும் அந்த திட்டப்படியே அடுத்த ஊருக்கு செல்ல ஒரு திட்டம் வகுத்து புறப்பட்டார். பல்லக்கில் அவரை அமரச் செய்து அடுத்த ஊருக்கு ஆச்சாரியாரை அழைத்து வந்தார்கள். சுற்றி பணியாட்கள், மேனேஜர், நிர்வாகிகள் புடை சூழ பல்லக்குவந்தது. தெய்வம் தங்கியிருந்த சமுதாய நிலையம் வந்ததும் ஆச்சாரியார் எப்படியாவது தெய்வமவர்களை சந்தித்து விட வேண்டும் என்று திட்டமிட்டு பல்லக்கை நிறுத்தச் சொல்லி பல்லக்கில் இருந்து கீழே இறங்கினார்.

இறங்கிய உடன் தம்மை யாரேனும் தடுப்பதற்குள் தெய்வமவர்களை சந்திக்க நிலையத்திற்குள் நுழைந்துவிட திட்டமிட்டு வேகமாக செல்ல திரும்பி இரண்டு எட்டு எடுத்து அடி வைத்தார். அவ்வளவுதான். அங்கு சுற்றியிருந்த பணியாட்களும், மேனேஜர், நிர்வாகிகளும் உடனே உஷாராயினர். அந்த ஆச்சாரியாரை நாள் முழுதும் கண்காணித்து கொண்டேயிருக்கும் அவர்களுக்கு ஆச்சாரியாருடைய திட்டம் தெரிந்துவிட்டது.

அவர் ஓடிப்போய் தெய்வம் அவர்கள் காலடியில் விழுந்து விட்டால் தமது மடத்துக்கு பெரிய அபகீர்த்தியும் அவமானமும் ஆகிவிடும் என்று ஒருவருக்கொருவர் ஏற்கெனவே பேசிக்கொண்டிருந்தவர்கள் ஆகையால் உடனே சமிக்ஞையில் ஒரு திட்டமிட்டு ஆச்சாரியார் அருகே ஓடிச் சென்று ஆச்சாரியரை மடக்கி தூக்கி ஆளாக்காக பல்லக்கில் போட்டு "அரகரா" "அரகரா" "சிவ சிவா" "ராம் ராம்" என்று கத்திக் கூவி பல்லக்கு சுமப்பவர்களை திபுதிபுவென்று வேகமாக ஓடச் சொல்லி அந்த இடத்தை விட்டு உடனே அகலச் செய்துவிட்டார்கள்.

தெய்வமவர்களுக்கு இந்தச் செய்தி தெரிவிக்கப்பெற்றது. மிக்க வருத்தமுற்றார்கள்.

பெருமை, பணம், பதவி, புகழ் பார்க்காமல் தம்மை சந்திக்க விரும்பிய ஒரு நல்ல உள்ளத்திற்கு எந்த வாய்ப்பும் தரப்படாமல் ஒரு கைதி போல் வைக்கப்பட்டிருக்கும் அந்த மடாலய ஆச்சாரியாரின் நிலையை நினைத்து வருந்தினார்கள். தம்மை எப்படியாவது அவர் சந்தித்து விட்டிருந்தால் எல்லாம் அவருக்கு கிடைத்திருக்குமே என்று அருளினார்கள்.



திருப்பத்தூரில் சபா மண்டபம் கட்டிக்கொண்டி-ருந்நார்கள். சபா மண்டபம் கட்டிக் கொண்டிருக்கும் போது கட்டிடத்தில் மேலிருந்து ஒரு பெரிய கல் விழுந்நது. அந்ந விழப்போகும் கல்லுக்கு னேர்கீழே ஒருவன் னின்று கொண்டிருந்நான். கல் விழப் போவதை கவனித்தவுடன் மின்னல் வேகமாக ஆண்டவர்கள் கீழே னின்று கொண்டிருந்நவனே வேகமாக காலால் எட்டி உதைத்து அப்பால் தள்ளி விட்டார்கள். அவன் தள்ளிப் போய் விழுவதற்கும் அவன் இருந்ந இடத்தில் சரியாக கீழே கல் விழுவதற்கும் சரியாக இருந்நது. ஒரு னொடி னேரம் தாமதமாக இருந்நால் கூட கீழே னின்றவன் மேல்கல்விழுந்து இறந்நுபோயிருப்பான். ஆண்டவர்களின் சமயோசித செயலினுலும் பேரிரக்கத்தினுலும் இவன் உயிர் காப்பாற்றப் பெற்றது.



## ஆண்டவர்கள் மறந்நாலும் அவர்களே பின் தொடர்ந்நு சேர்ந்நிடும் உரிமைப் பொருள்கள்.

ஆண்டவர்கள் இராஜ கெம்பீரத்தில் இருந்நபோது வெளியூர் சென்று விட்டு மானுமதுரை புகைவண்டி னிலேயத்தில் வந்நு இறங்ஙினுர்கள். ஆண்டவர்களிடம் வெள்ளி பூண் போட்ட ஒரு பிரம்பு இருந்நது. அந்நப் பிரம்பை ரயில் வண்டியில் வைத்து விட்டு ஆண்டவர்கள் இறங்ஙிவிட்டார்கள். சிறிது னேரம் கழித்து ரயில் வண்டியில் போய் பார்த்தபோது அந்நப் பிரம்பைக் காணவில்லே. அங்ஙு ரயில் வண்டியில் பிரயாணம் செய்த ஒருவன் அந்ந பிரம்பை எடுத்துச் சென்று விட்டான். அவன் பொள்ளாச்சியிலுள்ள ஒரு பண்ணேயார் வீட்டில் வேலே செய்பவன் ஆவான். அந்ந வேலேயாள் பொள்ளாச்சி சென்றதும் ஆண்டவர்களின்

பிரம்பைப் பண்ணையாரிடம் பத்து ரூபாய்க்கு விற்றுவிட்டான். அந்த பண்ணையார் ஆண்டவர்களின் பிரம்பை பத்தாண்டுகள் வைத்திருந்தார்.

பண்ணையாரின் கூடப் பிறந்த தங்கையின் மகனுக்கு குன்னக்குடி முருகன் கோயிலில் மொட்டை போட நேத்திக் கடன் இருந்தது. நேத்திக் கடனை நிறைவேற்றுவதற்காக பண்ணையாரும் அவரது குடும்பத்தினரும் மற்றும் தங்கையின் குடும்பத்தாரும் வண்டிகள் கட்டிக் கொண்டு குன்னக்குடிக்குச் சென்றனர். போகும் வழியில் வண்டிகளை இராஜகெம்பீரத்தில் நிறுத்தி ஓய்வெடுத்துக் கொண்டிருந்தனர். வண்டியில் வந்த பண்ணையார் தன் கையில் ஆண்டவர்களின் பிரம்புடன் உட்கார்ந்திருப்பதை தற்செயலாக அப்பொழுது பார்த்த சீடர்கள் ஆண்டவர்களை தரிசிக்க அவரை அழைத்து வந்தார்கள். அப்போது பிரம்புடன் பண்ணையாரை பார்த்த ஆண்டவர்கள் ''இந்த பிரம்பு உங்களுக்கு ஏது?'' என்று கேட்டார்கள். பண்ணையார் தன்னுடைய வேலையாள் பத்து ரூபாய்க்கு கொடுத்த விபரத்தை சொன்னார்.

பண்ணையார் அந்த பிரம்பு ஆண்டவர்களுடையது என்பதையும் அது தொலைந்த விபரத்தையும் தெரிந்து கொண்டார். அப்போதே அப்பிரம்பை ஆண்டவர்களிடம் சமர்ப்பித்து விட்டார். ஆனால் ஆண்டவர்கள் அந்த பிரம்புக்குரிய பணத்தை பண்ணையாருக்கு கொடுத்து விட்டார்கள். ஆண்டவர்கள் விருப்பப்படியே பண்ணையாரும் பணத்தைப் பெற்றுக் கொண்டார். இப்படியாக ஆண்டவர்களின் சொத்தானது ஒரு கை பிரம்பானாலும் பத்தாண்டுகள் கழித்தும் ஆண்டவர்களிடமே வந்து சேர்ந்தது. ஆண்டவர்களின் உரிமைப் பொருள் எங்கே போனாலும் அது அவர்களிடமே திரும்பி வந்துவிடும் என்று தீர்க்கதரிசனங்கள் கூறுகிறது.



## வைரக்கல் திரும்ப வந்தது

சாலையம்பதியில் ஆண்டவர்கள் கம்மாய்க் கரையில் பிறவியர்களுடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்நார்கள். அப்பொழுது ஆண்டவர்கள் திருக்கரத்தில் அணிந்திருந்த வைர மோதிரத்திலிருந்து' ஒரு கல் கீழே விழுந்துவிட்டது. ஆண்டவர்கள் கம்மாய்க் கரையிலிருந்து எழுந்து சென்று விட்டார்கள். ஒரு பிறவியர் கீழே விழுந்து வைரக் கல்லை தற்செயலாக கண்டெடுத்து ஆண்டவர்களிடம் எடுத்துவந்து கொடுத்தார். வைரக் கல்லாக இருந்நாலும் அந்த ஏலேலம் செட்டிச் சொத்து எங்ஙே சென்றாலும் ஆண்டவர்களிடமே அது திரும்பி வந்துசேரும்.



## கலியுக கபால மோர்ட்சம்

ஆதிமெய் உதய பூரண வேதாந்தத்தில் 'ஞான முறையீடு' என்ற பாடலில் கிழ்கண்ட வரிகள் உள்ளன.

*ஓங்கா ரத்தொனி யானக பாலத் தேசிறு வழியறியார்*
*ஆங்கா ரங்கொண் டேமணி யாட்டி யலுத்தோ டிச்சலித்துச்*
*சாங்கா லம்தலை யோட்டை யுடைக்கும் சண்டியர்களைவிட்டே*
*பாங்கா யிரையே உம்மிடம் காவற்பாடது தேடுகின்றேன்.*

என்று வேதத்தில் பாடல் வரிகள் வருகின்றன.

இந்த பாடலின் பின்னால் ஒரு வரலாறு இருக்கிறது. இராஜகெம்பீரத்தில் ஆண்டவர்கள் மிகவும் சாதாரணமாக யாதொரு துணையுமின்றி மெய்ஞ்ஞானத்தை னடத்தி வந்நார்கள். இராஜகெம்பீரத்திற்கு வடக்கே மதுரைக்குப் போகும் சாலையில் முத்தனேந்நல் என்று ஒரு கிராமம் இருக்கிறது. அங்கு ஒரு

மடத்தில் சாமியார் ஒருவர் இருந்நார். சாமியார் இறந்து போய்விட்டார். சாமியாருக்கு கபால மோட்சம் கொடுக்க போவதாக சொல்லி சாமியாரின் பிணத்தை புதைகுழியில் இறக்கி உப்பு, பச்சை கற்பூரம் முதலியவற்றை கழுத்து வரை போட்டு ஒரு மூட்டை னிறைய தேங்ஙாயை எடுத்து வந்து அவர் தலைய்யில் போட்டு உடைத்தார்கள். சாக்கிலிருந்ந தேங்ஙாய் எல்லாம் தீர்ந்து போய்விட்டது. ஆனாலும் சாமியாரின் மண்டை உடைந்து கபாலம் திறக்கவில்லை.

பின்பு எல்லோரையும் அரகரா, சிவசிவா என்று மேலே பார்க்க சொல்லிவிட்டு, தேங்ஙாயை உடைக்கிற மாதிரி அந்ந மடத்து ஆசாமிகள் ஒரு கடப்பாறையைக் கொண்டு மண்டையில் அடிக்க சாமியாரின் மண்டை உடைந்நது. உடனே கடப்பாறையை மறைத்துவிட்டு கபால மோட்சம் ஆயிற்று என்று சொல்லி கோஷமிட்டு எல்லோரும் சந்நோஷம் அடைந்நார்கள். கடப்பாறையால் சாமியாரின் மண்டையை உடைத்த செயல் கூடியிருந்நவர்களுக்கு தெரியாமலே லாவகமாக அப்படி செய்தார்கள். இந்ந தகவலை தெய்வம் அவர்கள் கேள்விபட்டு மிக்க வேதனை அடைந்நார்கள். மண்டையில் தேங்ஙாயை உடைத்ததே கொடுஞ்செயல். மேலும் ஆயுதம் கொண்டு கபால மோட்சம் என்று சொல்லி மண்டையை உடைத்தது அதைவிட கொடுஞ்செயல் அல்லவா? என்று கூறி மனம் துடித்துப் போனார்கள். ஏனெனில் ஒருவர் இறந்துவிட்டாலும் உடம்பில் உள்ள அணுக்கோடிகளெல்லாம் சாவதற்கு னேரமாகுமாம். ஆகவே இந்ந செயலை உயிரோடு இருக்கிறவனை மண்டையில் கடப்பாறையால் அடித்தால் எப்படி இருக்குமோ அப்படியே இருக்கும் என்று ஆண்டவர்கள் விரித்துரைத்தார்கள்.



## தெய்வீக நிறைவிரி அதிகாரண காரிய சரிதங்கள்

மெய்வழி திருனேத்திர அனந்நர் அறனிலையத்துறையின் பிரதம அதிகாரியாக இருந்நவர். ஒரு முறை அவர் ஆழ்வார் திருனகரில் உள்ள திருப்புளி ஆழ்வார் திருக்கோயில் ஸ்தலத்தை தெய்வமவர்கள் வந்நு பார்க்க வேண்டும் என்று விரும்பி ஆண்டவர்களிடம் விண்ணப்பித்தார். அதன் பேரில் தெய்மவர்கள் தம்பிகளையும் தமது பிரதம காரியதரிசிகளையும் அழைத்துக்-கொண்டு அங்நு சென்றார்கள்.

• போகும் போது அவ்வூர் வருமுன் திருனேத்திர அனந்நர் பலவாறு யோசனை செய்து கொண்டு வந்நார். கோயிலை பார்வையிட அந்ந கோயில் னிர்வாகிகளும் அர்ச்சகர்களும் தெய்வம் அவர்களை யார் என்று தெரியாமலும் என்ன சத்திவாய்ந்நவர்கள் என்று புரியாமலும் அல்லது வேறு ஏதோ காரணமாகவோ. தடுத்துவிட்டால் என்ன செய்வது? ஞம் இதை எப்படி சமாளிப்பது என்றுபலவாறு யோசனையுடன் கூடவே வந்நு கொண்டிருந்நார். இது பழைய ஐதீகமான கோயில் ஆச்சே. னடை உடை என்று ஏதோ காரணம் கூறி தெய்வம் அவர்களுக்கு உள்ளே நுழைய ஏதேனும் பிரச்சனையை கொடுத்து விடுவார்களோ என்று பயந்நு இருந்நார்.

ஆனால் எல்லாம் அறிந்ந வல்லாள கண்டரான னமது பிரான் இவருக்கு எந்ந பிரச்சனையையும் வைக்க வில்லை. ஓர் ஆற்றங்கரை வந்நவுடன் ஆண்டவர்கள் வேனை னிறுத்தி அனைவரையும் முகம் கழுவி களைப்பார செய்து டிரைவர் அனிபாவிற்கு ராமசாமி என்று பெயர் வைத்து அழைத்து சின்ன தம்பிக்கும், பெரிய தம்பிக்கும், அந்ந கோயிலின் அனுஷ்டான உடை அணியச்செய்து - புதிய பெயர்களை இட்டு அழைத்தார்கள். அந்நகோயிலின் புராதான வழக்கப்படி வேட்டியையும் கட்டச்செய்து பக்திபரவச அடியார்கள் போல் அனைவரையும் ஆக்கிக் கொண்டு திருக்கோயிலுக்கு வந்நு னின்றார்கள். ஆண்டவர்களின் இந்ந னடவடிக்கைகள் திருனேத்திர அனந்நருக்கு ஒன்றும் புரியவில்லை. எப்படி இவையெல்லாம் இவர்களுக்கு தெரிகிறது என்று ஆச்சரிய கடலில் மூழ்கி எதுவும் சொல்ல ஞ எழாமல் அவர்களுடன் கோயிலுக்கு அமைதியாக உடன் வந்நார்.

அன்று என்று பார்த்து தலைமை பிராதான அர்ச்சகரே ஆண்டவர்களை வரவேற்க வந்து நிற்பது போல் ஜரிகை வேஷ்டி கட்டி கொண்டு வந்து நின்று ஆண்டவர்களை வரவேற்றார். இது ஏதேச்சையான செயலாக இருந்நாலும் ஏதோ சொல்லி வைத்தது போல் நடக்கிறதே என்று ஆச்சரியப்பட்டு திருநேத்திர அனந்நர் வியந்து நிற்க தலைமை பிரதான அர்ச்சகர் மேலும் 'தெய்வமவர்களை பார்த்து மிகவும்மரியாதையுடன் "உங்களுக்காகத்தான் இது நேரம்வரை காத்திருக்கிறோம்" என்று ஆண்டவர்களிடம் தாழ்ந்து பணிவாக சொல்லிக் கொண்டு உள்ளே அழைத்து சென்றார்.

ஆண்டவர்களும் அந்த திருக்கோயிலுக்கு மிகவும் பரிட்சயம் ஆனவர்களைப் போல உள்ளே வந்நதுமல்லாமல் அர்ச்சகர்களை பார்த்து "இந்த கலசம் வேறு இடத்தில் உள்ளதே... இது இந்த சன்னிதானம் கிழக்கே இன்ன காரணத்துக்காக இருக்கவேண்டுமே... இது எப்படி மாறிற்று..." என்றும் விரிவாகபேசி "இந்த பிரதானவாயில் கோபுரம் இதற்காக ஆயிற்றே... முன்பு இப்படி இதற்காகதானே இந்த பெயர் வந்தது" என்றும்.... அப்படியே அதனதன் வரலாற்றை கூறியதுடன் அந்த கோயிலில் இருக்கும் ஒவ்வொன்றை பற்றியும் அந்த அர்ச்சகருக்கே விளக்கி கொண்டு வந்நார்களாம்.

கோவில் அர்ச்சகர்களும் ஆண்டவர்கள் கூறியதை அப்படியே அங்கீகரித்து மிக்க கௌரவமும் பூரண மரியாதையும் செய்து அதன் பிறகு அனுப்பி வைத்தார்களாம். திரும்பி வேனுக்கு வந்து அதில் அனைவரும் ஏறும் போது திருநேத்திர அனந்நர் ஆண்டவர்கள் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி நின்றார்.

தங்கள் பெருமையை நான் குறைவாக எடை போட்டு விட்டேன். ஏதேதோ நானே யோசித்துக் கொண்டேன். அப்படி நினைத்தது எவ்வளவு பெரிய தவறு என்று இப்போது உணர்கிறேன் என்று வருந்தி கூறி கலங்கி நின்றார். தெய்வம் அவர்கள் இன்னகையுடன் அவரை சமாதானம் செய்து அனைவரையும் அழைத்து கொண்டு திரும்பினார்கள்.

## சதியை வென்ற வேதியர்க்கரசர்

1937- அப்போது ராஜகம்பீரத்திலும். திருப்பத்தூரிலும் ஆண்டவர்களின் ஆசிரமங்கள் அமைந்திருந்தன. அவைகள் அப்போது மிக சிறிதானாலும் மிக்க புகழ் உடையதாக இருந்தது. அதனால் பொறாமை கொண்டு மெய்வழிக்கு விரோதமான அங்கிருந்த சிலர் கண்டபடி ஆசிரமத்தை பற்றி தவறாக சித்தரித்து மாகாண அரசினருக்கு இந்த ஆசிரமம் ஒரு தீவிரவாதிகள் கூட்டம் என்றும் வன்முறையாளர்களின் கூடாரம் என்றும் இங்கு குண்டு வெடிகுண்டுகள் தயாரிக்கிறார்கள் என்றும் பலவாறு அப்படி இப்படி என்று தகவல் தந்தது மட்டுமல்லாது அவதூறாகவும் ஒரு மொட்டை கடிதம் ஒன்றை எழுதி அரசுக்கு அனுப்பி இருந்தார்கள்.

அப்போது பிரிட்டிஷ் அரசு இந்தியாவில் நடந்து கொண்டிருந்தாலும் அது மாகாணத்தில் சட்ட சபை தேர்தல்களை நடத்தி மாகாண ஆட்சியை வென்றவர்களிடம் ஒப்படைக்கப் பட்டிருந்த ஒரு நேரம். சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் காரர்கள் வென்று ஆட்சியை கைப்பற்றி செல்வாக்குடன் அரசு ஆட்சி நடத்திக் கொண்டிருந்தார்கள்.

அதாவது டெல்லியில் பிரிட்டிஷ் அரசு நடந்து கொண்டிருந்தாலும் மாகாணத்தில் காங்கிரஸ் ஆட்சி நடந்து கொண்டிருந்தது. காங்கிரஸ்காரர்கள் என்றால் நாட்டில் அப்போது மிக்கசெல்வாக்கு. தமிழ் நாட்டிலும் காங்கிரசுக்கும் வன்முறைக்கும் வெகுதூரம் என்றாலும் பல வன்முறை இயக்கங்களை அவர்கள் ஆட்சிக்கு வந்திருந்ததால் அடக்க வேண்டியிருந்தது. பல வன்முறை நக்சலைட்டுகள் மீதும் பல தீவிரவாத இயக்கங்கள் மீதும் கம்யூனிஸ்டுகள் மீதும் பல நடவடிக்கைகளை பலமாக அந்த காங்கிரஸ் அரசு அப்போது எடுத்துக் கொண்டிருந்தது.

மேலே குறிப்பிட்ட அந்த மொட்டை கடிதத்தின் மூலமாக மெய்வழி ஆசிரமும் ஒரு தீவிரவாத கும்பல் என்று முத்திரை-யிடப்பட்டு இந்த ஆசிரமத்தை தீவிரமாக விசாரிக்க காங்கிரஸ் அரசு முடிவு செய்தது. இந்த ஆசிரமத்தின் நடவடிக்கைகளை கண்காணிக்க ஒரு CID குழுவை நியமித்ததுடன் ஆசிரமத்தை ரைடிங் செய்யவும் அந்த காங்கிரஸ் அரசு ஏற்பாடு செய்தது. இந்த தகவல் எப்படியோ வல்லாள கண்டரான நமது தெய்வத்திற்கு

தெரிந்துவிட்டது. ஒரே இரவில் ஆசிரமத்தில் மாற்றங்கள் செய்து காங்கரசாரின் சபர்மதி ஆசிரமம் போல மெய்வழி ஆசிரமத்தை இரவோடு இரவாக மாற்றி விட்டார்கள். ஆங்காங்கு கதர் துணியும் ராட்டையும் கதர் கொடியும் இடம் பெறச் செய்து எங்கும் ஆசிரமம் முழுதும் காங்கிரஸ் மயமாக்கி வைத்துவிட்டார்கள்.

கண்காணிக்க மெய்வழி ஆசிரமத்திற்கு மறுனாள் வந்த CID -குழுவினர் ஆண்டவர்கள் ஆசிரமத்தை பார்த்ததும் இதுஏதோ காங்கிரசார் ஆசிரமம் போலிருக்கிறதே இங்கு தவருக வந்து விட்டோமே என்று வந்து பார்த்ததும்பயந்து அச்சமடைந்து திரும்பிவிட்டனர். இந்த ஆண்டவர்கள் பெரிய காங்கிரஸ்காரர் போலிருக்கிறது. பெரிய காங்கிரஸ் ஆசிரமமாக் இதை வைத்து னடத்துகிருர். இங்குபோய் னும் துப்பறிய வந்து விட்டோமே என்று னினைத்து எதையும் விசாரிக்காமல் கண்டு கொள்ளாமல் அப்படியே உடனடியாக திரும்பி விட்டார்கள். ஏதோ தவருக வந்த ஒரு மொட்டை கடிதத்தை னம்பி இந்த பெரிய காங்கிரஸ் ஆசிரமத்திற்கு தவருக ரைடிங் செய்ய சென்று விட்டோம் என்பதனை அரசிடம் தெரிவித்தனர். னடந்ததை கூறி னல்லபடி ஆசிரமத்தை வர்ணித்து அப்படியே CID குழு ரிப்போர்ட் தந்துவிட்டது. இதனுல் காங்கிரஸ் அரசுக்கு இது தீவரவாத ஆசிரமம் அல்ல என்று உறுதியாக தெரிந்தவுடன் அமைதியாகிவிட்டது.

இப்படி அன்று வந்த அந்த ஆபத்தை உத்தியுடன் எல்லாம் வல்ல னமது ஆண்டவர்கள் தவிர்த்து அனுப்பி விட்டார்கள். CID குழு அரசுக்கு னல்லபடி இந்த ஆசிரமத்தை பற்றி ரிப்போர்ட் கொடுத்து விட்டதால் இந்த ஆசிரமத்தை கண்காணிக்க சொன்ன அனைத்து அதிகாரிகளையும் காவல்துறையினரையும் காங்கிரஸ் அரசு வன்மையாக கண்டித்தது. அரசு அதிகாரிகளுக்கு இதற்கு பதில் சொல்ல போதும் போதும் என்று ஆகிவிட்டதாம்.



## நம்மை ஆட்கொண்ட அருந்துணை தெய்வத்தை கவர்ந்த நமது ஜீவப் பிறவியர்கள்

மெய்வழி கயிலை அனந்தர் திருச்சியில் மிகப் பிரபலமான வக்கீலாக இருந்தவர். முதன் முதலில் ஆண்டவர்களை சந்திக்க மதுரை பழஞ்சாலைக்கு வந்திருந்தார். கட்டிடவேலை நடந்து கொண்டிருந்ததால் பழஞ்சாலை பொன்னரங்க தேவாலயத்திற்கு முன்பாக கொட்டப்பட்டிருந்த ஆற்று மணல்மேல் உட்கார்ந்து கொண்டு வந்த அவருடன் அப்படியே ஆண்டவர்கள் கீழ்கண்டவாறு உரையாடினார்கள்.

ஆண்டவர்கள் கயிலை அனந்தரைப் பார்த்து "எனக்கு ஒரு சந்தேகம். அதை உங்களுக்குச் சொல்லுகிறேன் நீங்கள் தான் வக்கீல் ஆயிற்றே எம் சந்தேகத்தை தீர்த்து வையுங்கள். தெய்வம் என்று வணங்குகிறோமே அதை யார் செய்தது? " என்று கேட்டார்கள். அதற்கு அவர் "நாம் தான் செய்தோம்' என்றார். "சரி அந்த தெய்வத்துக்குவேண்டிய கோயில்கள் எல்லாம் யார் செய்தது?" என்று கேட்டார்கள். அதற்கும் அவர் "அதுவும் நாம் தான் என்றார்." அதற்கு தெய்வம் அவர்கள் "இப்படி நாம் உண்டாக்கிய தெய்வம் போய் நமக்கு ஏதாவது செய்யமுடியுமா?" என்று கேட்டார்கள். அவரால் பதில் எதுவும் சொல்ல முடியாமல் அமைதியாக இருந்தார். ஆண்டவர்கள், "சரி" உம்மை உண்டாக்கிய ஒன்று இருக்குமே! அந்த தெய்வத்தை வணங்குவது எப்போது?" என்று கேட்டார்கள்.

இந்த வாக்கியத்தை கேட்ட உடனேயே மெய்வழி கயிலை அனந்தர் எழுந்து நின்றார். சபையில் சேர்த்துக் கொள்ளும்படி ஆண்டவர்களிடம் விண்ணப்பம் செய்தார். அதற்கு ஆண்டவர்கள் "ஏன் இன்னும் நீங்கள் என்னுடைய சந்தேகத்தை தீர்க்கவில்லையே! அதற்குள் அவசரப்-படுகிறீர்களே?" என்றார்கள். அதற்கு மெய்வழி கயிலை அனந்தர்

"என்னை உண்டாக்கிய தெய்வத்தை நான் தேடி கொண்டிருந்தேன். அதை இப்போது னேரிலேயே கண்டு விட்டேன். இன்னும் தாமதிக்க எதுவும் இல்லை. அதனால்தான் என்னை உங்களிடம் சேர்த்துக் கொள்ள விண்ணப்பிக்கிறேன்" என்றார். தெய்வம் அவர்கள் சிரித்துக்கொண்டே "சேருவது இருக்கட்டும் முதலில் இதைப் பிடி" என்று னிர்வாக சபையின் சாவிக்கொத்தை எடுத்து மெய்வழி கயிலை அனந்நரிடம் கொடுத்தார்கள். "இந்த சபையையே னீ வைத்துக்கொள்" என்று கூறி அவர்கையில் கொடுத்துவிட்டார்கள். அவர் தெய்வப் பிள்ளையாகுவதற்கு விண்ணப்பிக்கும் போதே அவர் தம்முடைய சபைக்கு எதிர்காலத்தில் தலைவராக வருவார் என்ற னிகழ்வை தீர்க்க தரிசனமாக தெரிந்து வைத்துக் கொண்டிருந்நார்கள் என்று இந்த னிகழ்ச்சி எடுத்துக்காட்டுகிறது. விண்ணப்ப பாரம் எழுதி காரியதரிசியிடம் கொடுத்து அங்கத்தினர் ஆகிய பின்பு இவர் சாவிக்கொத்தை திரும்ப எடுத்துச் சென்று ஆண்டவர்களின் திருவடிகளில் சமர்ப்பித்தார்.

## ஆண்டவர்கள் அளித்த னீதித்தீர்ப்பு

எத்தனையோ ஜீவ பிறவியர்களுக்குள் ஏற்பட்ட மனஸ்தாபங்களையும், வழக்குகளையும் விசாரித்து ஆண்டவர்கள் னீதி வழங்கியுள்ளதை னும் எல்லோரும் அறிவோம். அரசாங்கம் வழங்கும் னீதியில் ஒருவருக்கு ஆதாயமும் மற்றொருவருக்கு தண்டனையும் வழங்கப் பெறுவது னடைமுறையாகும். ஆனால் ஆண்டவர்கள் னீதி வழங்குவதில் இருவருக்கும் இரட்சிப்பும் னன்மையும் தான் இருக்கும்.

அரசாங்க னீதியில் ஒருவன் துக்கப்படுவதும், மற்றொருவன் மகிழ்ச்சியடைவதுமாக இருக்கும். ஆனால் ஆண்டவர்கள் வழங்கிய னீதியில் வாதியும், பிரதிவாதியும் மகிழ்ச்சி அடைவார்கள். அரசாங்க னீதிக்குபிறகு வாதியும்,

பிரதிவாதியும் இருவரும் குலப் பரம்பரையாக குரோதமும், விரோதமும் கொண்டு வாழ்வார்கள். ஆனால் ஆண்டவர்கள் நீதி வழங்கிய பிறகு வாதியும், பிரதிவாதியும் மனஸ்தாபங்களை மறந்து ஆன்ம நேய ஒருமைப்பாட்டில் வாழ்ந்து திகழ்வார்கள். உதாரணத்திற்கு கீழ்கண்ட வழக்கை பார்ப்போம்.

இந்த வழக்கு மதுரையில் ஒரு மெய்வழி பிறவியருக்கும் இன்னொரு மெய்வழி பிறவியருக்கும் 1970ம் ஆண்டு நடந்தது. வழக்கின் விபரம் என்னவென்றால் ஒருவர் ஆபரணக் கற்களை அதாவது வைரம், பவளம், முத்து போன்றவைகளை வாங்கி விற்பனை செய்து வந்தார். அவருடன் மற்றொருவர் கூட்டு சேருவதற்கு ரு.3000 முதல் போட்டு ஆபரணக் கற்கள் வியாபாரத்தில் கூட்டு சேர்ந்தார். அதில் கிடைக்கும் இலாபத்தை இருவரும் சமமாக பங்கிட்டுக் கொள்வதாக ஓர் ஒப்பந்தமும் செய்துகொண்டார்கள். ஒப்பந்தம் சில மாதங்கள் ஓடியது. பின்பு அந்த கல் வியாபாரத்தில் இலாபம் சரிவர கிடைக்காததால், கூட்டு சேர்ந்தவர் அந்த வியாபாரத்திலிருந்து விலகிக் கொண்டு, வியாபாரத்திற்கு தாம் கொடுத்த ரு.3000த்தை கடனாக பாவித்து மாதம் ஒன்றுக்கு நூற்றுக்கு ரு.2 வீதம் வட்டியை கல் வியாபார பிறவியர் தரவும் அவர்களுக்குள் ஏற்பாடாயிற்று. இப்படி இதன்பிறகு சில காலம் இவர் அவருக்கு வட்டியும் கொடுத்து வந்தார். பிறகு வட்டியை ஒன்றிரண்டு வருடங்களில் இவருக்கு கொடுக்க இவரால் இயலவில்லை. வியாபாரத்தில் நஷ்டம் அடைந்துவிட்டதால் முடியவில்லை என்று கூறிவிட்டார். முதலையும் அசலையும் திருப்பி கொடுக்க எவ்வளவோ முயற்சி எடுத்தும் இவரால் முடியவில்லை. பிறகு கல் வியாபாரம் செய்த இந்த பிறவியர் முதல் ருபாய். 3000 மட்டும் கொடுக்க முன்வந்தார். முதலைப் போல பல மடங்கு வட்டி பணம் கொடுத்து விட்டபடியால் மேற்கொண்டு வட்டி தர முடியாது என்றும் மறுத்துவிட்டார். ஆனால் முதல் கொடுத்த பிறவியர் முதல் ரு.3000-த்துடன் விடுப்பட்ட காலத்திற்குரிய வட்டியையும் சேர்த்துக் கொடுக்கவேண்டும் அப்பொழுதுதான் பணத்தை வாங்குவேன் என்று பிடிவாதமாக

சொல்லிவிட்டார். இதனுல் மனக்கசப்பு இருவரிடையே அதிகமாக வளர்ந்து வந்நது.

அந்ந சமயம் ஆண்டவர்கள் இராஜகெம்பீரத்திற்கு எழுந்நருளுவதாக செய்தி வந்நது. அப்பொழுது இருவரையும் இராஜகெம்பீரத்திற்கு வரும்படி சொல்லிவிட்டு குறிப்பாக அந்ந கல் வியாபாரியை அசல் பணத்தை எடுத்துக்கொண்டு அங்ஙு வரும்படியும் செய்தி அனுப்பினுர்கள். இராஜகம்பீரத்தில் சபை னடந்நு முடிந்ந பின்பு இந்ந வழக்கை விபரமாக தெய்வத்தின் முன்பு இருவரும் எடுத்துச் சொன்னுர்கள். பின்பு தெய்வமவர்கள் இருவரிடமும் வாக்குமூலங்ஙளை கேட்டு கொண்டு, வழக்கின் முழு விபரத்தையும் தெரிந்நு கொண்டார்கள்.

பிறகு ஆண்டவர்கள் கல் வியாபார பிறவியரை அழைத்து அசல் பணத்தை எம்மிடம் கொடு என்று கேட்டு ரு.3000-த்தை தாம் வாங்ஙிக் கொண்டார்கள். பின்பு கடன் கொடுத்த பிறவியரை அழைத்து னீ கொடுத்த முதலை வட்டியோடு ஞன் அவனிடம் வாங்ஙிக் கொண்டேன். ஆனுல் வட்டியை ஞன் எடுத்துக் கொள்கிறேன். முதல் மட்டும் ரு.3000 வ்ாங்ஙிக் கொள்ள உனக்கு சம்மதமா? என்று கேட்டார்கள். அதற்கு அவர் ஆண்டவர்களுக்கென்ருல் எல்லாமே எடுத்துக் கொண்டாலும் சம்மதமே என்று பதிலுரைத்தார். சரி என்று ஆண்டவர்கள் அன்புடன் அந்ந 3000 ருபாய் முதலை இந்ந பிறவியரிடம் கொடுத்தார்கள். இவரும் மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டார். இப்படி இருவரின் கணக்கும் தீர்ந்நது. பின்பு இரண்டு பிறவியர்களும் சில காலமாக இருந்ந மனஸ்தாபத்தை மறந்நு னேசமாயினுர்கள். ஆண்டவர்கள் தங்ஙள் மீது பிள்ளைகள் வைத்திருந்ந அன்பின் மீது அதிகாரம் செலுத்தி இந்ந வழக்கை இப்படி சுமுகமாக தீர்த்து இருவரையும் மகிழ்ச்சி அடைய செய்தார்கள்.



## திருக்கோயில் விஜயம்

ஒரு தடவை ஆண்டவர்கள் பட்டீஸ்வரம் துர்கை அம்மன் கோயிலை பார்வையிட அந்த கோயிலுக்கு விஜயம் செய்தார்கள். அந்த கோயிலின் அறங்காவலரான தம் மெய்வழி பிள்ளை ஒருவரின் விருப்பத்திற்காக அங்கு எழுந்தருள ஒத்துக் கொண்டார்கள். அப்படிச்சென்றபோது அந்த கோயிலுக்குள் ஆண்டவர்கள் நுழையும்போது தங்களை காலணியுடனேயே மூலஸ்தானத்திற்கு அருகில் வந்து விட்டார்கள். அதைப் பார்த்து அர்ச்சகர்களும் மற்றவர்களும் பதறினார்கள். தெய்வமவர்களை கோயிலுக்கு வேண்டி அழைத்து வந்த தெய்வப்பிள்ளையான மெய்வழி பிரகாசக் கொடி அனந்தர் அர்ச்சர்களின் பதற்றத்தை கவனித்தார். சமயோசிதமாக உடனே ஆண்டவர்கள் எதிரே மண்டியிட்டு தம் இரு கையையும் ஏந்தி காலணியை கழற்றி தரும்படி மவுனமாக பாவனை செய்து வேண்டினார். ஆண்டவர்கள் இதை உடனே புரிந்து கொண்டு தமது காலணியை கழற்றினார்கள். மெய்வழி பிரகாச கொடி அனந்தர் தம் கையில் அதைவாங்கி தம்தலையில் வைத்துகொண்டார். இவர் கோயில் அறங்காவலர்களில் ஒருவராகையால் அவரே ஆண்டவர்கள் கழற்றிய காலணியை கையால் பவ்யமாக எடுத்து தனது சிரசில்வைத்துக் கொண்டு தெய்வத்தை பின் தொடருவதை பார்த்து சுற்றியிருந்த அனைவரும் ஆண்டவர்களின் பெருமையை உணர்ந்து அப்படியே உறைந்து நின்று விட்டார்கள். ஆண்டவர்கள் அவரைபார்த்து "ஆலயத்திற்கு நீ வர வேண்டாமா? நீ போய் இதை காரில் வைத்து விட்டு வா " என்று உத்தரவிட்டார்கள். அவரும் அப்படியே செய்துவிட்டு பின்பு ஆண்டவர்களுடன் வந்து அவரும் சேர்ந்து கொண்டவுடன் ஆலயத்திற்குள் தெய்வமவர்கள் சென்றார்கள்.



இது நாள் வரை எவரும் நடந்நறியாப் பாதையில் நம் குலமகா தெய்வமவர்கள் தம் சீடப் பிள்ளை ஒருவரை "நல்வழி ஈதென வியந்து நயந்து காட்டி" அழைத்துச் சென்ற ஒரு வரலாறு பற்றி இப்பொழுது சுருக்கமாகத் தருகிறோம்.

திருப்பத்தூர் சபாமண்டபத்தில் தெய்வமர்கள் அமர்ந்திருந்தபோது தெய்வமர்கள் முதல்பிள்ளைகளில் ஒருவராகிய பிராம்மணகுலத்தில் இருந்து வந்த மெய்வழி திருவெங்கட ஐயங்கார் ஒருவிண்ணப்பம் செய்தார். "தெய்வமே! எங்கள் குலம் பிராம்மண குலம். பிராம்மண குலத்தவர்கள் வணங்கும் தாமரை மலர்மேல் உள்ள ஸ்ரீ லட்சமியை வணங்குவது பற்றி தாங்கள் கூறியருள வேண்டும். எங்கள் பிராம்மண குல வழக்கப்படி நான் லட்சுமி பூஜை செய்யவேண்டியவனாய் இருக்கிறேன். செந்தாமரையில் வீற்றிருக்கும் லட்சுமியைப்பற்றி எங்கள் வேதங்கள் விளக்கமாகக் கூறுகின்றன. அதனால் அதைப்பற்றித் தாங்கள் விளக்கி அருள வேண்டும். மேலும் லட்சுமி பூஜை செய்ய தாங்கள் உத்திரவு கொடுக்க வேண்டும்" என்று வேண்டி நின்றார். தெய்வமவர்கள் சிறிது நேரம் அமைதியாய் இருந்நார்கள். பிறகு திருவாய் மலர்ந்நார்கள்.

"சரி அப்படியே செய்கிறேன். இப்போது நான் சொல்கிறபடி நீ செய். இவ்வூர்க் கோடியில் ஒரு குளம் இருக்கிறது. அக்குளக்கரைக்கு இன்று மாலை நாலுமணிக்குப் போய் விடவேண்டும். இரவெல்லாம் அங்கேயே தங்கி இருக்க வேண்டும். காலையில் தான் வரவேண்டும் ... என்ன?" என்று உத்தரவிட்டார்கள். "அப்படியே செய்கிறேன் தெய்வமே" என்று கூறிவிட்டு, உத்தரவு வாங்கிக் கொண்டு, அன்றைய மாலைப் பொழுதை மிக ஆவலுடன் எதிர்பார்த்துக்

கொண்டிருந்நார். மாலை ஞலு மணிக்கு ஆண்டவர்கள் பணித்தபடி அவ்வூர்க்கோடியில் உள்ள குளத்தங்கரைக்குச் சென்றார். அக்குளத்தில் தாமரை மலர்கள் பூத்திருந்தன. அவ்வூர் மக்களுக்குக் குடி னீர் வழங்கும் ஊருணியாக அது விளங்கி இருந்நது. குளத்தில் இருந்ந னீரை அவ்வூர்ப் பெண்கள் எடுத்துச் சென்ற வண்ணம் இருந்நனர்.

இவரும் அக்குளத்தின் கரையின் ஒரு பக்கத்தே சென்று அமர்ந்நார். மாலைப்பொழுது சாய்ந்து இருள் சிறிது சிறிதாகப் பரவத்தொடங்கிற்று. அதே சமயம் மக்கள் னடமாட்டமும் வர வர குறையத் தொடங்கியது. சிறிது னேரத்தில் அக்குளக்கரை பகுதி, ஆள் னடமாட்டமே இல்லாததாய் விட்டது. அப்போதுதான் இவர் உள்ளத்தில் ஒரு வித அச்சம் படர ஆரம்பித்தது. மக்கள் னடமாட்டமே இல்லாத இடத்தில் இன்று இரவெல்லாம் தங்க வேண்டுமா! எங்கு தங்குவது? எப்படி தங்குவது? இப்படி யோசித்தபடியே சுற்றும் முற்றும் பார்த்தார். அக்குளக்கரையின் பக்கத்தே ஒரு சிறு குடிசை தெரிந்நது. உடனே அங்கு சென்றார். உள்ளே சென்று பார்த்தபோது அது ஒரு தையல்காரர் வேலைசெய்யும் இடமாகத் தெரிந்நது. பகல் னேரத்தில் மட்டும் வேலை செய்யும் இடம்போலத் தெரிந்நது. அங்கு ஒரு ஆள் படுக்கும் அளவிற்கு னீண்ட மேஜை (துணி வெட்டுவதற்காக) இருந்நது. அம்மேஜையின் கீழ் ஒரு காலில் புனுகு பூனை ஒன்று கயிற்றில் கட்டப்பெற்றிருந்நது. அது இங்குமங்கும் உலவியபடி இருந்நது. இரவு தங்குவதற்கு இந்ந ஒரு இடமாவது கிடைத்ததே என்ற திருப்தியுடன் அவர் அம்மேஜையின் மேல் அமர்ந்நார். இரவு வெகு னேரம் ஆயிற்று. அப்புனுகு பூனை தன் மணமான எச்சத்தை வெளியாக்கியது. அதன் மணம் "கம்" என்று அக்குடிசைக்கு வீச ஆரம்பித்தது.

இரவு சூழ்ந்நதால் உண்டான அச்ச உணர்வு மெல்ல மெல்லத் தணிந்நது. புனுகின் மணம், தெய்வத்தை னினைக்கத் தூண்டுவதுப்போல் கமழ்ந்நது. என்னே தெய்வத்தின் தயவு என்று சிந்நித்தவாறே அப்பலகையின் மேல்படுத்தார். படுத்த

சிறிது னேரத்திற்கெல்லாம் இது வரை அனுபவித்தறியாத னினைத்தே அறியாத புதிய புனித அனுபவம் ஒன்றை அனுபவிக்கத் தொடங்கினுர். ஆம்! அவர் கால் கட்டைவிரலிலிருந்து முதன் முதலாக உயிர் அடங்க ஆரம்பித்தது. அதன் காரணமாக புற உணர்வு மறைந்துமறுக்கத் தொடங்கியது. கட்டைவிரலில் இருந்து சிறிது சிறிதாக முழங்கால்கள் - தொடைகள் - அடிவயிறு - மார்பு வரை இந்த னிலை அதாவது புறவுணர்வென்பதே இல்லாத னிலை மெல்ல மெல்லப் பரவியது.

மார்புப் பகுதியைக் கடந்து கண்டபகுதியைத் தொடுமுன்னரே புற உலக உணர்வும் னினைவும் அறவே மறந்து மறைந்தே போயிற்று. அக்கணமுதற்கொண்டு அவர் கண்ட அகமிய, அதி அற்புதத் தெய்வக்காட்சியை என்னென்பது? முதலில் தாமரை மலரின் அடிப்பாகத்திலுள்ள னீண்டு வளர்ந்த தண்டொன்று அவரின் அக்க் காட்சிக்குத் தெரிகின்றது. தெரிந்தவுடன் சரேலென அத்தண்டினைப் பற்றினுர். பற்றிக்கொண்டு மிகமிக வேகமாக மேலேறுகின்ருர். மேலேறிக் கொண்டே இருக்கிருர். அளவு கூற முடியாத மிக னீண்ட னெடிய தூரம் வந்துக்கொண்டே இருக்கிறது. அவ்வளவையும் இவரும் தண்டினைப் பற்றியபடியே மிக விரைந்து ஏறிக்கொண்டே இருக்கிருர்.

சில கணங்களில் மலர்ந்து மணம் வீசும் செந்நாமரையையும் அம்மலருக்கு னடுவேயுள்ள மொட்டினையும் கண்டார். அம்மலர்மிசை அதாவது அச்செந்நாமரைப் மொட்டின் மேல் எமனையும் எமபலத்தையும் அடக்கி ஆக்குகின்றவர்களும், தலையில் பொல்லாத விதி எழுத்தை அழுத்திப்பதிக்கின்றவர்களும், சாவாவரந்தரும் மூவா மருந்தெனும் வேதியர்க்கரசரும், யுகயிறுதி னீதித் தீர்ப்புக் கர்த்தர் கல்கி மகதி பிரம்மோதய மெய்வழிச் சாலை ஆண்டவர்கள் சின்னஞ்சிறு னெல்மணி போன்ற அளவினில், மிகத்தெளிவாக தம்பதி சமேதராக எழுந்தருளியிருந்நார்கள்.

அந்த சின்னஞ் சிறுஉருவில் அவர்கள் தரிசனம் பீடும் பெருமையும் தன்னேரிலாத் தகைமை கொண்ட அதன் கீர்த்தியையும் என்னென்று புகல்வது? என்னென்று புகழ்வது?

ஆயிரம் ஞ கொண்ட ஆதிசேஷனும் புகலரிய சிற்சபை பொற்சபைக் காட்சியைத் திருவரங்நத் திருச்சுவர்ணத்தில்லை திருச்சிற்றம்பல மாட்சியைத் தம் அங்கமாகிய அந்த அனந்தர்க்குக் காட்டியருளிய எளிமையை என்னென்பது? அந்தகாட்சியில் அப்போது தம்பதியர் சமேதராக தாமரை மலர்மேல் எழுந்தருளிய ஆண்டவர்களை அச்சமயம் பூர்ண காஷாய உடையிலிருந்து விளங்கும் அனந்நாதி தேவர்கள் அறவலம் வந்து கொண்டிருப்பதை இவர் பார்த்தார். எல்லோரும் ஒரே குரலாக அனைவரும் மெய்வழி னூலின் காப்புச் செய்யுளை பாடிக்கொண்டே அறவலம் வந்து கொண்டிருப்பதையும் பார்த்து பரவசமடைந்தார்.

இவ்வண்ணமான தெய்வ காட்சியினை தெய்வத்தின் இந்தப்பிள்ளை கண்டு பேரானந்தக் கடலில் மூழ்கி இப்பேரானந்தத் தெய்வீகக் காட்சியை இடையறுது கண்டு களித்துக்கொண்டே இருக்கவேண்டும் மென்றே அவாவுற்ற வண்ணம் ஆனந்தபரவசமாயிருந்தார். ஆனுல் இத்தெய்வக் காட்சி சிறிது னேரமே இவருக்கு இருந்தது, பின்னர் மறைந்தது.

இத்தெய்வக் காட்சிக்கு முன் எவ்வாறு உடலின் கால் கட்டை விரல்களில் இருந்து கழுத்து வரையில் ஜீவன் அடங்கிக் கொண்டுவந்ததோ அவ்வாறே மீண்டும் ஜீவன் கழுத்திலிருந்து கால் கட்டை விரல்கள் வரை மெல்ல மெல்லப் பரவி வியாபகமாகிக் கொண்டு வந்தது. ஜீவன் முழுமையாகப் புற உலக உணர்விற்கு திரும்பப் பலமணிநேரம் பிடித்தது.

புற உலக உணர்விற்குத் திரும்பிய சற்று னேரத்திற்கெல்லாம் எழுந்தார். "அன்றலர்ந்த தாமரை மலர் மீது ஆண்டவர்கள் காட்சித் தந்த அந்த பேரின்பச் சித்திப் பெருவாழ்வு

னிலையிலேயே தன்னை வைத்திருக்கக் கூடாதா? சிறிது னேரமே காட்டி விட்டு இவ்வுலகத்திற்கு அழைத்துக்கொண்டு வந்து விட்டார்களே'' என்ற எண்ணமுடையவர்களாய் னினைத்து ஏங்கிக் கொண்டிருந்தார். காலைப் பொழுது விடிந்தவுடன் ஆண்டவர்களை தரிசிக்க ஆஸ்ரமத்திற்கு விரைந்தார். ஆண்டவர்கள் திருமுன் னின்றார். ஆனந்த பாஷ்யம் பொழிய அழுத வண்ணம் இருந்தார். னேற்றிரவு ஆட்கொண்டு காட்சிதந்த தெய்வனிலையிலேயே, தான் இருக்க விரும்புவதாகவும் இவ்வுலக வாழ்வே தனக்கு வேண்டாம் என்றும் ஆகவே மீண்டும் தனக்கு இரவு தந்த தெய்வக்காட்சியை தந்தருள வேண்டும் என்றும் கண்ணில் னீர் மல்க இறைஞ்சி வேண்டி னின்றார்.

இவர் இவ்வாறு இறைஞ்சி வேண்டுவதை ஆண்டவர்கள் இளனகை பிறங்கக் கேட்டார்கள். அது காலை வெளியாகிய ஆண்டவர்களின் திருவாக்கிய கருத்தாவன: ''உன்னை நேற்றிரவு அந்த திருனாட்டிற்குத் அழைத்துச் சென்று அத்தெய்வீகக் காட்சியைக்காட்டி திரும்ப அழைத்துக் கொண்டு வரும் வரை உன் உடலை னான் பாதுகாக்க வேண்டியதாயிற்று. அதற்காக எனக்குள்ள வேலைகளையெல்லாம் விட்டு விட்டு உன் தூலத்தைப் பாதுகாக்க வேண்டியதாயிற்று. உனக்காக இப்படிச் செய்தால் னான் வந்த வேலைகளை முடிக்க வேண்டுமல்லவா? தக்க பாதுகாப்பு இல்லாமல் அந்த னேரத்தில் தூலத்தை யாராவது பார்த்து விட்டால் விபரீதமாகிவிடுமே. ஒரு வரலாற்றை கூறுகிறேன் கேள் என்று கூறி கீழ் உள்ள கதையை அருளினார்கள்.

## பர வாழ்வும் இக வாழ்வும்

ஆதி சங்கரர் பால்ய வயதினிலேயே துறவு பூண்டு மெய்ஞான வித்துக்களை ஊன்றுவதற்காக இந்த இந்திய தேசமெங்கும் கால்னடையாகவே சென்று பிரச்சாரம் செய்தார். அது கண்டு ஒருவர்'' னீங்கள் தான் துறிவியாயிற்றே!

சிற்றின்பத்தைப் பற்றி அனுபவித்தவர் போல பேசுவது எப்படிப்பொருந்தும்? இவ்வுலக சிற்றின்பத்தைப் பற்றி உதாரணங்கள் கொடுத்துப் பேச வேண்டுமென்ருல் சிற்றின்பத்தை அனுபவித்த பின்னரே பேச வேண்டும்'' என்று கூறினர்.

அவர் கேட்ட வினுவிற்கு ஆதி சங்கரரால் மறு மொழி கூற இயலவில்லை. சிற்றின்பத்தை அனுபவித்த பின்னரே அது பற்றி பேசுவதே பொருத்தமாக இருக்கும் என்று உணர்ந்நார். ஆதிசங்கரர் தம் முக்கிய சீடர்களே அழைத்துக் கொண்டு அன்னகரத்துக்கப்பால் அடர்ந்நக் காட்டுப் பகுதிக்குள் சென்ருர். ஜன சஞ்சாரமில்லாத இடமாகப் பார்த்துத் தம் சீடர்களிடம் ''ஞன் இந்ந உடலைவிட்டுச் சிறிது னேரம் வெளியே னகரத்துக்குள் செல்ல வேண்டியுள்ளது. ஞன் மீண்டும் இந்ந உடலுக்குள் புகும் வரை னீங்கள் இந்ந உடலைக் காக்க வேண்டும். இந்ந உடலுக்கு ஏதாவது ஆபத்து வந்து விட்டது எனத் தெரிந்நால் உங்களில் சிலர் சேர்ந்து னகரத்திற்குள் சென்று உரத்த குரலிலே பஜகோவிந்நம் பாட வேண்டும். தெருவில் னீங்கள் பாடுவது வீட்டுக்குள்ளிருப்பவர்களுக்குக் கேட்க வேண்டும். அப்படிப் பாடிக் கொண்டு செல்ல வேண்டும். தெரிந்நதா?'' என்று வினவினர். சீடர்கள் ''அப்படியே செய்கிருேம்'' என்ருர்கள். ஆதிசங்கரர் தாம் பெற்றுள்ள அருந்நவ வலிமையால், சீடர்கள் பார்த்துக் கொண்டிருக்க தம் உடலில் இருந்நு வெளிக்கிளம்பினர். னகரத்தை னேக்கிச் சென்ருர். அப்போது அன்னட்டரசன் இறந்நுவிடவே அவன் உடலைத் தகனம் செய்வதற்கு ராஜமரியாதையுடன் பெருமக்கள் கூட்டம் புடைசூழச் சுமந்நு வருவதைக் சங்கரர் பார்த்தார். உடனே அந்ந உடலில் புகுந்நார். புகுந்ந உடன் இறந்நுவிட்டதாகக் கருதி சுமந்நு வரும் ஆட்கள் மன்னர் தம் உடலில் னெளிவது கண்டு வியப்படைந்நு அங்கேயே னின்றுவிட்டார்கள்.

மன்னர் தூக்கத்திலிருந்து விழித்து எழுவது போல் எழுந்தார். சூழ்ந்திருந்த மக்கள் வெள்ளம் மகிழ்ச்சியடைந்து ஆராவாரித்தது. இவ்வானந்த அற்புதச் செய்தியை உடனே அரண்மனைக்குத் தெரிவித்தார்கள். சோகத்தில் ஆழ்ந்திருந்த அரண்மனை மகிழ்ச்சிக்குத் திரும்பியது. சிறிது னேரத்தில் மன்னர் கோலாகலமான வரவேற்புடன் அரண்மனை திரும்பினர். ஆனல் மன்னருக்கு எல்லாம் புது முகங்ஙளாகவே இருந்தன. அரண்மனைக்குள் புகுந்த அவருக்கு மாதா யார் மனைவியார் என்பதே தெரியவில்லை. மன்னரின் தாய் மகனைக் கண்டதும் ஓடோடி வந்து கட்டியணைத்துக் கொண்டு கதறி அழுதாள். மகிழ்ந்தாள். அவளின் செயல்கள் அவளே தாய் எனக் காட்டின. அந்தப்புறம் சென்றபோது மனைவி மகிழ்ந்து உபசாரம் செய்தாள். உரிமையுடன் மன்னரின் கரம்பற்றி வரித்துக் கொண்டாள். இச்செயலால் அவளே மனைவி என உணர்ந்தார். ''னீண்ட மயக்கத்தில் இருந்து விழித்ததால் உடம்பெல்லாம் வலியாக இருக்கிறது. படுக்கையில் சென்று படுத்துக் கொள்ள வேண்டும் போல் இருக்கிறது. படுத்தவுடன் என் உடம்பை சற்று பிடித்து விடு'' என்று கூறிவிட்டு மன்னர் தம் படுக்கைக்குச் சென்று படுத்துக் கொண்டார். மன்னர் தம் உடலை அவர் மனைவி பிடித்து விடத் தொடங்கினள். சிறிது னேரத்திற்குள் இருவர்தம் உள்ளத்திலும் காம உணர்வு உத்வேகம் கொள்ளத் துவங்கியது. ஆகவே இருவரும் சேர்ந்தார்கள்.

சேர்ந்த சிறிது னேரத்திற்கெல்லாம் பட்டத்து ராணிக்குச் சந்தேகம் பிறந்தது. பல்லாண்டு காலங்ஙளாக இல்லாத பழக்கங்கள் அன்று மன்னரிடத்து அவள் கண்டதனுல் சந்நேகம் வலுத்தது. இவர் தன்னுடைய கணவர் அல்லர் என்று துணிந்தாள். துணிந்தவுடனே மன்னரிடமிருந்து விரைந்து விலகி

எழுந்நாள்; அப்பால் சென்றுள்; அப்போது னள்ளிரவு என்று கூடப் பார்க்காமல் மந்நிரிப் பிராதனிகளேயும் காவலர்களேயும் அழைத்தாள். பட்டத்துராணியின் ஆணேக்கேட்டு எல்லோரும் வந்நார்கள். வந்நவர்களேப் பார்த்து. "இந்ந மானகரத்திலாவது அல்லது சுற்றுப்புறத்தில் உள்ள கிராமங்ஙள் காடுகளிலாவது உயிர் பிரிந்த உடலே யாராவது அடக்கம் செய்யாமலும் எரிக்காமலும் பாதுகாத்து வைத்திருக்கிறுர்களா?'' என்று இப்போதே னீங்ஙள் னலா பக்கமும் சென்று தேடிப்பார்க்க வேண்டும். அப்படி எந்ந உடலேயாவது னீங்ஙள் கண்டால் உடனே அதை எரித்துவிடவேண்டும். இப்போதே னீங்ஙள் இன்னகரிலும் னகரைச் சுற்றியுள்ள இடங்ஙளிலும் தேடிப்பாருங்ஙள்'' என்று ஆணேயிட்டாள்.

அரண்மனேக் காவலர்கள் அம்மானகரத்திலும் சுற்றுப்புற கிராமங்ஙள் காடுகள் முதலிய இடங்ஙளிலும் உயிர் பிரிந்ந உடல் எங்ஙாவது இருக்கிறதா என்று உடனே தேடலானுர்கள். அந்ந னள்ளிரவில் காட்டுப்பகுதியில் புகுந்ந சில காவலர்கள் கையில் விளக்குகளுடன் தேடுவதை சங்ஙரரின் சீடர்கள் கண்டார்கள். அரண்மனே காவலர்கள் தேடுவது கண்டதும் தம் குருபெருமானுர் அன்னகரத்து அரண்மனேயில்தான் இருக்க வேண்டும் என்றும் இதைத் தெரிந்நு கொண்டே அவர் உடலே அழித்துவிட இப்படித் தேடிக்கொண்டிருக்கிறுர்கள் என்றும் ஒருவாறு யூகித்தனர். குருபெருமான் எச்சரித்தபடியே அவர் உடலே அழிக்கும் ஆபத்து வந்நு கொண்டிருக்கிறது என்பதை உணர்ந்ந சீடர்கள் சிலர் உடனே னகரை னேக்கிச் சென்றுர்கள்.

முதலில் அரண்மனே முகப்பில் னின்று பாட விரைந்நு சென்றுர்கள், உரத்த குரலில் பஜகோவிந்நம் பாடினுர்கள்.

விடாமல் சிறிது னேரம் பாடினுர்கள். அரண்மனையின் அந்நப்புரப் படுக்கையில் இருந்த மன்னர் இதனைக்கேட்டார், உடனே தம் பழைய னினைவிற்கு திரும்பினுர். காட்டிலிருக்கும் தம் தூல உடலுக்கு பட்டத்து ராணியால் ஏதோ ஆபத்து வந்திருக்கவேண்டுமென உணர்ந்தார். உணர்ந்தவுடன் மன்னரின் உடலில் இருந்த சங்கரரின் பரிசுத்த ஆவி அக்கூட்டை விட்டு வெளியேறிக் காட்டகத்தே சீடர்களால் பாதுகாக்கப்பெற்றிருந்த தம் கூட்டிற்குள் வந்து புகுந்தது. பின் சயனத்தில் இருந்து எழுந்தார்போல் அவர் எழுந்தார். இவ்விதமாக ஆதிசங்கரர் உடலுக்கு னேரவிருந்த ஆபத்து னீங்கியது!'' என்று ஆண்டவர்கள் கூறியருளிச் செய்தார்கள்.

ஆண்டவர்களின் அளப்பரும் பெருங்கருணைப் பேரருள் பெருந்தயவினை எண்ணி ஐயங்கார் அமைதியுற்றுர். இந்த அதி அற்புத பிரம்மவித்தையை தம்பிள்ளைகளுக்கு செய்துகாட்டிய னிகழ்ச்சியினை என்னென்று உரைக்கமுடியாமல் சபையில் இருந்தோர் ஆச்சரியப்பட்டனர்.

## ஒரு திருதரிசனை இருவினை போக்கும்

...பேசும்கு ருபரன் பேச்சுக்குள் ளே பேசும்

போது மு கம்பாரு......

ஆண்டவர்கள் ஒரு சமயம் ஆலயத்தில் எழுந்தருளி இருந்தார்கள். காலை னேரத்தில் பிறவியர்கள் பொதுவாக ஆலயத்தில் இருப்பதில்லை. இதைப்பற்றி ஆண்டவர்கள் சபையில் கீழ்க்கண்டவாறு திருவாய்மலர்ந்தருளினுர்கள். ''என்னேரமும் உங்கள் விடுதியிலேயே இருக்கிறீர்கள். குடிசையில் உன்மனைவி சமைத்துக்கொண்டிருப்பாள். அங்கு னீங்கள் என்ன பார்த்துக்கொண்டிருக்கிறீர்கள்? இங்கு வந்து எம்

முகத்தைப் பார்த்துக் கொண்டிருக்க கூடாதா?'' என்று தெரிவித்தார்கள்.

ஆண்டவர்கள் அகில வலத்தில் பாட்டையரின் திருநோக்கையே கவனித்து கொண்டிருப்பார்களாம். அதுபற்றி மான்மியத்தில்-

*... '' தங்ஙள்..... குரு திலகமவர்களின் – எல்லாம் அறிந்த வல்லாள உள்ளத்திலே உதிக்கின்ற எண்ணத்தினை – நாவிலெடுத்து வாய்கொண்டு கூறுவதற்கு முன்னரே – நாவுகொண்டு உரைத்தற்கு இலக்காக நின்று செவியுற்றுக் கேட்டவர்களைப் போல அறிகின்ற அறிவானது முன்னின்று துலங்நும் சாந்தி மனத்தினை யுடையவர்களாகினார்கள்'' .....* என்று குறிப்பிட்டுள்ளார்கள்.



## மணக்கும் மார்க்க நாதர்

*''தேகமடா - செண்பகப் பூ வாசமுள்ளாள்'' அகத்திய மாமுனிவர்.*

ஆண்டவர்கள் ஆலயத்தில் அமர்ந்திருக்கும்போது அவர்கள் திருமேனியில் இருந்த சண்பகப் பூ மணம் கமழ்ந்து கொண்டிருக்கும் என்பது நாம் அறிந்ததே. ஆண்டவர்களுக்கு அருகில் அமர்ந்திருக்கும் பிறவியர்கள் இதை நன்றாக அனுபவிப்பர். ஆண்டவர்கள் செண்பகப் பூ வாசமுள்ளவர் என்று தீர்க்க தரிசனங்ஙள் பல எடுத்து காட்டுகின்றன. இது போன்ற செய்தியைப் பற்றிய சில நிகழ்ச்சிகளை இங்கே தெரிவிக்கிறோம்.

ஒரு தடவை ஆண்டவர்கள் சட்டை இறுக்கமாக இருக்கிறது என்று கழற்றி மெய்வழி நச்சேத்திர அனந்தரிடம் கொடுத்து, அவரையே போட்டுக்கொள்ள சொல்லி

உத்திரவிட்டார்கள். அந்தச் சட்டையை அவர் போட, அந்தச் சட்டையிலுள்ள மணம் அவரால் தாங்க முடியாத அளவு மணம் வீசியது. இதைப்பற்றி ஆண்டவர்கள் சன்னிதானத்தில் அவர் சொன்ன போது "அட.... துவைத்து போட்டுக் கொள்ளுடா" என்று ஆண்டவர்கள் உத்தரவிட்டார்கள்.

ஒரு தடவை மெய்வழி சந்திரோதய அனந்தரிடம் ஆண்டவர்கள் "எங்கேடா சட்டை தைக்கிறாய்?" என்று கேட்டார்கள் "அன்னவாசலில் தைக்கிறேன்" என்று அவர் சொன்னார். ஆண்டவர்கள் "எனக்கும் ஒரு சட்டை தைத்துக் கொண்டு வா" என்று சொல்லி புதுத்துணியுடன் அளவுக்கு தைக்க தங்களுடைய பழைய சட்டையையும் கொடுத்-தனுப்பினார்கள்.

அவைகளை மெய்வழி சந்திரோதய அனந்தர் அன்னவாசல் தையல்காரரிடம் தைக்க கொடுத்தார். அந்தத் துணிகளை வாங்கிய கடைக்காரர் 'இந்த சட்டை இப்படி மணம் வீசுகிறதே - இது செண்டு வாசனை கூட இல்லையே! எப்படி?" என்று கேட்டார். அதற்கு மெய்வழி சந்திரோதய அனந்தர் "இது ஆண்டவர்கள் திரு உடலில் போட்ட சட்டை, அப்படித் தான் மணம் வீசும்" என்று தெரிவித்தாராம்.

சித்தரஞ்சனுக்கு ஆண்டவர்கள் எழுந்தருளிய போது, தன்னுடைய துணிகளை ஒரு பெட்டியில் வைத்திருந்தார்கள். அந்தத் துணிகளை துவைத்து தருகிறேன் என்று மெய்வழி வரதராஜ அனந்தர் ஆண்டவர்களிடம் விண்ணப்பித்தார்கள். ஆண்டவர்களும் தங்களுடைய துணிகளை மெய்வழி வரதராஜ அனந்தரிடம் கொடுத்தார்கள். ஒரு வாளியில் துணிகளை போட்டு தண்ணீர் விட்டு அலசினார். அவ்வளவுதான், உடனே

துணிகளிலிருந்து சோப்பின் வாசனையையும் மீறி சம்பங்கி - செண்பகப் பூவின் மணம் கும்மென்று வீசத் தொடங்கியது. அலசிய அந்த தண்ணீரை அப்படியே ரோஜா செடிக்கு விட்டு விட்டார்.



## அதிசய தெய்வதிருக் காட்சி தரிசனம்

### 10-10-73

அன்று மாலை தெய்வம் பழம் வைக்கும் பீரோ அருகில் ஆசனத்திற்கு வந்து அமர்ந்தார்கள். அங்கு இருட்டாக இருக்கவே என்ன வெளிச்சத்தையே காணோமே! என்றார்கள். உடனே அனந்நாதி தேவர்கள் ஓடிப்போய் பெட்ராமக்ஸ் லைட் கொண்டு வர ஓடினார்கள். அதற்குள் மேற்கிலிருந்து சூரியனின் மஞ்சள் கிரணம் சொல்லி வைத்த மாதிரி வேகமாகவந்து வட்டமாகக் தெய்வத்தின் திருமுகத்திற்கு மட்டும் படும்படி விழுந்தது. அது மிகவும் ஆச்சரியமான கண்கொள்ளா காட்சியாக அப்போது இருந்தது. தெய்வம் இளனகை பிறங்க அதை ஏற்றுக் கொண்டார்கள்.

ஆண்டவர்கள் " என்னய்யா இது! ஞம் கூப்பிட்டது போல் எம் முகத்திற்கு மட்டும் வீசுகின்றது பார்" என்று சிரித்துக்கொண்டே கூறினார்கள். அப்போது தெய்வத் திருமுகம் தங்க மயமாக ஜொலித்தது. ஐந்து னிமிடம் அந்த சூரிய ஒளி அப்படியே இருந்தது. பின் சூரியன் மறைந்து விட்டது. இந்த னேரத்தில் இங்கு இல்லாதவர்களுக்கு எவ்வளவு பெரிய னஷ்டம். இந்த காட்சி மறுமுறை வருமா?

*சர்வ அண்ட ரண்ட சராசரங்களையும், ஆட்டி வைத்த கர்த்தாதி கர்த்தர் னம் தெய்வம் தான் என்பது இதன் மூலம் னிரூபணை ஆகியது அல்லவா! "என்ன? வெளிச்சமே இல்லை" என்று அவர்கள் சென்னதும் சூரியபகவானே*

*ஓடிவந்து வெளிச்சம் கொடுப்பதாக ஒரு நிகழ்வு இருந்தால் அவர்கள் யார்? சாட்சாத் அந்த பரமேஸ்வரனே அல்லவா?* என்று அனைவரும் அன்றுபேசினர்.

தெய்வத்தின் இது போன்ற அதிசய நிகழ்வுகளை நினைந்து நினைந்து நாம் அடுத்தவர்களுக்கு சொல்ல வேண்டும்.



## கருணையெலாம் திரண்டு ஓருருவாகி நமக்கென வந்த பெருங்கருணை நெறி நீதி காருண்யபிரானின் ஜீவான்மநேய பேரிரக்கம்

புனல் ஜென்மம் கொண்டாடுவதற்கு முன் அவர்களுடைய தீட்சா நாமங்களை எழுதி தாம்பாளம் தயார் செய்து கொடுத்து புனல் ஜென்ம காணிக்கை வசூல் செய்வது சபை காரியதரிசி மெய்வழி இராமகிருஷ்ண அனந்தர் பொறுப்பாக இருந்தது. ஒரு நாள் புனல் ஜென்மம் கொண்டாடும் பொழுது ஒரு வயது முதிர்ந்த மூதாட்டி புனல் ஜென்ம காணிக்கை ரூ.2 சில்லரையாக அவரிடம் கொடுத்தார்கள். புனல் ஜென்ம காணிக்கை குறைந்த பட்சம் ரூ.10 பெற வேண்டும் என்பது அப்பொழுது சபையிலிருந்த நடைமுறையாகும்.

ஆகவே அந்த மூதாட்டியிடம் ரூ.10 கொடுக்க வேண்டும் என்று கண்டிப்பாக அவர் கேட்டார். அந்த மூதாட்டி தன்னுடைய சேலை முந்தானையில் முடிந்திருந்த முடிச்சை அவிழ்த்து அதிலிருந்து மேலும் 1 ரூபாய் கொடுத்தார்கள். பின்பு அந்த மூதாட்டி ஊருக்கு போவதற்கு வேண்டிய சில்லறை பணம் மட்டும் தான் தன்னிடம் உள்ளது என்றும், மேற்கொண்டு கொடுக்க இயலாத தன்னுடைய இயலாமையை சொன்னார்கள்.

அந்த முதாட்டி கொடுத்த ரு.3/- சபையின் னடைமுறை காணிக்கை ரூபாய் 10/-க்கு குறைவாக இருந்நது. அப்பொழுது ஆண்டவர்கள் வேறு திருச் செயல் செய்து கொண்டிருந்நதால் அவர்களிடம் விவரத்தைச் சொல்லி உத்திரவு பெற அவரால் இயலவில்லை. பிறகு சொல்லிக் கொள்ளலாம் என்று அந்த முதாட்டியை புனல் ஜென்மம் கொண்டாட அனுமதித்தார். அன்றைய னிகழ்ச்சிகள் எல்லாம் முடிந்ந பின்பு ஆண்டவர்கள் திருமாளிகைக்கு எழுந்நருளினுர்கள்.

இவரும் திருமாளிகைக்கு உடன் சென்று காணிக்கைகளை கொடுத்து விட்டு ஒரு முதாட்டி சபையின் சட்ட திட்டப்படி ரு.10/- கொடுக்கவில்லை என்பதையும் னடந்த விபரமனைத்தையும் விரிவாக ஆண்டவர்களிடம் சொன்னுர். சொல்லும் பொழுது உள்ளூர அவருக்கு பயம். ஏன் குறைவாக வாங்கினுய்? என்று தெய்வமவர்கள் கடிந்து கொள்வார்களோ என்று பயந்துதான் இதைசொன்னுர். னடந்த விபரத்தை ஆண்டவர்கள் பொறுமையாக கேட்ட பின்பு மகா இரக்கத்துடன் ''அவளிடமிருந்து போய் ஏன் பணத்தை பெற்ருய்? வாங்கிய பணத்தையும் திருப்பி கொடுத்து விட்டிருக்கலாமே!'' என்று திருவாய் மலர்நருளினுர்கள். இதை கேட்டதும் தெய்வத்திரு உள்ளத்தை புரிந்து கொள்ளாமல் தான் கண்டிப்பாக இருந்துவிட்டோம் என்பதனை அப்போது உணர்ந்து மிகவும் வருந்தினுர்.

*ஆண்டவர்கள் ஆண்டுதோறும் னமக்கு புனல் ஜென்மத்தின் போது னும் அந்த ஆண்டு முழுதும் னம்மையறியாமல் செய்த பாவங்களை தங்களுடைய தபோ பலத்தினுல் எரித்து சங்கரித்து சாம்பலாக்குகிருர்கள். னம்மடைய ஜீவனை பரிசுத்தமாகிட அதனை செய்கிருர்கள். இந்த அருங்காரண அரிய செயலுக்கு னும் கொடுக்கும் காணிக்கை ஒரு கிரயமாகுமா? ஏதோ*

*னடைமுறைக்காக சபையில் காணிக்கை என்று வைத்திருந்நார்கள். உண்மையில் அதையும் ஒருவரால் கொடுக்க இயலாத னிலைமை என்று விண்ணப்பித்தால் காணிக்கையை வஜா செய்யவும் திருவுள்ளம் கொண்டி-ருந்நார்கள் என்பதை இந்ந னிகழ்ச்சியின் அனுபவ வாயிலாக எல்லோரும் அப்போதுதான் உணர்ந்நார்கள் .*



## *னமக்கெல்லாம் விதித்திருந்நு எழுந்நருளி வந்ந னமது குரு பெருமான் னடமாடும் திருமேனி தாங்கி திருச்சன்னிதியில் எழுந்நருளி இருந்ந போது னிகழ்ந்நு வந்ந னடை முறை வழிபாட்டு னிகழ்வுகள்*

### துந்நுமி வணக்கம்

இரவு ஒண்ணரை மணிக்கு துந்நுமி தவ வணக்கம் எடுத்து வைக்கப் பெற்றிருப்பது எல்லோருக்கும் தெரியும். இரவு ஒண்ணரை மணிக்கு பூமியில் ஆலங்ஙள் மாறுகின்றன. இந்ந மாற்றத்திற்கு தக்கபடி ஆண்டவர்களின் தவம் மாறும். அதை அறிவிப்பதற்காகத்தான் துந்நுமி ஒண்ணரை மணிக்கு குறைந்நனேரம் அடிக்கப்பெறுகிறது. அதிகாலை னலரை மணிக்கு பொழுது விடியும் னேரம். ஆண்டவர்கள் தவம் முடிந்நு தூல னினைவுக்கு வரும் னேரம். அதை குறிக்கவே துந்நுமி னீண்ட னேரம் அடிக்கப் பெறுகிறது.

## வரம் தரும் இறைகுருவிற்கு செய்யும் செழும் சீதள 'பாத பூஜை'

'பாத பூஜை' தெய்வமவர்கள் மெய்வழி சாலையம்பதிக்கு வந்த பிறகு தான் எடுத்து வைக்கப் பெற்றது. ஆரம்ப காலத்தில் பிறவியர்கள் ஆண்டவர்களுக்கு மாலை அணிவிப்பதை பழக்கமாக கொண்டிருந்தனர். பின்பு பாத பூஜைசெய்பவர்கள் மட்டும்தான் ஆண்டவர்களுக்கு மாலை அணிவிக்க வேண்டும் என்று சபையில் எடுத்து வைக்கப்பெற்றது. பாத பூஜை செய்பவர்கள் நூறு ருபாய் அப்போது காணிக்கை செலுத்த வேண்டும்.

### *தெய்வீக நடைமுறை*

தோத்திரத்தின் போது உதிரிப் புஷ்பங்களை ஆண்டவர்கள் முன்னால் காலி தாம்பாளத்தில் இட்டு பூஜிப்பார்கள். இந்த உதிரிப் புஷ்பங்களை இட்டு பூஜிப்பது-பாத பூஜை மந்திரம் பூர்த்தியாகும் வரை நடைபெறும். பாத பூஜை செய்வதற்கான மந்திரம் ஆதிமெய் உதய பூரண வேதாந்தத்தில் - தெய்வத் தேடு கூடக பகுதியில் உள்ளது. பாத பூஜை மந்திரம் கீழ்கண்டவாறு உள்ளது.

*''ஆமன் வித்தாதியோதய.... இங்ஙுலாவு திகாந்த ஜகாதியந்தங்ஙளும் விளங்ஙும் - யுகங்ஙளின் அடிகோடி கோடியும் - யுகாந்த முடி கோடி கோடிகளும் கடந்து நின்ற - வெற்பே-*

*''நீதிவழி பற்றித் தாவித் தொடர்ந்து வெளியாவதற்கென நிற்தும் - என்றுங் ஙுன்றாத அன்றாதி மனுமகன் வான்முக வோடிய நெடுமுடி மெய்மைக் துணக்துன்றெனுங் துன்றேறி நின்று கூவிக்கொண்டிருந்த தலைனளில் அங்ஙே அருகில்-*

"வேதகலே பழகிய ஆதினச் சென்னெறிச் சீர் உழவுகோல் கைவர வடைந்ந பெருங்குடிபிறப்புப் பெரியதனச் சமுசாரியர்களாகிய னலவிளைவுப் பொன்னில வளத்து மானுக் கண்ணுள ரெனுங் ஙுழாங்ஙள் சூழ்ந்து விரிந்து - முன்னு பின்னு காலங்ஙளே எக்கியெட்டித் தடாவி - தங்ஙள் தங்ஙளின் இரக்கம் அடைபடுத்துக் கிடக்கும் செவ்வரி படர்ந்ந கண்களே அகட்டிக் கூர்ந்து மகா அதிசயத்துடனே அங்ஙனம் எதிர் பார்த்துக் கொண்டிருந்ந சம்பவ அதி தீர்க்கத் தெரிசனேயாவது"-

மேற்கண்ட பாத பூஜை மந்நிரத்தை தெய்வ திருக்குமாரர்கள் ஜெபிப்பார்கள். ஒரு சிலசமயம் காரிய தரிசிகளும் ஜெபிப்பார்கள். பாதபூஜை செய்யும் பிறவியர் மேற்கண்ட மந்நிரத்தை தானும் கூடவே சொல்லிவருவார்கள்.... பாத பூஜை ஆனதும் ஆண்டவர்கள் பாதபூஜை செய்த பிறவியருக்கு பிரசாதம் வழங்ஙுவார்கள். இத்துடன் பாதபூஜை னிகழ்ச்சி பூர்த்தியாகும். பாதபூஜை, புனல் ஜென்மம் கொண்டாடும் பொழுதும் ஆண்டு பூர்த்தி கொண்டாடும் பொழுதும் மற்ற சமயங்ஙளிலும் செய்வது பொன்னரங்ங தேவாலயத்தில் ஆண்டவர்கள் எடுத்து வைத்த னடைமுறையாகும்.



## இரு வினே போக்கும் திரு தரிசனே

சாலேயம்பதிக்கு வெளியிலிருந்து பிறவியர்கள் வந்நால் முதலில் வந்து ஆண்டவர்களே தரிசனே செய்வார்கள். தரிசிக்கும் போது உபதேசம் பெற்றவர்களானுல், காஷாயம் அணிந்திருக்க வேண்டும். வருபர்கள் அனேவரும் தாம்பாளத்தில் வாழைப்பழம்

இரண்டு எலுமிச்சம்பழம், மல்லிகை புஷ்பம் வைத்து ஆண்டவர்கள் திருமுன்பாக சமர்ப்பித்து வணங்குவார்கள்.

ஆண்டவர்கள் தங்களுடைய திருக்கரம் கொண்டே வாழைப்பழத்தை பிரசாதமாக கொடுப்பார்கள். 1972க்குப் பின்பு பெரும்பாலும் சன்னிதானத்தில் அப்பொழுது சதா தவக்கோலத்தில் தெய்வமவர்கள் இருந்நமையால் அருகில் இருந்ந பிறவியர்கள் பிரசாதத்தை மூல மந்திரம் சொல்லி ஆண்டவர்கள் திருமுன்பாக எடுத்துக் கொடுப்பார்கள். ஒரு சில சமயங்களில் ஆண்டவர்களே பிரசாதம் கொடுப்பதும் உண்டு. ஆண்டவர்களை தரிசிக்கும் போதெல்லாம் ஏதாவது ஒரு ஸ்தோத்திரத்தை சன்னிதானத்தில் பாடவேண்டும் என்பது தெய்வ உத்தரவு. ஆண்டவர்களை தரிசனை செய்யும் போது முகத்தை னிமிர்த்திக் காட்ட வேண்டும். முகத்தை கீழே சாய்த்துக் கொண்டு தரிசனை செய்பவர்களை ஆண்டவர்கள் கண்டித்து இருக்கிறுர்கள்.

சபையில் அங்கத்தினராகச் சேராதவர்களும் தாம்பாளம் சமர்ப்பித்து தெய்வ தரிசனை செய்திருக்கிறுர்கள். சூரிய அஸ்தமனத்திற்கு பின்பு ஆண்டவர்களை தரிசனை செய்வதை அவர்கள் விரும்புவதில்லை. ஆண்டவர்கள் பொன்னரங்க தேவாலயத்தில் இருந்நாலும் சரி, திருமாளிகையில் இருந்நாலும் சரி, ஆலயத்திற்கு வெளியே அமர்ந்நிருந்நாலும் சரி, அவர்கள் திருமுன்பு தாம்பாளத்தை வைத்து தரிசனை செய்வதுதான் வழக்கமாக இருந்நது.

சாலை வாசிகள் வெளியில் வேலைக்கு சென்றுவிட்டு வந்நால் தாம்பாளத்துடன் தரிசனை செய்ய வேண்டியதில்லை. ஆனுல் சாலை வாசிகள் வெளியூருக்குச் சென்றுவிட்டு வந்நால் தாம்பாளத்துடன் தரிசனை செய்வார்கள்.

சாலையம்பதிக்கு வந்து விட்டு செல்லும் பிறவியர்கள் தெய்வத்திடம் உத்திரவு பெற்றுத்தான் செல்ல வேண்டும். தினமும் வேலைக்காக வெளியே செல்லும் சாலை வாசிகள் ஆண்டவர்களிடம் உத்திரவு பெறவேண்டியதில்லை. வெளியூரிலிருந்து சாலைக்கு வந்த பிறவியர்கள் மட்டும் திரும்ப ஊருக்குச் செல்ல ஆண்டவர்களிடம் உத்திரவு பெற்றே செல்ல வேண்டும். அப்படி உத்திரவு கேட்கும் முன் பிறவியர்கள் செல்லும் போது விருப்பப்படி காணிக்கையை ஆண்டவர்கள் திருமுன் அவர்கள் சன்னிதானத்தில் சமர்ப்பிப்பார்கள். ஆண்டவர்களிடம் உத்திரவு பெற்று ஊருக்கு போகும் முன் மற்ற பிறவியர்களை பார்த்து "சென்று வருகிறேன் ஜீவப்பிறவியரே" என்று சன்னிதானத்திலேயே சொல்லிக் கொள்ளலாம். ஆண்டவர்களிடம் உத்திரவு பெற்றுக் கொண்டு சென்ற பின்பு வேறு யாரிடமும் சென்று சொல்லிக் கொண்டு செல்லக் கூடாது என்பது தெய்வ உத்திரவு. சில சமயங்களில் பிறவியர்கள் உத்திரவு கேட்கும் பொழுது அன்பொழுக அறிவுரைகள் வ்ழங்குவதும் உண்டு.



### னேசத்தையும் பாசத்தையும் வளர்க்கது

அனந்நர்கள் தங்களுடைய வீட்டை விட்டு வெளியே சென்றால் வேறு எங்கும் உணவு அருந்நக் கூடாது என்பதும் ஆண்டவர்கள் உத்தரவு. அப்படி ஒரு வேலை செல்ல வேண்டி இருந்நால் பிறவியர்கள் வீட்டில்தான் உணவு அருந்ந வேண்டும் உணவு அருந்நிய பின்பு பிறவியரிடம் விடைபெற்றுச் செல்லும்போது கீழ்க்கண்ட மந்நிரத்தைச் சொல்ல வேண்டும்.

*"எங்களுடைய பசிக் களைப்பினை ஆற்றிய இந்த மெய்வழி குடும்ப மக்களுடைய நல்லெண்ணங்கள் அனைத்தும் நிரம்பி நிறைவேறி வழியக்கடவது! குரு வாழ்க! குருவே துணை!"* என்று கூறுவது வழக்கமாகும்.



*தெய்வீக தவாதிக்க திருவருள் குறிப்புகள்:*

## வரம் தரும் அறவலம்

ஆண்டவர்கள் இரவில் தவ மாளிகைக்கு தவத்திற்கு செல்லுவார்கள். ஆண்டவர்கள் கற்பக தவ மறைவுக்கு செல்லுவதற்கு சிலவருடங்களுக்கு முன்பு ஆண்டவர்கள் தவ மாளிகையில் தவத்தில் இருக்கும்போது இரவு பனிரெண்டு மணிக்கு மேல் தவ மாளிகையை அறவலம் சுற்ற உத்திரவிட்டார்கள். பிறவியர்கள் தவ மாளிகையை இடமிருந்து வலம் ஏழு தடவையும், வலமிருந்து இடம் ஏழு தடவையும் அறவலம் சுற்றி வர உத்திரவிட்டார்கள். கொஞ்ச காலம் கழித்து இடமிருந்து வலம் மட்டும் ஏழு தடவை சுற்றினால் போதும் என்று உத்திரவிட்டார்கள். பின்பு ஆண்டவர்கள் யுகத் தவசை சுற்றினால் போதும் என்று உத்தரவிட்டார்கள். பின்பு ஆண்டவர்கள் யுகத் தவசை ஆலயத்திலேயே இருந்து செய்தார்கள். அப்போது பொன்னரங்கத் தேவாலயத்தை பகல் 11-45 மணியிலிருந்து 12-15 மணி வரை அறவலம் சுற்றிவர உத்தரவிட்டார்கள்.

அந்த உத்தரவின்படியே இப்போதும் அறவலம் நடந்து வருகிறது. அறவலம் ஏழுதடவை மட்டுமே சுற்ற வேண்டும். அறவலம் சுற்றுவதால் அகமுகத்தில் சுற்றி வருவதின் பலன் கிடைக்கும். அறவலம் சுற்றும்போது

பிறவியர்கள் அனைவரும் சேகரமாகச் செல்ல வேண்டும். தனித்தனியாகச் செல்லக்கூடாது. ஒரு தடவை ஆண்டவர்கள் தவனேரத்தில் திருமாளிகையில் தவத்தில் இருக்கும்போது, பிறவியர்கள் ஆலயத்தையும், திருமாளிகையையும் சேர்த்து அறவலம் சுற்றி வந்நார்கள். அந்த மாதிரி ஆண்டவர்கள் திருமாளிகையில் தவத்தில் இருக்கும்போது, அறவலம் சுற்றக்கூடாது என்றும் குரு திசையை நோக்கி அமர்ந்து, மூல மந்திரம் சொல்லிக்கொண்டிருக்க வேண்டுமென்று உத்தரவிட்டார்கள்.

ஒருநாள் ஆண்டவர்கள் பொன்னரங்க தேவாலயத்தில் கற்பக தவத்தில் இருந்து வெளிவந்தபோது மெய்வழி உறங்காப்புலி அனந்தர் 'திரைவிலகி' காகபுசுண்டர் பெருமானின் தீர்க்க தரிசனப்பாடலை கண்டு பாடிக்காட்டினார். ஆண்டவர்கள் தவத்தில் இருந்து திரையை விலக்கிக் கொண்டு வெளியில் வருவதையும், பிறவியர்கள் ஆண்டவர்கள் செய்யும் யுகத் தவ பலனை கையேந்தி பெறுவதையும் தீர்க்க தரிசனமாக இந்த பாடலில் கூறப் பெற்றிருக்கிறது. இந்த பாடலைக்கேட்டு சபையில் எல்லோரும் ஆச்சரியமுற்றார்கள். அப்போதிலிருந்து காகபுசுண்டரின் 'திரை விலகி' என்ற தீர்க்க தரிசனப் பாடல் ஒவ்வொரு நாளும் ஆண்டவர்கள் தவம் முடிந்து வந்தவுடன் பாடும்படி உத்திரவாயிற்று.



## மறலி கை தீண்டா சாலை ஆண்டவர்கள் மெய்மதத்தினருக்கு தவ ஏற்றம் தரும் மாலை வணக்கம்

பொன்னரங்க தேவாயலத்தில் நம்முடைய ஜீவ ஏற்றத்திற்காக ஆண்டவர்கள் வணக்க முறைகளை எடுத்து

வைத்துள்ளார்கள். இந்த உலகில் தோன்றிய எந்த ஒரு மதத்தினுடைய னடைமுறையிலும் இல்லாத சிறப்பு அம்சங்ஙள் னமக்கு எடுத்து வைக்கப் பெற்ற வணக்கங்ஙளில் உள்ளன.

எல்லா வணக்கமும் சூரிய அஸ்மனத்திற்குப் பிறகே எடுத்து வைக்கப் பெற்றுள்ளன. பகலில் புலன்வழி பற்றி னடப்பதால் இறைவனை ஒரு முகமாக வணங்ஙுவதற்கு பகலில் இயலாது. சூரிய அஸ்தமனத்திற்குப்பின் இறைவனை ஒரு முகமாவும் முழு மனதோடும் வணக்கம் செய்வதற்கு ஏற்ற காலம் ஆகும். வணக்கத்தில் னிற்கும் போது பிரம்மோபதேசம் பெற்றவர்கள் முழுவதும் காவி உடை அணிந்திருக்க வேண்டும். பஞ்ஞகச்சம் கட்டியிருக்க வேண்டும். இடைக்கச்சம், காஷாயம் அணிந்திருக்க வேண்டும். காஷாயத் தீட்சை மட்டும் பெற்றவர்கள் பஞ்ஞகச்சம் வெள்ளை னிறத்தில் கட்டி, இடைக்கச்சம், காஷாயம் அணிந்திருக்க வேண்டும். ஏதாவது ஒரு காரணத்தினால் இந்த உடையில் கலந்து கொள்ள முடியாமல் போனால், இவர்கள் பின்னால் னின்று வணக்கம் செய்வதே முறையாகும். அவர்களுக்கு பின் காஷாய தீட்சை பெற்றவர்கள் னிற்க வேண்டும்.

மாலை வணக்கத்தில் னிற்கும்போது, பிரம்மோபதேசம், பெற்றவர்கள் முதலில் னிற்க வேண்டும். அவர்களுக்கு பின் காஷாய தீட்சை மட்டும் பெற்றவர்கள் னிற்க வேண்டும் அதற்குபின் தான் காஷாயத் தீட்சை பெறாதவர்கள் னிற்க வேண்டும். வணக்கத்தில் னிற்கும் போது பாதங்ஙளின் பின்புறம் ஒட்டி இருக்க வேண்டும். கால்களை முன்பின்னாகவோ, கால்களை அகற்றிக் கொண்டோ னின்றால் முறையாகாது. வணக்கத்தில் னிற்கும் போது வரிசையாக னிற்க வேண்டும். வணக்கம் செய்யும்போது ஒருவரின் தேகம் மற்றவரின் தேகத்தோடு படாதபடி வணக்கம் செய்யும் இடத்திற்கு முன்னும் பின்னும், இரு பக்கங்ஙளிலும், இடைவெளி விட்டு னிற்க வேண்டும்.

தவ விரதர்கள் வணக்கம் செய்வதை பார்த்து அதன்படியே வணக்கம் செய்ய வேண்டும். தவவிரதர்கள் குனிந்து வணக்கம் செய்யும்போது, அவர்களுடன் கூடவே குனிந்து வணக்கம் செய்யவேண்டும். மந்திரம் உச்சரிக்கும் போது ஒரு முகமாக உச்சரிக்க வேண்டும். வணக்கமும், மந்திரம் ஓதுதலும் முன்னுபின்னுக செய்தல் முறையாகாது.

தவவிரதர்கள் எக்காளம் ஊதிவிட்டு ஆலயத்தை ஞேக்கி னடக்கும் போது, மூன்று எட்டு மட்டும் எடுத்து வைக்க வேண்டும். மேலும் தவவிரதர்கள் 'சத்திய ஒருமைப்பாட்டு பிறவியரே' என்று மந்திரம் உச்சிரிக்கும் போது, வணக்கத்தில் உள்ளவர்கள் தவவிரதர்கள் முகத்தைப் பார்த்து ''சத்திய உத்தம பிறவியரே'' என்று ஓத வேண்டும். தவவிரதர்கள் வணக்கம் செய்யும் போது, வணக்கத்தில் உள்ளவர்களின் முகத்தைப் பார்த்த வண்ணம் ஒரு கோடியில் இருந்து மற்ளெரு கோடி வரை தங்ஙளுடைய முகத்தை வணக்கம் செய்து கொண்டே திருப்புவார்கள்.

இந்த மந்திரம் சொல்வதற்கு காரணம் உண்டு. வணக்கத்தில் கலந்து கொள்பவர்கள் அன்றைய ளுள் ம்முழுவதும் ஒருவருக்கொருவர் அறிந்தோ, அறியாமலோ சிறுசிறு குற்றங்ஙள் செய்திருக்கலாம். அதனுல் ஆண்டவர்களின் அங்ஙங்களைப் பழித்த பாவம் இந்த மந்திரத்தை வணக்கத்தில் தவவிரதர்களைப் பார்த்து உச்சரிக்கும் போது ஆண்டவர்களின் பரிசுத்த ஆவியால் மன்னிக்கப்பெறுகின்றன.

எக்காளம் ஒலிக்கும் போது, எக்காளத்தில் இருந்து வரும் தொனியின் மூலமாக வரும் பரிசுத்த ஆவியை ஞும் காது கொடுத்து ஜீவனில் ஏற்றுக் கொள்ள வேண்டும். எக்காளம் எடுத்து ஊதிய பிறகு வணக்கத்திற்கு வருபவர்கள் அங்ஙங்ஙே அப்படியே னின்று வணக்கம் செய்தல் வேண்டும். சாலைக்குழல் வணக்கம் செய்தால் பிரளய காலத்தில் அவஸ்தை படாமல் தப்புவிக்க ஏதுவாகும். ஆகவே ஆண்டவர்கள் எடுத்து

வைத்த வணக்கங்களை முறையாக செய்வது நம் ஜீவ ஏற்றத்திற்கு நன்மை பயக்கும் செயலாகும்.



## மெய்வழி ஆண்டு தலையுக நாள்

ஒவ்வொரு மத கர்த்தர்களும், பிரம்மோபதேசம் பெற்று, வானநாட்டுக்கு குடியேறிய நாளே வைகுண்ட ஏகாதசி யென்றும், உலகத்துல் கதிர் ரா வென்றும் குறிக்கப் பெறுகிறது. ஆண்டவர்கள் திருப்பாட்டையரிடம் உபதேசம் பெற்ற நாளே நெடுநாள் கலியை சங்காரம் பண்ணிய நாள். செய்வினையோன்நெடு நாட்கலியை சீறிப் பலியிட்டு எழுந்நருளிய நாளாகும். அந்ந நாள்தான் மெய்வழி ஆண்டின் தலையுக நாளாகும். அதாவது நமது தெய்வமவர்கள் வந்நவந்ந பாரவான்களெல்லாம் எதிர்பார்த்தப்படி சகல வல்லபங்க ளெல்லாம் பெறுவதற்காக உபதேசம் பெற்று எழுந்ந நாளே தலையுக முதல் நாள் ஆகும்.



ஆதியேதுணை

# தெய்வம் அருளிய நீதி போதனைக் கதைகள்

... எத்தனை யோகோடி யின்பவெள்ளக்காட்சி
யானணைந் நேமகிழ
இத்தனை செல்வமு மெல்லோரும் காண்பீரென்
றென் தன்னு வோனவில....

- ஞான முறையீடு

## ஆண்டவர்கள் அருளியுள்ள கருத்தாழமிக்க சின்னஞ்சிறு நீதி போதனைக் கதைகள்

பொன்னரங்க தேவாலயம் முன்பாக மரத்தடியில் காற்றோட்டமாக மாலை நேரங்களில் ஆண்டவர்கள் தங்கள் பிள்ளைகளுடன் அமர்ந்து அளவளாவது வழக்கம். அனைவரும் கூடி மிக்க மகிழ்ச்சியாய் பல விவரங்களை விவரித்து விவாதித்து விமர்ச்சித்து பரிமாறிக் கொள்ளும் அந்த நேரத்தில் நிகழும் உரையாடல் வெகு சுவாரஷ்யமான சுவையான கதை. ஆம் கதை தான். அது போன்ற நேரங்களில் ஆண்டவர்கள் பல நூறு குட்டிக் குட்டி நீதிக்கதைகளை தங்கள் பிள்ளைகளுக்கு சொல்லுவார்கள். அவைகள் நகைச்சுவையாகவும் இருக்கும். ஆழ்ந்து சிந்திக்க வேண்டியவையாகவும் இருக்கம். அவர்கள் கதை சொன்னால் நவரசமும் கலந்திருக்கும். கதையை கேட்கும் போது காட்சிகளை பார்ப்பது போல் இருக்கும்.

ஆண்டவர்கள் அப்போது தம் திருமுன் அமர்ந்துள்ள மக்களிடம் கதையை மட்டும் கூறி கேட்டவர்கள் நுணிகி ஆய்ந்து சிந்தித்து அறிய வேண்டும் என்பதற்காகவே பொதுவாக நிறுத்தி விடுவார்கள்.

ஒரு சமயம் நம் தேவ கோமானவர்கள் தம் திருமுன் அமர்ந்திருந்த அனந்நாதி தேவர்களைப் பார்த்து "நாம் ஏன் உங்களுக்கு அவ்வப்போது இப்படி கதைகள் சொல்லுகிறோம் தெரியுமா?" என்று வினவினார்கள்.

பிள்ளைகள் "தெரியாது தெய்வமே" என்றார்கள்.

அதுபோது வெளியாகிய பிரம்மோதய சாலை ஆண்டவர்கள் திருவாக்கியம்

*"முன் வந்த பரவான்கள் எல்லாம் உடல், பொருள் ஆவியாகிய மூன்றையும் தத்தம் செய்பவர்களையே ஞான வித்துக்களாக தம் ஞானச் சீடர்களாக தேர்ந்தெடுத்தார்கள். எல்லாவற்றையும் தத்தம் செய்து ஞானத்திற்கு வந்த அந்த சீடர்களுக்கு உலக இச்சையோ வேடிக்கை விளையாட்டு கேளிக்கை எண்ணங்களோ இருப்பதில்லை. ஒரே ஞானத் தேட்டிலேயே அவர்கள் ஆசானுடன் ஒட்டிப்படிந்திருப்பார்கள். ஆகவே அவர்களை ஆட்கொண்ட குருபிரானுக்கு கதைகளையும் போதனைகளையும் சொல்லி சொல்லி அறிவு புகுத்தி அவர்களை வழி னடத்திச் செல்ல வேண்டிய அவசியம் உண்டாக வில்லை. ஆனால் இங்கு நாமோ இகத்தில் உழன்று கொண்டு திருமணம் செய்து காமலி தேக இன்பங்களை னுகர்ந்து கொண்டு இருப்பவர்களாகிய உங்களை பிள்ளைகளாக எடுத்துள்ளோம். அதற்காக ஞான சட்டத்தையே மாற்றி அமைத்துள்ளோம்.*

*"அப்படி மாற்றியதால் தான் னீங்கள் எல்லோரும் சபையில் சேர்ந்திருக்கிறீர்கள். ஆனால் பல வகை உலகத்தேட்டிலே புழங்கும் உங்களுக்கு மெய்யறிவின்பால் திரும்ப வைப்பதற்கு இப்படி விதவிதமான கதைகளைச் சொல்லியும் பலவிதமாக போதித்தும் தான் மாயையை விலக்கி மெய்யில் இழுத்து வைக்க வேண்டியிருக்கிறது."* என்று திருவாய் மலர்ந்நார்கள். ஆண்டவர்கள் அருளிச் செய்த அந்நக் கதைகளை தொடர்ந்து அடுத்தடுத்து பார்ப்போம்.



## ஞானம்பெற ஞானி ஒருவர் பாடுபட்டகதை

ஒரு நாள் தெய்வம் ஆலயத்தில் சந்நனம் அரைக்கும் இடத்தில் ஆசனம் போட்டு அமர்ந்திருந்நார்கள். காலை 8.00 மணி இருக்கும். அனைவரும் முன்னால் உட்கார்ந்திருந்நார்கள். ஜம்மணிப் பொதிகை பாசுரம் எடுத்து படிக்கும்படி தெய்வமவர்கள் உத்திரவிட்டார்கள். அதை ஒருவர் எடுத்து அழகாக ஓதி வந்நார். அதில் இந்ந பாசுரம் படித்தவுடன்...

*"பனஞ் னுவடி தனில் எழுதி*
*பார்த்த தனைக் கேட்டும்*
*பகரும் அனுஷ்டான ஜபப்*
*பாடுபலன் என்னே"* என்று வந்ந போது

தெய்வமவர்கள் "இதில் ஒரு பெரிய சரித்திரம் அடங்கியிருக்கிறது தெரியுமா?" என்று வினவினார்கள். எல்லோரும் "தெரியாது தெய்வமே!" என்றார்கள். தெய்வமவர்கள் 'நாம் சொல்கிறோம் கேளுங்கள்" என்று ஆரம்பித்தார்கள். "துவாபர யுகத்தில் பஞ்சபாண்டவர்கள் ஆட்சி செலுத்தி வந்நனர். அவர்கள் அரண்மனையில் 45 மணிகள் இருந்நன. அவர்கள் தினமும் 1000 ஏழைகளுக்கு உணவளித்து வந்நனர். 1000மாவது ஆள் பசி ஆறி முடிந்நதும் இந்ந 45 மணிகளும் தானாகவே அடிக்கும். இந்ந மணி அடித்ததும் 1000 பேர் சாப்பிட்டு விட்டார்கள் என்று தெரிந்து கொள்வார்கள்.

இது இவ்வாறு இருக்க பக்கத்தில் உள்ள காட்டில் ஒரு முனிவர் ஆசிரமம் கட்டி வாழ்ந்து வந்நார். அவரிடத்தில் தெய்வீக இச்சை கொண்ட ஒருவர் வந்து உபதேசம் கொடுக்க வேண்டும் என்று பணிவுடன் கேட்டார். அதற்கு அந்ந முனிவர் "நீ 12 வருடம் எனக்கு தொண்டு செய்ய வேண்டும். நான் ஏற்படுத்தும் சோதனைகளுக்கெல்லாம் தளராது இருக்க

வேண்டும். அப்படியிருந்நால் உபதேசம் கொடுக்க முடியும்" என்று சொன்னுர். அதற்கு அவர் ஒத்துக்கொண்டு குருவிற்கு சீடனுகி குருவின் மனம் கோணுமல் னடந்து வந்நார். இவ்வாறு 8 வருட காலம் ஒடிற்று. ஒரு னுள் சீடர் தண்ணீர் எடுக்கச் சென்று விட்டார். இதற்கு இடையில் குருவிற்கு னிராயாண திசைக்காலம் வந்துவிட்டது. குருவிற்கு மிகவும் விசனமாக இருந்நது. 8 வருடம் இந்ந சீடன் பணிவிடை செய்து விட்டானே. இவனுக்கு ஒன்றும் சொல்லாமல் சென்று விட்டால் எப்படி என னினைத்தார். ஒரு ஓலையை எடுத்து அதில் னும் உங்களுக்கு கொடுத்தேனே அந்ந அரிய பிரம்மோபதேசத்தை குறியீடாகக் குறித்து தன் தலைமாட்டில் வைத்துவிட்டு அடக்கம் ஆகிவிட்டார். அப்போது ஒரு கழைக்கூத்தாடிப் பெண், னல்ல இளம் பருவமுடையாள் அந்ந வழியாக வந்நாள். அவளை முனிவ்ரின் ஆசிரமம் மிகவும் கவர்ந்நது. அவள் உள்ளே வந்து பார்த்தாள். முனிவர் அடக்கமாகி இருப்பதை உணர்ந்நாள். பக்கத்தில் யோக தண்டு, கமண்டலம் முதலியவை இருந்நன. அவர் தலைமாட்டில் வைத்திருந்ந ஓலையைப் பார்த்தாள். அதை எடுத்து சுருட்டி தன் காதில் உள்ள ஓட்டையில் சொருகி வைத்துக் கொண்டாள். பின் ஒரு செடி மறைவில் போய் உட்கார்ந்து கொண்டாள். இந்ந முனிவரைச் சேர்ந்நவர்கள் யாராவது வருகிருர்களா என்று பார்த்துக் கொண்டே இருந்நாள். சிறிது னேரத்தில் தண்ணீர் எடுத்துக்கொண்டு அந்ந சீடன் ஆசிரமத்திற்கு திரும்பினுர். முனிவர் அடக்கமாகியிருப்பதைப் பார்த்ததும் அவனுக்கு திக்கென்றது. இவ்வளவு காலம் இருந்தும் னமக்கு ஒன்றும் சொல்லாமல் சென்று விட்டாரே என்று துக்கத்தில் கட்டுக்கடங்காமல் அழுதார். அடக்கத் தொட்டி ஏற்பாடு செய்து முனிவரை அடக்கம் செய்துவிட்டு சோகமாக உட்கார்ந்நிருக்கிருர். அப்போது செடி மறைவில் இருந்ந அந்ந

பெண் செடிகளை விலக்கி இவரைப் பார்க்கிறாள். சிரிக்கிறாள். இவரும் அந்த அழகியப் பெண்ணை உற்றுப் பார்க்கிறார். இவள் எப்படி இங்கு வந்தாள் என நினைக்கிறார். அவள் காதைப் பார்க்கிறார். ஒரு காதில் பழைய தோடு இருக்கிறது. ஒரு காதில் பனை ஓலை இருக்கிறது. உடனே இவரது எண்ணம் இவ்வாறு ஓடுகிறது. இவள் நமக்கு முன்னால் வந்திருக்கிறாள். நம் குரு நமக்காக எழுதி வைத்த ஓலையைத்தான் காதில் போட்டுக் கொண்டிருக்கிறாள். எப்படியாவது அந்த ஓலையை அவளிடமிருந்து பெற்றுக் கொள்ள வேண்டும் என நினைக்கிறார். எழுந்து அவளை நோக்கிச் செல்கிறார். அவளோ இவரைப் பார்த்தால் நல்ல வாலிபராகத் தெரிகிறார். இந்த ஓலையை வாங்கத்தான் நம்மிடம் வருகிறார். ஓலையைத் தரக்கூடாது. இவரை வைத்து நம் வாழ்வில் முன்னுக்கு வந்துவிடவேண்டும் என்று நினைக்கிறாள். உடனே தனது மேளத்தை கீழே வைத்துவிட்டு ஓடுகிறாள். இவரோ அந்த மேளத்தை எடுத்துக்கொண்டு அவள் பின்னால் ஓடினார். பிறகு அவளுடன் சேர்ந்து அவரும் கழைக் கூத்தாடியாகி மேளம் வாசிக்கிறார். இருவரும் கணவன் மனைவி போல் வாழத் துவங்குகிறார்கள். அவளோ இவரிடம் காது ஓலையை கொடுத்துவிட்டால் இவர் ஓடிவிடுவார் என்று தெரிந்து எது செய்யும் போதும் காதிலேயே கண்ணாக இருப்பாள்.

இப்படி 4 வருடங்கள் ஓடிவிட்டன. இவர்கள் இருவரும் பாண்டவர்கள் சாப்பாடுப் போடும் இடத்திற்குச் செல்கின்றனர். அப்போது 1000 பேருக்கு சாப்பாடு போடுவதற்காக சாதம் வடித்து சாம்பார் கொதித்துக் கொண்டிருந்தது. இவருக்கு மிகவும் பசி. அங்கு சாதம் வடித்த கஞ்சி ஒரு தொட்டியில் இருந்தது. அதில் 3 கை எடுத்துக் குடித்தார். உடனே அரண்மனையில்

கட்டப்பட்டிருந்த 45 மணிகளும் ஒலிக்க ஆரம்பித்தன. பஞ்சபாண்டவர்கள் ஐவரும் அரண்மனையை விட்டு வெளியே வந்த ஆச்சரியத்துடன் பார்க்கின்றனர். என்ன 1000 பேருக்கு சாப்பாடு போட்டால்தானே மணி அடிக்கும். இன்னும் சாப்பாடே போடவில்லையே. அதற்குள் எப்படி இத்தனை மணிகளும் அடித்தன என வியப்புடனும், பிரமிப்புடனும் நோக்கினார்கள். கழைக் கூத்தாடி கஞ்சி குடித்துவிட்டுச் சென்றுவிட்டார். சாப்பாடு போடும் இடத்திற்கு பஞ்ச பாண்டவர்கள் வந்து பார்க்கும் போது எதுவும் புரியவில்லை. உடனே தருமர் மற்ற நால்வரையும் பார்த்து நீங்கள் நால்வரும் துவாரகை சென்று கிருஷ்ண பரமாத்மாவைச் சந்தித்து இதுபற்றிக் கேட்டு வாருங்கள் என்று அனுப்பினார்.

உடனே நால்வரும் துவாரகைச் சென்று கிருஷ்ண பரமாத்மாவை வேண்டி நின்றனர். கிருஷ்ண பரமாத்மா அவர்களை உபசரித்து வந்த காரணம் என்னவென்று கேட்டார்.

அதற்கு நால்வரும் நாங்கள் தினமும் 1000 ஏழைகளுக்கு அன்னதானம் செய்வது வழக்கம். ஆயிரமாவது ஆள் சாப்பிட்டுவிட்டு சென்றால் தான் 45 மணிகளும் அடிக்கும். அப்போது 1000 பேர் சாப்பிட்டு விட்டார்கள் என்று முடிவு செய்து கொள்வோம். இன்று 45 மணிகளும் ஒரே சமயத்தில் ஒலித்தன. பசியாறும் இடத்திற்கு சென்று பார்த்தால் யாரும் இல்லை. யாரோ ஒரு கழை கூத்தாடி சாதம் வடித்த கஞ்சியைத் தான் ஒருவாய் பருகி இருக்கிறான். அவ்வளவுதான் அப்போது சாதம் ஆகிக்கொண்டிருந்தது. சாம்பார் கொதித்துக் கொண்டிருந்தது. ஒருவரும் பசியாறவில்லை. ஆனால் மணிகள் மட்டும் அடித்துவிட்டன. இதன் விபரம் எங்களுக்கு புரியவில்லை. ஏன் என்னவென்று கேட்டு வரும் படி அண்ணன் தருமர் உங்களிடம் அனுப்பி வைத்தார் என்றனர்.

அதற்கு கிருஷ்ண பரமாத்மா புன்சிரிப்புடன் எனக்கு 8 நாட்கள் அவகாசம் கொடுங்கள். நான் பதில் சொல்கிறேன் என்று சொல்லி அவர்களை திருப்பி அனுப்பிவிட்டார். உடனே கிருஷ்ண பரமாத்மா ஒரு அழகான வைரக் கம்மல் செய்து சிறந்த முறையில் கழைக்கூத்தாடினால் இந்த வைரக் கம்மல் பரிசளிக்கப்படும் என்ற அஸ்தினாபுரம் முழுவதும் தண்டோரா போடச் செய்தார். குறித்த நாளில் பஞ்சபாண்டவர்கள், கிருஷ்ண பரமாத்மாவும் ஒரு மைதானத்தில் அமர்ந்திருக்க கழக்கூத்தாடிகள் ஒவ்வொருவராக விளையாடி தங்கள் திறமைகளைக் காட்டினார்கள். முனிவருடைய சீடனும் காதில் ஓலை அணிந்த கழைக்கூத்தாடிப் பெண்ணும் வந்து தங்கள் திறமைகளைக் காட்டினர். அந்தக் கழைக்கூத்தாடிப் பெண் ஒரு உயரமான கம்பத்தின் மீது ஏறி விளையாடும் பொழுது அவள் விளையாட்டை மெச்சி தன்னிடமிருந்த வைரகம்மலை கிருஷ்ண பரமாத்மா அவளை நோக்கி தூக்கி எறிந்தார். வைர கம்மலின் அழகில் மயங்கிய கழைக்கூத்தாடிப் பெண் தன் காதில் இருந்த ஓலையைக் கீழே எறிந்துவிட்டு வைரத்தோட்டை ஆவலுடன் பற்றி எடுத்து போட்டுக் கொண்டாள். அவள் காதையே எப்பொழுதும் பார்த்துக் கொண்டிருக்கும் அந்த சீடர் ஓலை கீழே விழுந்ததும் அதை லபக்கென்று எடுத்துக் கொண்டு பயங்கரமான வேகத்தில் ஓட்டம் பிடித்தார். 10 மைல் ஓடியப் பிறகு ஒரு தனிமையான இடத்தில் வந்து அந்த ஓலையைப் பிரித்து பார்த்தார். மெய்ப் பொருளை உடனே அறிந்து கொண்டார். அப்படியே தவத்தில் ஆழ்ந்துவிட்டார். அந்த அளவு ஞான வேட்கையில் பூரணமாக ஈடுபட்டிருந்தவராகையால் அவர் ஒரு கை கஞ்சி குடித்த உடனே அவரை மெச்சி மணிகள் அடிக்க ஆரம்பித்துவிட்டன. அதனால் பஞ்சபாண்டவர்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. கிருஷ்ண பரமாத்மா பஞ்சபாண்டவர்களையும் அந்த

கழைக்கூத்தாடிப் பெண்ணையும் கூட்டிக் கொண்டு அந்த முனிவரின் சீடர் தவத்தில் அமர்ந்திருக்கும் இடத்திற்குச் சென்றார். அங்கு அவர் தவத்தில் அமர்ந்திருப்பதைப் பார்த்து "உங்கள் அரண்மனையில் சோறு வடித்திருந்த கஞ்சியை 3 கை அள்ளிக் குடித்த மகான் இவர்தான். இவருடைய பசி தீர்ந்ததினாலேயே 45 மணிகளும் ஒன்றாக ஒலித்தன என்றார். பஞ்ச பாண்டவர்கள் மிகவும் ஆச்சர்யமுற்றனர் என்று தெய்வமவர்கள் இந்தக் கதையை கூறிவிட்டு தம் பிள்ளைகளைப் பார்த்து ' இந்த முனிவர் ஞானம் பெற எவ்வளவு பாடுபட்டிருக்கிறார் பார். உங்களுக்கு இப்படி கஷ்டப்பட்டா உபதேசம் கிடைத்தது? ஞானத்தில் எவ்வளவு ஆத்திரமும் வேகமும் இருந்தால் ஓலையில் எழுதியிருந்த அந்த ஞான குறியீட்டைப் பார்த்ததுமே அந்த உத்தமச் சீடர் தவத்தில் ஆழ்ந்திருப்பார். அந்த அளவுக்கு மனதில் வேகம் ஞானத்திற்காக இருக்க வேண்டும். ஆனால் வண்ண வண்ணமாக பேசியும் காட்டியும் கூட உங்களக்கு மெய்ப் பொருள்மேல் கவனம் வரவில்லை" என்று அருளினார்கள்.



## வலையன் கதை

*சபையில் ஒருநாள் இந்த மெய்யானது ஒரு பாடும் இல்லாமல் நமக்கு வாய்த்தது என்றும் தெய்வத்தின் பேரிரக்கத்தினால் நமக்கு கிட்டியது என்றும் விட்டகுறை தொட்டகுறையால் கிட்டியது என்றும் இப்படி பலவிதமாக பிறவியர்கள் பேசினார்கள். அப்பொழுது வலையன் கதையை எடுத்து விளக்கமாக..... ஆண்டவர்கள் கீழ்கண்டவாறு அருளிச் செய்தார்கள்:*

ஒரு காட்டில் ஒரு வலையன் இருந்தான். பக்கத்து காட்டிற்குச் சென்று எலிகளை பிடித்து ஜீவனம் செய்து வந்தான். ஒரு நாள் காட்டிற்குச் சென்று வழக்கம்போல் எலிகளை பிடித்துக்கொண்டிருந்தான். ஒரு பொந்தில் உள்ள எலிகளை கையைவிட்டு வாலைபிடித்து இழுத்துக் கொண்டிருந்தான். அந்நசமயம் அக்காட்டின் வழியாக சிவனடியார் வேஷத்துடன் ஒரு சாமியார் வந்துகொண்டு இருந்தார். அப்போது காட்டில் ஒரு வலையன் நிற்பதை பார்த்து அவன் மீது அன்பு கொண்டு அந்த வலையனிடம் "மகனே நான் விபூதி பிரசாதம் கொண்டு வந்திருக்கிறேன், பெற்றுக்கொள்!" என்று கூறினார். அதற்கு அந்த வலையன் சாமியாரிடம், "நான் எலி பிடித்துக் கொண்டிருக்கிறேன் சாமி! வால் மட்டும் வந்துவிட்டது கொஞ்சம் பொறுங்கள். எலியையும் இழுத்துவிட்டு பிறகு வருகிறேன் - என்று பதில் கூறினான். அதற்கு சாமியார் வலையனைப் பார்த்து நான் அவசரமாக செல்லவேண்டுமப்பா நீ திரும்பி கையில் விபூதி பிரசாதத்தை பெற்றுக்கொள் என்று மீண்டும் கூறினார்.

அதற்கு வலையன் மீண்டும் தன் கையில் எலியின் வாலை பிடித்து கொண்டிருப்பதாகவும் அதனைவிட்டு கையை எடுத்து திரும்பினால் எலி நழுவி ஓடிவிடும் என்றும் அவசரமாக இருந்தால் விபூதியை முதுகில் போட்டுவிட்டு போங்கள் சாமி என்றும் கூறினான். அதைக் கேட்ட சாமியார் சலிப்படையாது "சரி" என்று அவ்வலையன் முதுகில் விபூதி பிரசாதத்தை தெளித்து விட்டுச் சென்றார் என்று அருளினார்கள்.

*குறிப்பு: இந்நக் கதையில் வலையன் என்று குறிக்கப்பட்டிருப்பது நம்மைதான். உலக இச்சைகளை பெரிதாகவும். இலட்சியமாகவும் கருதிக் கொண்டு மெய்யின் பால் இலட்சியம் இல்லாது ஏனோ தானோ என்று ஏதோ பொழுது போக்கில் நாம் இருந்து வருகிறோம். அப்படியுள்ள நம்மை ஆண்டவர்கள் அவர்களுடைய தனிப் பெரும் கருணையாலும் நிகரற்ற பேரிக்கத்தாலும் இந்த மெய்யை பெறுவதற்கு முதுகை காட்டினின்றாலும் பெருங்கருணையை கொண்டு நமது ஜீவனிலே ரட்சிப்பை தெளித்து நம்மையெல்லாம் ஆட்கொண்டு வருகிறார்கள் என்பதை இந்த கதை காட்டுகிறது.

## பொறாமையால் அழிந்தவர்கள் கதை

*''தனக்கு ஒரு கண் போனாலும் பரவாயில்லை. மற்றவனுக்கு இரு கண்களும் போக வேண்டும்'' என்ற பொறாமை கொண்ட மனப்பான்மையுடன் உலகில் பலர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இது தகாத வாழ்க்கை. இறுதியில் அழிவுக்குள் நுழையும் வாழ்க்கை. எல்லாரும் இத்தகைய மனப் பான்மையை விட்டொழிந்து வாழ வேண்டும்.'' இக்கருத்தினை வலியுறுத்த ஆண்டவர்கள் ஒருநாள் ஒரு கதையை உபதேசித்தார்கள்.*

மற்றவர்களுடைய வளமான வாழ்வைக் காணச் சகிக்காத ஒருவன், ஓர் ஊரில் இருந்தான். அவன் வீட்டுக்கு எதிரில் வாழ்ந்த ஒருவன் தான் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பணத்தைக் கொண்டு ஒரு சிறிய வீட்டைக் கட்டினான்.

இப்படி வீடு கட்டியதைக் கண்டு பொறுக்காத எதிர் வீட்டுக்காரன், கடவுளை நோக்கித் தவம் செய்து அவனைக் காட்டிலும் இருமடங்கான செல்வங்களைக் கடவுளிடமிருந்து வரமாகப் பெற வேண்டும் என்று எண்ணினான். அதற்காக அந்த

ஊர் மலையடி வாரத்துக்குச் சென்றான். அங்கு ஒரு நல்ல இடமாகப் பார்த்துத் தவத்தில் அமர்ந்தான். பல நாட்களாகத் தவம் செய்து கொண்டிருந்தான். இதை அறிந்த எதிர்வீட்டுக்காரன் அவனுக்கு என்ன கிடைத்துவிடுமோ என்று எண்ணி போட்டிக்கு அவனுக்கு நேர்மேலே அவனும் கடவுளை நினைத்து தவம் மேற்கொண்டான். குறிப்பிட்ட தினங்கள் கழிந்த பிறகு, ஒரு நாள் கடவுள் முதலில் தவம் இருந்தவன் முன் பிரசன்னமானார்.

"பக்தனே! என்னைக் குறித்து இவ்வளவு நாட்கள் செய்த தவத்தைக் கண்டு மகிழ்ந்தேன். நீ விரும்பிய வரங்களைத் தருகிறேன், கேள்" என்றார்.

பக்தன்: " அதிருக்கட்டும் நீங்கள் இப்போது எங்கிருந்து வருகிறீர்கள்? அதை முதலில் சொல்லுங்கள்" என்றான்.

கடவுள்: "நான் தேவலோகத்தில் இருந்து வருகிறேன்" என்றார்.

பக்தன்: "அப்படியானால் என்னைப் போலவே ஒருவன் இந்த மலையின் உச்சியில் உங்களைக் குறித்துத் தவம் செய்து கொண்டிருக்கிறானே! நீங்கள் அறிவீர்களா?" என்றான்.

கடவுள்: "அறிவேன், அவன் செய்யும் தவம் முடிய இன்னும் சில நாட்கள் இருக்கின்றன. அவை முடிந்த பிறகு உனக்கு இப்போது காட்சி தந்தது போலவே அவனுக்கும் தருவேன். இப்போது உன் தவம் பூர்த்தியானபடியால் உனக்கு வரம் தர வந்திருக்கிறேன். ஆகவே நீ விரும்பிய வரத்தைக் கேள், தருகிறேன்" என்றார்.

பக்தன்: கடவுளே! இப்போது உங்களிடம் எந்த வரத்தையும் கேட்க விரும்பவில்லை. என்னைப்போல் ஆகவேண்டும் என்பதற்காகவே உங்களைக் குறித்து

இம்மலையின் உச்சியில் ஒருவன் தவம் செய்து கொண்டிருக்கிறான். ஆகவே நீங்கள் அவன் செய்யும் தவத்துக்குப் பிரசன்னமாகி அவன் கேட்கும் செல்வங்களைப் போல இரண்டு மடங்கு செல்வங்களை எனக்குத் தாங்கள் தர வேண்டும். இதுவே நான் கேட்கும் வரம்.'' என்றான். இதற்கு கடவுள் ''சரி அப்படியே தந்நோம்'' என்றார். இதைக் சொல்லிவிட்டுக் கடவுள் மறைந்து போனார்.

சிலநாள் சென்றன. மலை உச்சியில் தவம் செய்து கொண்டிருந்நவனின் தவம் முடிந்நது. முடிவில் கடவுள் அவன்முன் தோன்றினார். கடவுள்: ''பக்தனே! என்னை எண்ணி இவ்வளவு நாள் செய்த தவத்தைக் கண்டு மகிழ்ந்நேன். உனக்கு என்ன வரம் வேண்டும், கேள் தருகிறேன்'' என்றார்.

பக்தன்: ''அதிருக்கட்டும், இப்போது நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?'' என்று கேட்டான்.

கடவுள்: அதற்கு ''தேவலோகத்தில் இருந்து வருகிறேன்'' என்றார்.

பக்தன்: ''அப்படியானால் உங்களை எண்ணி இம்மலையடிவாரத்தில் நான் இங்கு வருவதற்கு முன்பிருந்தே ஒருவன் தவம் செய்து கொண்டிருக்கிறான். உங்களுக்குத் தெரியுமல்லவா? '' என்றான்.

கடவுள்: ''ஆம்! அவன் தவம் முடிந்நதும் வரம் கொடுக்க அவனுக்குப் பிரச்சன்னமானேன் '' என்றார்.

பக்தன்: ''அவன் என்ன வரம் கேட்டான்?'' என்று கேட்டான். அதற்கு கடவுள்: ''நீ என்னிடம் எதைக் கேட்டாலும் அதைப்போல் இரண்டு மடங்காகக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுள்ளான்''. என்றார்.

பக்தன்: "அப்படியா கேட்டான்"? என்று தனக்குள் முணங்கிக்கொண்டான். இப்படிக் கேட்டுவிட்டுப் பக்தன் ஒரு கணம் யோசித்து நின்றான். நான் என்ன பெற்றாலும் அதைப்போல் இருமடங்காகப் பெறவேண்டும் என்பதையே வரமாக அவன் கேட்டு விட்டானே. இவனை எப்படிப் பழிவாங்குவது என்று சிந்தனையில் சிறிது நேரம் ஆழ்ந்தான். பிறகு ஒரு குயுக்தியான எண்ணம் உண்டாயிற்று.

பக்தன்: "இறைவா! நான் எதைப் பெறுகிறேனோ அதைப் போல் இரண்டு மடங்கு வேண்டும் என்று தானே மலையடிவாரத்தில் தவம் செய்பவன் கேட்டிருக்கிறான். ஆகவே என்னுடைய இரு கண்களில் ஒன்றைக் குருடாக்கி விடுங்கள்" என்றான்.

கடவுள்: " ம். அப்படியே தந்தோம்" என்றார். உடனே வரம்கேட்ட பக்தனின் இரு கண்களில் ஒன்று குருடாயிற்று. அதே நேரத்தில் மலையடிவாரத்தில் காத்துக் கிடக்கும் பக்தனின் இரு கண்களும் குருடாயின.

பக்தன்: "இறைவா! என்னுடைய இரண்டு கைகளில் ஒன்றை முடமாக்க வேண்டும்" என்றான்.

கடவுள்: "அப்படியே தந்தோம்" என்றார். பக்தனின் இரு கரங்களுள் ஒன்று முடமாயிற்று. அதே நேரத்தில் மலையடிவாரத்தில் உள்ள பக்தனின் இரு கரங்களும் முடமாயின.

பக்தன்: "இறைவா! என்னுடைய இரண்டு கால்களில் ஒன்று முடமாக வேண்டும்" என்றான்.

இறைவன்: "அப்படியே தந்தோம்" என்றார். உடனே பக்தனின் இரு கால்களில் ஒன்று அக்கணமே முடமாயிற்று. அதே நேரத்தில் மலையடிவாரப் பக்தனின் இரு கால்களும்

முடமாயின. "இறைவா எனக்கு இம்மூன்று வரங்களே போதும்" என்று பக்தன் கூறியவுடனே இறைவன் மறைந்தார்.

ஒரு கண், ஒரு கரம், ஒரு கால் இவை போவதையே வரமாகப் பெற்ற பக்தனின் மனத்தில் குரூரம் கலந்த மகிழ்ச்சி நிலவியது.

தன் ஒரே காலால் நொண்டி நொண்டி நடந்தவாறே மலை உச்சியில் இருந்து மிகவும் சிரமப்பட்டுக் கீழே இறங்கினான்.

தான் பெற்றதைப்போல் இருமடங்கு பெற வேண்டும் என்பதையே வரமாகக் கேட்ட தன் எதிர்வீட்டுக் காரனைப் பார்த்து விட்டுபோக வேண்டும் என்ற அவா வெறியுணர்வுடன் அடிவாரத்திற்கு வந்தான்.

ஓர் அடி கூட இங்கு மங்கும் நகரமுடியாமல் இரு கண்களற்ற குருடனாய், இரு கை கால்கள் அற்ற முடவனாய்க் கிடந்தவனைப் பார்த்தான். "என்ன! நான் கேட்பதைப் போல் இரு மடங்கு பெறவேண்டும் என்பதையே வரமாகக் கேட்டாயே! பார்த்தாயா! இரு மடங்கு!" என்று குரூரமாகக் கூறிக்கொண்டே நொண்டி நொண்டி தன் வீடு போய்ச் சேர்ந்தான்.

*பொறாமையின் காரணமாக இவ்வாறு அழிந்தவர்களின் கதையைத் தேவபிரானவர்கள் அருளிச் செய்தது ஏன் என்பது பற்றிய எண்ணம் எப்போதும் நமக்கு இருக்கவேண்டும்.*



## பூ மணத்தைப் பொறுக்காதவள் கதை

தினமும் கருவாடுகளைக் கூடையில் வைத்து விற்பனை செய்யும் ஒருத்தி ஓர் ஊரில் இருந்தாள். தினமும் காலையில் இவள் தன் கிராமத்தைவிட்டுப் பல வெளியூர்களுக்குச் சென்று கருவாடு விற்றுவிட்டு வீடு திரும்புவது இவள் வழக்கம்.

ஒருநாள் இவள் கருவாடு விற்று வீடு திரும்பிக் கொண்டிருந்தாள். இவள் இருந்ததோ வெளியூர். பொழுது சாய்ந்து கொண்டிருந்தது. மேலும் அன்று கனத்த மழையும் பெய்ய ஆரம்பித்துவிட்டது. நிற்காமல் வெகு நேரம் மழை பெய்து கொண்டிருந்தது. ஆகவே கருவாடு விற்றுவிட்டு வழக்கம்போல அன்று தன் சொந்த கிராமத்திற்குப் போக முடியவில்லை. வெளியூரிலேயே அவள் தங்க நேர்ந்தது. அவளிடம் வழக்கமாகக் கருவாடு வாங்கும் ஒரு வாடிக்கையாளரின் வீட்டிற்குச் சென்றாள். விடாது பெய்யும் மழையின் காரணமாகத் தன் சொந்த கிராமத்திற்குப் போக முடியவில்லை என்றும் அதனால் இன்றிரவு மட்டும் வீட்டில் தங்க இடம் கொடுங்கள் என்றும் கேட்டாள். அந்த வீட்டுக்காரர் தன் வீட்டு வெளித்திண்ணையைக் காட்டி "அங்கு தங்கிக் கொள்" என்றார்.

அந்த வீட்டுக்காரர் பூக்களை மாலையாகக் கட்டி விற்பனை செய்யும் தொழில் செய்பவர். அவர் வீட்டுத் திண்ணையின் அடிப்பாகத்தில் சிறு சிறு அறைகளைப் போல அமைத்து அவற்றில் அன்றன்று விற்பனையான பூமாலைகள் உதிரிப்பூக்கள் போக எஞ்சியவை எப்போதுமிருக்கும். பூக்களும் மாலைகளும் எப்போதும் அங்கிருந்து கொண்டிருப்பதால் அவற்றின் நறுமணம் கம்மென்று வீசிக்கொண்டிருக்கும். கருவாடு விற்பனை செய்பவள் அத்திண்ணையின்மேல் தன் கருவாட்டுக் கூடையை ஒரு பக்கமாக வைத்துவிட்டு மற்றொரு பக்கம் தலை வைத்துப்படுத்தாள். இரவு பல மணி நேரமாகியும் அவளுக்கு தூக்கமே வரவில்லை, திண்ணையின் கீழ் உள்ள அறைகளில் இருந்து வரும் பல மலர்களின் நறுமணம் அவள் மூக்கைத் துளைத்தன.

காலமெல்லாம் கருவாட்டு வாசனையையே நுகர்ந்து கொண்டு காலம் கழிக்கும் அவளுக்கு அன்று ஒரு புதிய அனுபவமாக இருந்தது. கருவாடு நாற்றத்தையே நுகர்ந்து பழக்கப்பட்டுப்போன அவளுக்கு மலர்களில் இருந்து கமழும் நறுமணத்தினைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. இதன் காரணமாகவே இரவு நெடுநேரமாகியும் தூக்கம் வராமல் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தாள். இச்சமயத்தில் அவளுக்குத் திடீரென்று ஒரு எண்ணம் எழுந்தது. திண்ணையில் ஒரு பக்கமாக வைத்திருந்த கருவாட்டுக் கூடையை எடுத்தாள். விற்றது போக கூடையில் கொஞ்சும் கருவாடு இருந்தது. அதை அப்படியே தன் தலையில் கவிழ்த்துக் கொண்டு மீண்டும் படுத்தாள்.

திண்ணையின் அடிப்பக்கம் இருந்து வீசிக்கொண்டிருந்த மலர்களின் மணத்தினை அக்கூடை தடுத்துக் கருவாட்டு வாசனையை வீசச் செய்தது. அவ்வளவுதான். இவ்வளவு நேரம் அவளைத் தூங்கவிடாமல் மூக்கைத் துளைத்துக் கொண்டிருந்த மலர் மணத்தை அக்கூடையினுள் வீசிய கருவாட்டு வாடை மிகைத்து நின்றது. சிறிது நேரத்தில் அக்கூடை வாடையின் வீச்சினால் அவள் நீண்ட தூக்கத்தில் ஆழ்ந்தாள்.

*ஆண்டவர்கள் உபதேசித்த இக்கதை கருத்தினைச் பற்றிய ஆண்டவர்கள் வாக்கியம்: ''சினிமா முதலியவற்றைப் போய்ப் பார்த்துச் சந்தோஷப்படுகிறானே. அவை அவ்வளவும் அழிந்து போகிற இன்பந்தானே? நித்திய அதிசயப் பேரின்பம் அளிக்கும் அறிவு வல்லபத்தை அடைய இங்கு ஏன் வர மாட்டேன் என்கிறான்? அதிசயப் பிறப்பை அடைய வந்தவனுக்கு அதிசயச் செயல் வரவேண்டும். அதிசய வாழ்வில் புக வேண்டும். காலமெல்லாம் கருவாடே தின்று கருவாட்டு வாசனையே தேடுகிறவனுக்கு கஸ்தூரி வாசனை பிடிக்கவில்லை. இதைக் கண்டு நாம் வருந்தாமல் எப்படி இருக்க முடியும்?'' என்பது ஆகும்.*



# இரு அழகிகள் கதை

ஓர் ஊரில் ஒரு முனிவர் வாழ்ந்து வந்நார். அவர் இருந்த ஊரில் இரு அழகிகள் இருந்தார்கள். அந்த அழகிகளுக்குள் வழக்கொன்று எழுந்தது. மிகுந்த அழகு உடையவள் யார்? என்பதே வழக்கு.

தங்களுக்குள் உண்டான இந்த வழக்கினைத் தீர்த்துக் கொள்வதற்காக அந்த இரு அழகிகளும் ஒரு முனிவரிடம் வந்தார்கள். வந்து தாங்கள் இருவர்களுக்கும் னேர்ந்த வழக்கினைத் தெரிவித்தார்கள்.

ஒவ்வொருத்தியும் தன் அழகுச் சிறப்பினை எடுத்துக் காட்ட வேண்டி முனிவரின் எதிரே னடந்து காட்டினார்கள்.

முனிவர் அந்த இரு அழகிகளின் னடையினைப் பார்த்தார். ஒவ்வொருத்தி னடந்து வரும் பாங்கினையும், போகும் பாங்கினையும், பார்த்துவிட்டு அவ்விரு அழகிகளிடமும் ''உங்கள் இருவரில் ஒருத்தி முன்னழகி, மற்றொருத்தி பின்னழகி'' என்று கூறித் தீர்ப்பளித்தார்.

*இது தான் கதை. என்று ஆண்டவர்கள் அருளிச்செய்து விட்டு* ''முன்னழகி சீதேவி. பின்னழகி மூதேவி''. வீட்டுக்கு வரும்போது முன்னழகி அழகானவள். வீட்டைவிட்டு போகும் போது பின்னழகி அழகானவள்'' *என்றும் திருவாய் மலர்ந்தார்கள்.*

*''தெய்வீகமான எண்ணம் சொல், செயல் ஆகியவற்றைத் தான் வரும் போதே தந்துவிடும் இயல்புடையவளே சீதேவி. ஆகவே முனிவர் இவளை முன்னழகி என்றார்.*

*சீதேவி மெய்ஞ்ஞான வாழ்வுக்கு என்றும் ஆக்கமும் ஊக்கமும் தருபவளாயிருப்பாள். அவள் யாரிடம் வந்நாலும் தெய்வீகமான எண்ணங்களை எண்ணும்படி செய்வாள். அவள் வரும் போதே தெய்வ எண்ணம், பேச்சு, பாடல், விசாரணை யாவும் செயலாகிக் கொண்டிருக்கும்.*

*சீதேவியானவள் சத்துவ குணத்தினைத் தெய்வ அருளால் - தயவால் னமக்குள் உண்டு பண்ணுகின்றாள்.*

*அவள் இருக்கும் மட்டும் மற்றொரு அழகி (மூதேவி) வரமாட்டாள், வரமுடியாது. இச்சீதேவி எப்போது செல்வாள் எனக் காத்துக் கொண்டிருப்பாள் மூதேவி.''*

முனிவர் வாயிலாக னமது தெய்வமவர்கள் இந்தக் கருத்தினை வெளியாக்கினார்கள்

# விறகு வெட்டியின் கதை

ஓர் ஊரில் விறகுவெட்டி ஒருவன் இருந்நான். அவனுக்கு மனைவியும் ஏழு குழந்நைகளும் இருந்நார்கள். இவர்களைக் காப்பாற்ற அவன் கடுமையாக உழைக்க வேண்டி இருந்நது. அவனுக்குத் தெரிந்ந ஒரே தொழில் விறகு வெட்டி விற்பது தான். அவன் வாழந்ந ஊருக்குப் பக்கத்திலே இருக்கும் காட்டிற்குச் சென்று, தினந்நோறும் விறகு வெட்டி வந்நு அதை விற்று ஜீவனம் னடத்தி வந்நான். தினமும் அவன் மனைவி, தன் கணவனுக்கு சோற்றைக் கட்டிக் கொடுப்பாள். அதையும், விறகு வெட்டுவதற்கு வேண்டிய சாமான்களையும் எடுத்துக்கொண்டு காட்டிற்குள் செல்வான். மரத்தை வெட்டி வீழ்த்திய பின், அதைச் சிறு சிறு விறகுகளாகப் பிளப்பான். இதற்குள் மதிய னேரம் வந்துவிடும். மனைவி கொடுத்த கட்டுச் சோற்றை எடுத்துக் கொண்டு, பக்கத்தில் னீர் இருக்கும் இடமாகச் சென்று, அங்கு அமர்ந்நு உணவை உண்டுவிட்டு, மீண்டும் வேலை செய்த இடத்திற்கு வருவான். வெட்டிய விறகுகளை எல்லாம் சேர்த்து, ஒரு சுமையாகக் கட்டித் தலையில் வைத்துக் கொண்டு, ஊர் திரும்புவான். இதற்குள் பொழுது சாய்ந்நு விடும்.

விறகு விற்ற பணத்தைக் கொண்டு கடைக்குச் சென்று, உணவுக்கு வேண்டியவற்றை எல்லாம் வாங்கிக் கொண்டு வீடு திரும்புவான். இவ்வாறாகத் தினந்நோறும் விறகு வெட்டி விற்றே, தன் குடும்பத்தை னடத்தி வந்நான். ஒரு னாள், வழக்கம் போல், விறகு வெட்டக் காட்டிற்குச் சென்றான். அன்று வெகுதூரம் காட்டிற்குள் சென்றுவிட்டான். மதியம்வரை விறகு வெட்டியின் பசியாறும் னேரம் வந்நதும், சோற்றுமூட்டையை எடுத்துக்கொண்டு பக்கத்தில் னீர் இருக்கும் இடமாகத் தேடிச் சென்றான். அன்று இவன் னீரைத் தேடிச் சென்ற இடம், மலர்கள் பூத்துக் குலுங்கும் இடமாகவும், அமைதி தவழும் இடமாகவும்

இருந்நது. இவன் வியந்ந வண்ணமாக, மேலும் சென்றபோது, அங்கே ஒரு முனிவர் தவத்தில் இருப்பதை கண்டான். விறகுவெட்டி, முனிவர் அருகே சென்முன். அவர் தவமிருக்கும் கோலங் கண்டான். தான் கொண்டு வந்ந சோற்று முட்டையை அவர் எதிரில் வைத்துவிட்டு, எப்படி அவரைச் சாப்பிடச் சொல்வது என்று எண்ணிஞன். அவரை விட்டுவிட்டுத் தான் மட்டும் சாப்பிட மனமில்லாதவனுக இருந்நான்.

சிறிது னேரத்தில் முனிவர் தவத்தில் இருந்நு இறங்கி கண் திறந்நு பார்த்தார். எதிரே விறகு வெட்டி னின்று கொண்டிருப்பதைக் கண்டதும். "னீ யாரப்பா? எங்கு வந்நாய்?" என வினவிஞர். "ஞன் இந்ந காட்டில் விறகு வெட்டி வாழ்பவன். சாப்பிட னீரைத் தேடிக் கொண்டு, இன்று இப்பக்கமாக வந்நுவிட்டேன். தாங்கள் தவத்தில் இருப்பதைக் கண்டதும் இங்கு வந்நேன். இவ்வுணவைத் தாங்கள் சாப்பிட வேண்டும்" என்று பணிவுடன் கேட்டு னின்முன். விறகு வெட்டி உள்ளன்பு கொண்டு கூறுவதை அறிந்ந அம்முனிவர், அவன் வைத்த சோற்றில் சிறிதளவு எடுத்துக்கொண்டு மீதியை, அவன் உண்ணுமாறு பணித்தார். பிறகு அம்முனிவரிடம் விடை பெற்று மீண்டும் தான் விறகு வெட்டிய இடத்திற்கு வந்நு, விறகுகளையெல்லாம் கட்டாகக் கட்டி எடுத்துக்கொண்டு வழக்கம் போல் ஊர் திரும்பிஞன். காட்டில் னடந்நவற்றை மனைவியிடம் சொல்லி அன்று முதல் முனிவருக்கும் சேர்த்துச் சோற்றை மூட்டையாகக் கட்டி கொண்டுச் செல்வான். முன்ஞள் செய்தது போலவே, மறுஞளும் முனிவருக்கு உணவு எடுத்துச் சென்று கொடுத்தான். இப்படியே இருந்நு அவருடைய உண்மையான மெய்ஞ்ஞான சீடஞகவும் ஆகி இருந்நு வந்நான்.

இப்படி இருந்நு வரும்போது ஒரு ஞள் விறகு வெட்டி காய்ச்சலில் படுத்துவிட்டான். ஆகவே விறகு வெட்டக்

காட்டிற்குச் செல்ல முடியவில்லை. முனிவருக்குச் சோறு கொண்டுபோக வேண்டுமே என்ன செய்வதென்று கவலையுற்று தன் மனைவியையே அன்று தனக்குப் பதிலாகச் சோறு கொண்டு போகுமாறு சொன்னான். மனைவியும் அதற்கு சம்மதித்தாள். விறகு வெட்டி தான் வழக்கமாகக் காட்டிற்குச் செல்லும் வழிகளைப் பற்றி அவளுக்கு விளக்கமாகக் கூறினான். காட்டகத்தே முனிவர் தவத்தில் இருக்கும் இடத்தின் அடையாளங்களையெல்லாம் விபரமாகக் கூறி மனைவியை அனுப்பி வைத்தான். விறகு வெட்டியின் மனைவி, சோற்று முட்டையை எடுத்துக்கொண்டு காட்டிற்கு சென்றாள். தன் கணவன் சொன்ன அடையாளங்-ங்களையெல்லாம் வைத்துச் சென்று கொண்டிருக்கும்போது வழியில் ஓர்ஆறு குறுக்கிட்டது. அந்த ஆற்றைக் கடந்து தான் செல்ல வேண்டும். அது சமயம் அந்த ஆற்றில் நீர் இருகரைகளையும் தொட்டுக் கொண்டு மிகவேகமாக ஓடிக்கொண்டிருந்தது. இறங்கி நடந்து செல்லமுடியாதபடி வெள்ளம் ஓடிக்கொண்டிருந்தது.விறகு வெட்டியின் மனைவி, ஆற்றங்கரையில் நின்று ஓடும் நீரைப் பார்த்தாள். ஆற்றைத் தாண்டவே முடியாது என்பது அறிந்தாள். முனிவருக்கச் சோற்றைக் கொண்டு போய் கொடுக்க வேண்டுமே என்ன செய்வது என்று தெரியாமல் சிறிது நேரம் இருந்துவிட்டு, மீண்டும் தன் கணவரைக் கண்டு கேட்போம் என்று எண்ணியவளாய், வீட்டிற்கே திரும்பி வந்துவிட்டாள்.

''போகும் வழியில் உள்ள காட்டாற்றில் நீர் இரு கரைகளையும் தொட்டுக் கொண்டு ஓடுகின்றது. இறங்கவே முடியவில்லை. அதனால் திரும்பி வந்து விட்டேன்'' என்று தன் கணவனிடம் வருந்தியபடி கூறினாள். விறகுவெட்டி சிறிது யோசித்து பின், ''நீ சோற்றை எடுத்துக் கொண்டு மீண்டும் செல். முதலில் என்னையும் பின் முனிவரையும் நினைத்துக்

கொண்டு ஆற்றில் இறங்கு. அந்த ஆறு உனக்கு வழி விடும். பிறகு முனிவரிடம் உணவைக் கொடுத்துவிட்டு வரலாம்'' என்று கணவன் கூறியதைக் கேட்டவுடன் அதன்படியே மீண்டும் உணவுடன் காட்டிற்குச் சென்றாள். ஆற்றை அடைந்ததும், தன் கணவனை எண்ணினாள். பின் காட்டில் வாழும் முனிவரை எண்ணினாள். இவ்வாறு எண்ணிக்கொண்டே ஆற்றில் இறங்கத் தொடங்கினாள். என்ன வியப்பு?

ஓடும் ஆற்றின் நடுவே, நடந்து செல்லும் அளவிற்கு, நீர் இல்லாத நடைபாதை உண்டாயிற்று. கணவருடன் முனிவரையும் எண்ணிக்கொண்டே ஆற்றைக் கடந்தாள். முனிவர் தவம் செய்யும் இடத்தின் அடையாளங்களைக் கண்டு கொண்டு, முனிவரை அடைந்தாள். தவம் செய்யும் முனிவர் முன் சோற்றை வைத்து விட்டு கைகட்டி நின்று கொண்டிருந்தாள். சிறிது நேரத்தில் முனிவர் கண்திறந்து பார்த்தார். ''நீ யாரம்மா? இங்கு எதற்கு வந்தாய்?'' என்றார். ''தினமும் இங்கு தங்களைக் காண வரும் என் கணவர், காய்ச்சலில் படுத்துக் கொண்டிருக்கிறார். ஆகவே அவர் வர முடியவில்லை. அதனால் இன்று தங்களுக்காக உணவு நானே கொண்டுவந்திருக்கிறேன். இந்த உணவை உண்டு பசியாறுங்கள்'' என்று கூறிப் பணிவுடன் நின்றாள்.

முனிவர் அவள் தந்த உணவினை ஏற்றுக் கொண்டதும் அவரிடம் விடைபெற்று மீண்டும் வந்த வழியே நடந்தாள். ஆற்றின் கரையை அடைந்ததும், தன் கணவர் சொல்லி அனுப்பியபடியே முதலில் தன் கணவரையும், பின் தற்போது கண்ட முனிவரையும் எண்ணிக்கொண்டே நீரில் இறங்கினாள். ஆனால் ஆறு அவளுக்கு வழிவிடவில்லை. நீர் மிக வேகமாக ஓடியவண்ணம் இருந்தது. அதனால் ஆற்றில் இறங்கவே முடியவில்லை. என்ன செய்வதென்று தெரியாமல் சிறிது நேரம்

விழித்தாள். மீண்டும் திரும்பிச் சென்று முனிவரிடம் கேட்போம் என்றெண்ணியவளாய் திரும்பி னடந்நாள். முனிவரைக் சந்நித்தாள். "சுவாமி! போகும் வழியில் உள்ள ஆற்றில் னீர் வெள்ளமாய் ஓடுகிறது. கடந்நு செல்ல முடியவில்லை சுவாமி" என்ருள். அதறகு "னீ வரும்போது எப்படி வந்நாய்?" என்று முனிவர் கேட்டார்.

அதற்கு அவள் "காலையில் முதலில் வரும்போது வெள்ளம் இப்படித்தான் ஓடியது. ஞன் என் வீட்டிற்கு திரும்பிச் சென்று என் கணவரிடம் கூறினேன். அதற்கு அவர், முதலில் என் கணவரையும் பின் தங்ஙளேயும் னிஜனத்துக் கொண்டு ஆற்றில் இறங்ஙு. ஆறு உனக்கு வழி விடும் என்று சொன்ஞர். ஞன் அவர் சொன்னபடியே என் கணவரையும், பிறகு தங்ஙளேயும் னிஜனத்துக் கொண்டபடியே ஆற்றில் இறங்ஙினேன். அதுபோலவே ஆறும் வழி விட்டது. இப்போதும் அதே போல் எண்ணிக் கொண்டு சென்றேன். ஆஞல் ஆறு வழிவிடவில்லே. ஞன் எப்படிப் போவது சுவாமி" என்ருள். முனிவர் இள னகை பிறக்க அவளே ஞேக்கி "இப்போது என்ஜன மட்டுமே னிஜனத்துக் கொண்டு ஆற்றில் இறங்ஙு, ஆறு உனக்கு வழிவிடும். னீ வீடு போய்ச் சேர்வாய்" என்ருர். முனிவர் சொன்னபடியே மீண்டும் திரும்பி ஆற்றில் இறங்ஙும்போது, முனிவரை மட்டுமே மனதில் னிஜனத்துக்கொண்டு னடந்நாள். ஆறு அவளுக்கு வழி விட்டது.

பின், அவள் தன் வீடு வந்நு சேர்ந்நாள். காட்டில் னடந்நதையெல்லாம் தன் கணவனிடம் ஒன்று விடாமல் கூறிஞள். கூறிவிட்டு "ஞன் உங்ஙளே இரண்டே இரண்டு கேள்விகள் கேட்க விரும்புகிறன். கேட்க அனுமதி தருவீர்களா?" என்ருள். "என்ன கேட்கப் போகிறாய்"? என்ருன் கணவன். " வரும்போது ஆறு ஏன் வழிவிடவில்லே?

இரண்டாவதாக எனக்குத் தெரிந்தது முதல், தாங்கள் காலையில் காட்டுக்குப் போய் விறகுவெட்டிக் கொண்டு மாலையில் திரும்பி வீட்டிற்கு வருவீர்கள். இப்படி இருக்கும் உங்களை, எண்ணிய மாத்திரத்தில் முதலில் ஆறு எப்படி வழிவிட்டது? சாதாரண விறகு வெட்டும் தங்களுக்கு இவ்வளவு பெரிய சக்தி எப்படி வந்தது?'' என்று ஆச்சரியம் பிறக்கக் கேட்டாள்.

''இவைகளுக்கு அவசியம் விடை தெரிந்து கொள்ள வேண்டுமானால் நான் இப்போது சொல்லுகிறபடி நீ செய்ய வேண்டும்'' என்றான். ''அப்படியே செய்கிறேன்'' என்றாள் ''இவ்வூரில் இருக்கும் நாடகக் கொட்டகையில் தினமும் நாடகம் நடக்கிறது. இன்று அங்கு நடக்கும் நாடகத்தை நீ பார்த்துவிட்டு வரவேண்டும். ஆனால் ஒரு நிபந்தனை. நீ நாடகம் பார்க்கப்போகும்போது, ஒரு சொம்பில் நீர் நிரம்ப எடுத்துக்கொண்டு போகவேண்டும். அச்சொம்பில் உள்ள நீரில், ஒரு துளிகூட வெளியே சிந்தக் கூடாது. அந்தச் சொம்பைக் கையிலேயே வைத்துக் கொண்டு நாடக கொட்டையில் நடக்கும் நாடகத்தை பார்த்துவிட்டு வரவேண்டும். மேலும், பார்த்த அந்த நாடகத்தின் முழுக்கதையையும் என்னிடம் வந்து சொல்லவேண்டும். இதை செய்து முடித்த பிறகு, உன் கேள்விகளுக்கு நான் விடை கூறுகிறேன்'' என்று சொன்னான்.

சொம்பில் நீர் சிந்தாவண்ணம் கவனமாக ஒரு டிக்கட் வாங்கி கொட்டகையினுள் சென்றாள். அவள் கவனம்மெல்லாம் சொம்பின் மேலேயே இருந்ததால், நாடகம் பார்க்க வேண்டும் என்பதில் இல்லை. நாடகம் பார்த்துக் கொண்டிருந்தால் சொம்பு சிறிது சாய்ந்தால் கூட அதில் உள்ள நீர் கீழே சிந்தி விடுமல்லவா? ஆகவே அவள் அங்கு நடந்து கொண்டிருக்கும் நாடகத்தைக் சிறிதும் கவனமாக கவனிக்க இயலவில்லை. நாடகம்

முடிந்தவுடன், சொம்பில் உள்ள நீர் ஒரு துளி கூடச்சிந்நாத வண்ணம் அதிஜாக்கிரதையாக வீடு வந்து சேர்ந்தாள். கணவனிடம், தான் நாடகக் கொட்டகையுள் சென்று இருந்த போதும், நாடகத்தைப் பார்க்கவில்லையென்றும், அதனால் நாடகத்தின் கதை என்னவென்று தெரியாதென்றும், சொம்பில் உள்ள நீர் சிந்நாமல் இருப்பதில் மட்டும் கவனம் சென்றதால் அந்த ஒன்றை மட்டுமே கவனிக்க முடிந்தது. நாடகத்தை கவனிக்கத் தன்னால் முடியவில்லை'' என்றும் கூறினாள்.

அப்போது கணவன் நீ என்னைக் கேட்ட முதல் கேள்விக்குரிய பதில், என்னவென்றால் இதுவரை என்னையே நம்பி எனக்கு மட்டுமே உன் கடமைகளைச் செய்து கொண்டு வந்திருக்கிறாய். நான் தெய்வமாக வணங்கும் முனிவரை நீ பார்த்ததில்லை. ஆகவே இங்கிருந்து போகும் போது குறுக்கிட்ட ஆற்று வெள்ளத்தைக் கடக்க ''முதலில் என்னை நினைத்தக் கொண்டு பின் முனிவரை எண்ணி ஆற்றில் இறங்கிச் செல் ஆறு வழிவிடும்'' என்றேன். முனிவரின் பக்தனாகிய எனக்கு முனிவர் அருளால் அதன் படியே ஆறு உனக்கு வழிவிட்டது. ஆற்றைக் கடந்து சென்று, முனிவரைச் சந்தித்தாய். அவர்களைச் சந்தித்த பிறகு அவர்கள் தான் உனக்கு மெய்யான தெய்வம் ஆவார். அவரை நீ தெரிந்தவர் ஆகிவிட்டதாலும் எனக்கு அவர் குரு ஆகியதாலும் அவரை மட்டும் தான் நீ நினைத்திருக்க வேண்டும். முனிவர் அதனை உனக்கு பிறகு உணர்த்தியதால் அவரை மட்டுமே நினைத்துக் கொண்டு வீடுவந்து சேர்ந்திருக்கிறாய்.

இரண்டாவது உனது கேள்விக்கு பதிலை சொல்கிறேன் கேள். ஒரு சொம்பு நிறைய நீர் எடுத்துக் கொண்டு நாடகம் பார்க்கச் செல்ல வேண்டும். தரையிலும் சொம்பை வைக்கக் கூடாது. நீர் ஒரு துளியும் சொம்பிலிருந்து சிந்நக்கூடாது. அதே

னேரத்தில் ஞடகத்தையும் பார்த்துக் கதையைச் சொல்ல வேண்டும் என்ற னிபந்நனே விதித்து, உன்னே ஞடகம் பார்க்க அனுப்பினேன். சொம்பில் உள்ள னீர் ஒருதுளியும் கீழே சிந்நாதபடிக்குக் கவளம் செலுத்த முடிந்நதே தவிர ஞடகத்தை பார்த்துக் கதையை உன்ஞல் தெரிந்நு கொள்ள முடியவில்லே. இந்த உலகவாழ்வில் உனக்கு ஞனும் னம் பிள்ளேகளும், குடும்பமும் மட்டுமே போதும் என்று எண்ணிக் கொண்டு ஒரே வாழ்க்கை வாழ்கிருய். அதாவது இரண்டு வேலேகள் ஒரேனேரத்தில் செய்ய முடியாது. ஆனுல் ஞனே, குடும்ப வாழ்வோடு மெய்ஞ்ஞான வாழ்வும், வாழபழகி வருகிறேன். சாதாரண விறகு வெட்டியான ஞன் இரண்டுவேலேயை எடுத்துக்கொண்டு மரம் வெட்டி பிழைப்பதுடன் கடினமான ஞான வாழ்வும் வாழ்ந்நுவருகிறேன். அப்படி கடுமையாக அந்ந ஞான வாழ்வை வாழ்ந்நு வந்நதால் தான் தான் ஆற்றில் னீர் விலகும் அதிசயம் னிகழ்ந்நது. அதை னீ உணரவே அப்படி செய்யச் சொன்னேன் என்ருன்.

இந்ந கதையில் இருந்நு அன்ருடம் விறகு வெட்டிப் பிழைக்கும் விறகு வெட்டியான ஒரு ஏழைக்கு கூட ஒரு மெய்க்குருவாக வந்ந முனிவர் வாயிலாக, ஆறு விலகி செல்லும் அளவிற்கு சித்தி கைவரவாகிறது என்பதையும், வேண்டும்போது தம்தம் மெய்ஞ்ஞான குரு பெருமானே மட்டுமே னினேத்து வேண்ட வேண்டும் என்றும், கணவன் மனேவி ஆனுலும் குரு பக்தி தான் முக்கியமானது என்பதையும், தெய்மவர்கள் விளக்கி அருளி இருக்கிருர்கள் என்று மேற்கூறிய கதை காட்டுகிறது.



## மீனுசை வீணுசையான கதை

ஓர் ஊரில் இரண்டு னண்பர்கள் இருந்நார்கள். அவர்கள் இணைபிரியாத னட்பு கொண்டு வாழ்ந்நார்கள். எங்நு சென்ருலும் எச்செயலைச் செய்தாலும் சேர்ந்நே செல்வார்கள். செய்வார்கள். இவர்கள் வாழ்ந்ந ஊருக்குப் பக்கத்திலேயே சிதம்பரம் என்ற திவ்ய ஷேத்திரம் உண்டு. அங்நு தேர்த்திருவிழா கோலாகலமாக ஒருனுள் னடக்க இருந்நது.

இவர்கள் இருக்கும் ஊரில் இருந்நு னடந்நே சென்று திருவிழாவைப் பார்த்து விட்டு வந்நு விடலாம். ஆகவே அன்று காலை இரு னண்பர்களும் தேர்த்திருவிழாவைப் பார்த்து விட்டு வர வேண்டும் என்று எண்ணிக்கொண்டு புறப்பட்டார்கள். இருவரும் னடந்நே சென்ருர்கள்.

இவர்கள் போகும், வழியில் ஓர் ஆற்றைக் கடந்நு செல்ல வேண்டும். அந்ந ஆற்றின் ஒரு பக்கத்தில் னீர் சற்று ஆழமாகவும் அகலமாகவும் தெளிவாகவும் ஓடிக்கொண்டிருந்நது. அன்னீரில் சிறிதும் பெரிதுமான மீன்கள் னிறைய சென்று கொண்டிருந்நன. பார்க்க கொள்ளை அழகாகவும் ஆசையாகவும் இருந்நது. இரு னண்பர்களும், மீன்கள் ஓடும் னீரைக் கடந்நுதான் செல்ல வேண்டும். ஆகவே அவர்கள் ஆற்றைக் கடக்க னீரில் இறங்கினுர்கள்.

இரு னண்பர்களில் ஒருவன், மீன் குழம்பு சாப்பிட்டு அதன் ருசியில் தோய்ந்நவன். ஆகவே அவனுக்கு னீரில் ஓடும் மீன்களைப் பார்த்த போதே மீன் குழம்பின்மேல் ஆசை வந்நு விட்டது. அவன் தன் னண்பனைப் பார்த்துச் சொன்னுன். "னண்பா- னீரில் ஒரே மீனுக ஓடுது. இவற்றைச் சமைத்துச் சாப்பிட்டால் எவ்வளவு ருசியாக இருக்கும்?" என்று

கூறிக்கொண்டே னீரில் ஓடும் மீன்களைப் பார்த்தான். அவன் ஆற்றங்கரையிலேயே னின்றுவிட்டான். கரையைக் கடந்து அப்பால் செல்ல அவனுக்கு மனமே வரவில்லை. மீண்டும் தன் னண்பனிடம், "னண்பா! அந்த மீன்களைப் பிடித்து இங்கேயே ஒரு இடத்தில் சமைத்துச் சாப்பிட்டுவிட்டுப் பிறகு தேர்த்திருவிழாவுக்குப் போகலாம்" என்ருன்.

ஆனல் அவனுடன் இருந்த னண்பன் இதற்குச் சம்மதிக்கவில்லை. "தேர்திருவிழாவைப் பார்க்கப் புறப்பட்ட ஞம் அந்த விழாவிக்குச் சென்றே ஆக வேண்டும்" என்று வற்புறுத்திக் கூறினுன். குழம்பு ருசி னினைவால் கவரப்பட்ட அந்த னண்பன், னீரில் ஓடும் மீன்களை விட்டு விட்டுத் திருவிழாவிற்குச் செல்ல மனமில்லை. னீரில் ஓடும் பெரிய வளப்பமான மீன்களைச் சமைத்துச் சாப்பிட்டு விட்டே போக வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான்.

இவன் எண்ணத்தை அறிந்த னண்பன் "ஞன் தேர்திருவிழாவைப் பார்க்கப் போகிறேன். னீ இங்கு மீன் பிடித்துச் சமைத்துச் சாப்பிட்டு விட்டு வா" என்று சொல்லி விட்டு அங்கிருந்து சிதம்பரம் னேக்கி னடக்கத் தொடங்கினுன். இவனும் "சரி ஞன் இப்படியே இங்கு சிறிது னேரம் தங்கி மீன்களைப் பிடித்துச் சமைத்துச் சாப்பிட்டுவிட்டுத் தேர்திருவிழாவிற்கு வந்து உன்னுடன் கலந்து கொள்கிறேன்" என்று கூறிவிட்டு மீன்களைப் பிடிக்க ஆயத்தம் செய்தான்.

ஓடும் னீரின் குறுக்காக தனது வேட்டியை வலைப்போல் விரித்து னீரில் அமிழ்த்தி பிடித்துக்கொண்டான். சிறிது னேரம் வரை வேட்டியைப் இவ்வாறு பிடித்தபடியே னீரில் னின்று கொண்டிருந்நான். என்ன வியப்பு? ஒரு மீன் கூட இவன் விரித்த வேட்டியில் சிக்கவே இல்லை. கூட்டம் கூட்டமாக

வருகின்ற மீன்களெல்லாம் வேட்டிக்கு அப்பாலேலே சென்று கொண்டிருந்தனவே தவிர, ஒன்று கூட வேட்டியில் சிக்கவில்லே. னேரமோ சென்று கொண்டிருந்தது. மணிக்கணக்காக முயற்சி செய்தும் வரவில்லே. அது சமயம் னேரம் வேறு ஆகிவிட்டிருந்தது. இன்னும் சிறிது னேரத்தில் சிதம்பரம் போய்ச் சேர்வதற்குள் தேர் இழுக்கப்பட்டு விழா முடிந்நுவிடும்.

னிச்சயமாக இன்று இங்ஙு மீன்களேப் பிடித்துச் சமைத்துச் சாப்பிட முடியாது என்று முடிவுக்கு இவன் இப்போது வந்நு விட்டிருந்நான். இந்ந எண்ணம் வந்ந பிறகுதான் "தேர்த்திருவிழாவுக்காவது போயிருக்கலாமே இங்ஙு மீன்கள் கிடைக்கும் என்று னம்பித் தங்ஙியது வீணுப் போச்சே. இப்போது புறப்பட்டுப் போகவும் முடியாதே" என்றெல்லாம் அவன் எண்ணத் தொடங்ஙினுன்.

அவன் சிந்நனே-எண்ணம் எல்லாம் னண்பன் சென்று கலந்நு கொண்டிருக்கும் தில்லேத் தேர்த்திருவிழாவைப் பற்றியே, தோய்ந்நிருந்நன. இதற்காகத்தானே இருவருமாகப் புறப்பட்டு வந்தோம் என்ற னினேவு அடிக்கடி வந்நது. இந்ந னினேவு மிகவும் வலுவடைந்நு னின்றது.

னடராசப் பெருமானே அலங்ஙாரம் செய்து தேர்த்தட்டில் இட்டு வீதிகள் தோறும் ஆரவாரத்துடன் இழுத்துக் கொண்டு வரும் தேர்த்திருவிழாவைக் காணும் பாக்கியம் இழந்நு விட்டேனே என்ற அடங்ஙாத ஏக்க உணர்ச்சிகளின் ஒரு கோடிக்கே சென்று விட்டான்.

இதன் காரணமாக, தான் அமர்ந்நிருக்கும் ஆற்றங்கரையை மறந்நான். ஆற்றில் ஓடும் னீரை மறந்நான். னீரில் ஓடும் வளமான சிறிதும் பெரிதுமாகிய மீன்களே மறந்நான். மீன்களேப் பிடிக்க னீரில் குறுக்கே விரித்த வேட்டியை மறந்நான். மீன்களேப்

பிடித்துச் சமைத்துச் சாப்பிட வேண்டுமென்ற எண்ணத்தையும் மறந்தான்.

இவன் உடல்தான் ஆற்றங்கரையில் இருந்நதே தவிர உள்ளமெல்லாம் திருவிழா காட்சியை பற்றியும், தேரோடும் வீதியில் னிகமும் ஒவ்வொன்றும் இன்னின்னவாறு னிகழ்ந்து கொண்டிருக்கும் என்பது பற்றியும், ஆங்காங்கு னின்று னின்று வரும் தேரைப் பற்றியும், அத்தேரில் அமர்ந்துள்ள சுவாமியையும் கற்பனையில் கண்டு களித்து "அரகர மகாதேவா ...அரகர மகாதேவா" என்று வாய்விட்டுக் கூறி மகிழ்ந்நான். தில்லையம்பதி இருக்கும் திசைனோக்கித்தன் இருகரங்களையும் சிரசின் மேல் தூக்கிக் குவித்து வணங்கினான்.

இனி, இவனைவிட்டு விட்டு தேர்திருவிழா பார்க்க வேண்டும் என்று எண்ணிச் சென்ற னண்பனைப் பற்றியும் அவன் அங்கு பெற்ற அனுபவங்களைப்பற்றியும் பார்ப்போம்.

பெரும் பக்தனைப் போல் வீம்புபேசி விழாவைத் காணச் சென்றவன் மனம், தன் னண்பன் ஆற்றங்கரையில் மீன்களைப்பிடித்துச் சமைக்கும் மீன்குழம்பை எண்ணி ஏங்க ஆரம்பித்தது. தில்லையம்பதியை னெருங்க னெருங்க அவன் மனம் பேதலிக்கத் தொடங்கியது. சபலமடைய ஆரம்பித்தது. தில்லைத் தேர்த்திருவிழவைக் கண்டுகளிக்கப் போகிறோம் என்ற திருப்தி அவனுக்கில்லை. ஆற்றங்கரையில் தங்கிவிட்ட னண்பனைச் சுற்றியே அவன் மனம் வட்டமிட்ட வண்ணமிருந்நது. தேர்த்திருவிழாவில் கூடிய மக்கள் கூட்டத்தின் இடையே சிக்கி போகவும் முடியாமல், வரவும் முடியாமல், தத்தளித்த னிலையைக் கண்டு அவன் மனம் தேர்மீதோ, தேரில் உள்ள சுவாமி மீதோ செல்லவில்லை.

மீன்குழம்புக்குத் தங்கிவிட்ட னண்பனைப் பற்றியே னினைத்துக் கொண்டு, தன்னைவிட அவனே பாக்கியசாலி என்று

எண்ணத் தொடங்கினான். ஏன் இந்தத் தேர்த்திருவிழாவிற்கு வந்தே இருக்கக்கூடாது. பேசாமல் நண்பனுடனேயே தங்கிவிட்டிருந்தால் நன்றாக இருந்திருக்குமே என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் வலுத்து வலுவேறி நின்றது. ஆகவே அவன் தேரில் வரும் சுவாமியையும் தேரோடும் வீதியையும் மறந்தான். அதுசமயம் அவனுக்கு ஆற்றங்கரையிலே விட்டு விட்டு வந்த நண்பன், இன்னின்னவாறு தன் வேட்டியை வலை போல் நீரில் விரித்திருப்பான் என்றும், இன்னின்ன வகையான மீன்களைப் பிடித்துக் கொண்டிருப்பான் என்றும் ஒன்றன்பின் ஒன்றாக அவன் மீன்பிடிக்கும் நிகழ்ச்சிகளை கற்பனையில் கண்ட வண்ணமிருந்தான்.

அப்போது புகழ்பெற்ற தில்லைமாநகரத்தின் தேரோடும் நீண்ட வீதி, தன் நண்பன் மீன்பிடிக்கும் ஆறாக அவனுக்குத் தோற்றமளித்தது. தேரோடும் வீதியில் சுவாமி தரிசனத்திற்காக வெள்ளம் போல் திரண்டிருந்த மக்கட் கூட்டம் அந்த ஆற்றிடை நீரில் ஓடுகின்ற மீன் கூட்டங்களாகத் தோன்றின.

தேங்காய் பழம் புஷ்பம் சூடம் கொண்ட தாம்பாளத்தைக் கையில் ஏந்தி, நெருக்கிக் கொண்டிருக்கும் மக்களை விலக்கிக் கொண்டு, தேரை நோக்கிச் செல்லும் காட்சியானது தன் நண்பன் மீன் சமைப்பதற்காகச் செல்வதை அவனுக்கு நினைவு படுத்தியது.

சுவாமி வீற்றிருக்கும் தேரினை அவன் அடைந்த போது நண்பன் தான் பிடித்து வந்த மீனைச் சமைக்கத் தொடங்கி இருப்பான் என்று எண்ணுகிறான். சுவாமி தீபாராதனைக்குத் தன் கையிலிருந்த தாம்பாளத்தைக் கொடுக்கும் போதுதான், தேரின் உள்ளிருந்த சுவாமியைப் பார்த்தான்.

அப்போது அவனுக்கு அது சுவாமியாகத் தெரியவில்லை. பாக்கியசாலியான தன் நண்பனுக்குக் கிடைத்த பெரிய மீனாகத்

தெரிந்தது. குருக்கள் தேங்காயை உடைத்துச் சூடம் கொளுத்திச் சுவாமிக்குக் காண்பிக்கும் போது ஆ-கா- னண்பன் இப்போது இது னேரம் மீன்களைச் சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருப்பானே ஞன் மட்டும் அங்கேயே தங்கிவிட்டி-ருந்நால் என்ன சுவையாக மின் குழம்பை ரசித்து உண்டுகொண்டு இருக்கலாம். வீம்பாகப்பேசி வந்து விட்டோமே. இப்போது இந்த ஜனக்கூட்ட னெரிசல்களில் சிக்கி இப்படி அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறேமே. பசிவேற வயிற்றை வாட்டி எடுத்துக் கொண்டிருக்கிறதே என்று எண்ணத்துடனேயே அங்கு இருந்து மிக விரைவாக ஜனங்களைத் தள்ளி கொண்டு வெளியே வந்நான்.

கூட்ட னெரிசலில் இருந்து விடுப்பட்டதும் எப்படியும் னண்பனைச் சந்திக்க வேண்டும் என்று மிக விரைவாகத் அவனை ஞேக்கி திரும்பி னடக்கத் தொடங்கினன். சிறிது னேரத்தில் அந்ந ஆற்றங்கரையை அடைந்நான். மீன் பிடிக்கத் தங்கி விட்ட னண்பனைக் கண்டு ஓடோடி வந்நான். னண்பனைக் கண்டதும் கேட்ட முதல் கேள்வி இதுதான் " என்ன ... னன்ருகச் சமைத்துப் பசியார சாப்பிட்டாயா? பெரிய பெரிய மீன்கள் எல்லாம் கிடைத்திருக்குமே! வெகு சுவையாகச் சமைத்துச் சாப்பிட்டிருப்பாயே. னீ சொன்னபடி இங்கேயே உன்னுடன் தங்கி இருந்நால் மிகவும் னன்ருக இருந்நிருக்கும். அந்ந ஜனனெரிசல்களில் சிக்கி ஞன்பட்ட அவஸ்தையைச் சொல்லி முடியாது. னீதான் பாக்கியசாலி. ஞன் பட்ட துன்பம் எல்லாம் இல்லாமல் னிம்மதியாக மீன் குழம்பை ருசித்துச் சாப்பிட்டிருக்கிருய்" என்ருன். அதற்கு அவன் னண்பன் "ஞன் முதலில் அப்படித்தான் னினைத்தேன். ஆனல் னீ சென்றபிறகு மீன்பிடிக்க எத்தனையோ உபாயங்களைச் செய்து பார்த்தும் ஒரு மீன் கூட கிடைக்கவில்லை. னேரம் ஆக ஆக மீனைச் சமைத்துச் சாப்பிட வேண்டுமென்ற ஆசையே அற்றுப்போச்சு.

அதனாலே உன் கூடப் போயிருந்நாலாவது தேர்த்திருவிழாவில் சுவாமி தரிசனம் செய்திருப்போமே என்று எண்ணி ஒவ்வொரு கணத்திலும் நீ சுவாமி தரிசனம் செய்ய என்ன பிரயாசை கொண்டு எப்படி எப்படி எல்லாமே கூட்டத்திற்குச் சென்று திவ்வியமாகச் சுவாமி தரிசனம் செய்து கொண்டிருப்பாய் என்று நான் இங்கிருந்நபடியே என் மனக்கண்களால் எண்ணி எண்ணிப் பார்த்து ஆனந்நமடைந்நு கொண்டிருந்தேன்''. என்று கூறினான்.

*நம் தேவ கோமான் பிரம்மோதய மெய்வழிச் சாலை ஆண்டவர்கள் இப்வுபதேசத் கதையைக் கூறிவிட்டு ''இவர்களில் யார் உண்மையான பக்தன்? சொல்லுங்கள் பார்க்கலாம்'' என்று இளநகை பிறக்க வினவினார்கள்.*

*உபதேச கதையை கேட்டுக்கொண்டிருந்ந அனந்நாதி தேவர்கள் ''மீன் பிடிக்க தங்கியவனே உண்மையான பக்தன் தெய்வமே'' என்று கூறினார்கள். சாலையம்பதியில் வாழ்ந்நாலும் வெளியுலகத்தில் நாட்டம் இருக்கலாகாது என்பதற்கும் வெளி உலகில் வாழும் மெய்வழி மக்கள் சாலையம்பதியே நினைவாக இருக்க வேண்டும் என்று உணர்த்துவதற்காகவும் இந்நக் கதையை அருளினார்கள்.*





# னீதி தவருத மன்னன் கதை

ஒரு ஞட்டை ஒரு மன்னன் ஆண்டு கொண்டு வந்நான். அம்மன்னன் ஆட்சியில் மக்கள் சுபிட்சமாக வாழ்ந்து வந்நார்கள். இப்படி இருந்நும் அன்ஞட்டு மன்னனுக்கு ஒரு கவலே மட்டும் வாட்டி வந்நது.திருமணமாகிய பல ஆண்டுகள் ஆகியும், நாட்டை ஆள்வதற்கு ஒரு வாரிசாகக் குழந்நை இல்லேயே என்பதுதான் மன்னன் கவலே. மன்னனுக்கு வாய்த்த ராணி, னல்ல குணவதி; மன்னனுக்கேற்ற பதிவிரதை, தன் கணவன் குறிப்பறிந்து ஒழுகும் குணம் உடையவள். பொறுமை அன்பு, அச்சம், ஞணம், மடம் போன்ற பெண்களுக்கிருக்க வேண்டிய அத்தனே குணங்களும் கொண்டவள். இவ்வளவிருந்நும், குழந்நை இல்லேயே என்ற துயரம் அவளேயும் வாட்டியது.

ஞட்டை ஆள்வதற்கு வாரிசு வேண்டுமல்லவா? அதற்காக மன்னன் இரண்டாம் திருமணம் செய்து கொண்டான். இளேய ராணி முத்த ராணியைப் போன்றவள் அல்ல. முத்தவளுக்கு மாருன குணங்களேக் கொண்டவளாக விளங்கிஞள். மன்னன் இரண்டாம் திருமணம் செய்து கொண்ட சில ஆண்டுகளுக்குள், முத்த ராணிக்கு ஓர் அழகான ஆண்குழந்நை பிறந்நது. மன்னனும் ஞட்டு மக்களும் அளவிலா மகிழ்ச்சி அடைந்நார்கள். மன்னனுக்குப் பின் ஞட்டை ஆள்வதற்கு வாரிசாகக் கிடைத்த அந்ந ஆண் குழந்நை பிறந்நதையொட்டி, ஞடெங்கும் மக்கள் கோலாகலமாக விழா கொண்டாடிஞர்கள். அரண்மனேயிலும் ஞடு னகரங்களிலும், விமரிசையாக விழா கொண்டாடப் பெற்றது.

முத்த ராணிக்குக் குழந்நை பிறந்ந சில ஞட்களுக்குள்ளேயே இளேய ராணிக்கும் ஓர் அழகான ஆண் குழந்நை பிறந்நது.

இதற்கும் ஞடும் னகரமும் விழாக் கொண்டாடியது. இளைய ராணிக்குத் தன் குழந்தையின் அருமை தெரியவில்லை. மேலும் மூத்தவளுக்கு முதலில் குழந்தை பிறந்து விட்டதால் மன்னருக்குப் பின் ஞடாளும் உரிமையை அதுவே பெற்று விட்டதென்ற எண்ணம் அப்போதிருந்தே அவள் உள்ளத்தை உறுத்தத் தொடங்கியது. இக்காரணங்களால் இளையவள் தன் குழந்தை வளர்ப்பில் அதிக கவனம் செலுத்தவில்லை. குழந்தைக்கு பசியெடுக்கும் காலமறிந்து, பாலூட்டும் கடமையைகூடச் சரிவர செய்யவில்லை.

தாதிமார்களை வைத்தே, தன் குழந்தையின் தேவைகளையெல்லாம் கவனித்துக் கொண்டாள். இரவில் தன் பக்கத்தில் படுக்கும் குழந்தை எந்தவிதமாகக் கதறி அழுதாலும் அவளுக்குத் தெரியாது. குழந்தை அழுது அழுது ஓய்ந்து, தானாகவே தூங்கிவிடும். எக்காரணம் கொண்டும் இடையில் தூக்கத்தில் இருந்து அவளால் விழித்துக் கொள்ள முடியாது, எழவும் விரும்ப மாட்டாள். ஆனுல் மூத்தவளோ தன் குழந்தைக்குக் காலமறிந்து பாலூட்டுவாள். தாலாட்டுப் பாடித் தூங்க வைப்பாள். இரவில் எந்த னேரங்களில் குழந்தை எழுந்து அழுதாலும் உடனே தூக்கத்தில் இருந்து எழுந்து பாலூட்டி அது தூங்கிய பின்பே தூங்குவாள்.

இவ்விரு குழந்தைகளும் தோற்றத்தில் ஒன்ருகவே இருந்தன. வேறுபாடுகள் அறிவது மிகவும் கடினம். உருவத்தோற்றத்தில் ஒன்ருக இருக்கும் இரு குழந்தைகளைப் பற்றி, ஆச்சரியம் கொள்ளாதார் எவருமே இல்லை. மன்னன் இரு குழந்தைகளையும் னேசித்து வந்நான். ஒரு ஞள் இளையவள், தன் குழந்தையைத் பக்கத்திலேயே படுக்கப் போட்டு விட்டுத் தூங்கினுள். தூக்க மயக்கத்தில், தன் குழந்தை மீதே புரண்டு படுத்துக் கொண்டாள்.

திடீரெனத் தாய் உடம்பின் பாரம் குழந்தையின் முகத்தை அழுத்திக் கொண்டதால், அழுவவோ, மூச்சு விடவோ, முடியவில்லை. ஆகவே குழந்தைக்கு மூச்சு திணறியது, சிறிது நேரத்தில் இறந்தும் விட்டது. தூக்கத்தில் இருந்து விழித்ததும், குழந்தை இறந்து கிடப்பதைப் பார்த்துப் பேரதிர்ச்சியடைந்தாள். குழந்தை இறந்ததற்குரிய காரணம் அவளுக்குப் புரிந்து விட்டது.அவள் தீவிரமாகச் சிந்திக்கத் தொடங்கினாள், பக்கத்து அறையில் மூத்தவள் தன் குழந்தையுடன் தூங்கி கொண்டிருந்தாள். இறந்துவிட்ட தன் குழந்தையை எடுத்து கொண்டு பக்கத்தறைக்குச் சென்றாள். மூத்தவள் பக்கத்தில் தன் குழந்தையை வைத்தாள். தூங்கிக் கொண்டிருக்கும் அந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டு தன் அறைக்கு வந்தாள். பக்கத்தில் படுக்க வைத்து தானும் படுத்துக் கொண்டாள்.

பொழுது விடிந்தது. மன்னனின் ஒரு குழந்தை இறந்த செய்தி நாடெங்கும் பரவியது. நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்த குழந்தை காலையில் இறந்து கிடந்தது கண்டு, மூத்தவள் பேரதிர்ச்சி அடைந்தாள். அவளுக்குச் சந்தேகம் வலுத்தது. இறந்தது தன் குழந்தை அன்று இளையவள் குழந்தையே என்று மன்னனிடம் முறையிட்டாள். இளையவளோ இறந்த குழந்தை மூத்த-வளுடையது தான், தன் குழந்தையே அன்று என்று பிடிவாதமாக மறுத்து விட்டாள். மேலும் மூத்தவள் குழந்தை இறந்து விட்டதே என்று எல்லார்க்கும் தெரியும் படியாக அழவும் செய்தாள்.

இளையவளும் மன்னனிடம் தனக்கு நீதிவழங்குமாறு முறையிட்டாள். மன்னன் பல் வகையாகத் தன் மனைவியர்களிடம் விசாரணை செய்தான். இறந்த குழந்தை உண்மையில் யாருடையது என்பதை அவனால் கண்டறிய

முடியவில்லை. அரண்மனையில் நடந்த நிகழ்ச்சி மன்னனின் நீதிபரிபாலனத்திற்கே ஒரு சவாலாக அமைந்து விட்டது. ஆகவே, இதன் உண்மையைக் கண்டு பிடித்தே ஆக வேண்டும் என்று மன்னன் உறுதி கொண்டான். ஒரு நாள் ராஜசபையைக் கூட்டினான். எல்லா மந்திரிமார்களும், அரசுப் பிரதானிகளும் அவைக்கு வந்து அமர்ந்தார்கள். மன்னன் தன் இருமனைவியர்களையும் அவைக்கு வர வழைத்தான். உயிருடனிருக்கும் தன் ஒரே குழந்தையையும் கொண்டு வருமாறு பணித்தான்.

இறந்த குழந்தை யாருடையது என்பதையும், தற்போதுள்ள குழந்தை யாருடையது என்பதையும், விசாரிக்க ஆரம்பித்தான். மன்னனும் மந்திரிகளும் பலவாறு கேட்டும் உயிருடன் இருக்கும் அந்த குழந்தைக்கு இரு ராணிமார்களும் உரிமை கொண்டாடினார்கள். மூத்தவளும் இளையவளும் தன்னுடையதே என்று சபையில் சாதித்தார்கள். அதுவரை நடந்த விசாரணையில் எந்த உண்மையும் தெளிவாகவில்லை. மன்னனுக்கு வருத்தம் மிகுதியாயிற்று. பல்லாண்டுகள் குழந்தையில்லாமல் ஏங்கிய நிலையில் பெற்றெடுத்த, அரசுக்கு வாரிசான ஒரே குழந்தையின் உண்மைத் தாய் யார் என்று தெரிந்து கொள்ள இயலாமல் துக்கத்தில் ஆழ்ந்தான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் மன்னன் மனதில் ஒரு துணிகரமான உபாய வழி தோன்றியது. உண்மைத்தாயைக் கண்டுபிடிக்க அதுவே சரியான வழி எனத் தீர்மானித்தான். மன்னன் சபையில் எழுந்து நின்றான். தன் ஒரே குழந்தையைத் தன் முன்னால் கிடத்தினான். "இந்தக் குழந்தையின் உண்மைத்தாய் உங்கள் இருவரில் ஒருத்தியே! ஆனால் உங்கள் இருவரில் ஒருத்தி உண்மையைக் கூறாமல் மறைத்துவிட்டீர்கள். இந்த

னிலையில் உண்மைத்தாய் யார் என்று கூற முடியாத படி வருங்காலத்தில் இந்த நாட்டை ஒரு மன்னன் ஆளுவதைக் காட்டிலும், அவன் என்னால் இப்பொழுதே இக்கணமே இறப்பதே சிறந்தது. உங்கள் இருவரில் ஒருத்தி உண்மையைச் சொல்லாததனால் இக்குழந்தையை உங்கள் முன்பாகவே நான் கொன்று விடுகிறேன்.'' என்று கூறிக் கொண்டே தம் உடைவாளை உருவினான்.அவையில் இருந்தவர்கள் அனைவரும் ஒரு கணம் திடுக்கிட்டனர். அதிர்ச்சியால் கல்லாய்ச் சமைந்தனர். இளைய ராணியின் மனதில் கணப் பொழுதில் பல எண்ணங்கள் எழுந்தன. ''இறந்ததோ'' என் குழந்தை, அவள் குழந்தை மட்டும் ஏன் இனி உயிரோடு இருக்க வேண்டும்? அக்குழந்தையை என் குழந்தையென்று நான் கூறிக்கொண்டிருப்பது போலவே அவளும் இருந்தால் மன்னர் குழந்தையை வெட்டிவிடுவது நிச்சயம். போனால் போகட்டுமே என்ற நினைவலைகள் அவள் நெஞ்சக்கடலிலே மோதிக் கொண்டிருந்தன.

முத்த ராணியோ ''இக்குழந்தை என்னுடையதே என்று இதுவரை கூறிக் கொண்டு வந்த உண்மையை இப்போதும் கூறினால் மன்னன் வாளுக்குக் குழந்தை இரையாகிவிடும். நான் பெற்ற குழந்தை அவளுடையதாக இருந்து வளர்ந்தாலும் உயிருடன் இருந்தால் அதுவே போதும்'' என்ற எண்ணம் உடையவளானாள்.உடனே மன்னனையும் அவையோரையும் பார்த்து ''குழந்தையை வெட்டாதீர்கள். இக்குழந்தை என்னுடையதில்லை. இளைய ராணியுடைய குழந்தைதான் இது! ஆகவே வெட்டாதீர்கள்'' என்று, கோவெனக் கதறி அழுதுகொண்டே கூறினாள். மன்னன் முகம் மலர்ந்தது. அவன் எண்ணிய எண்ணம் பலித்தது, உண்மை பளிச்செனத் தெரிந்தது.

மூத்தவள் குழந்தை இளையவளிடம் இருந்தாலும் உயிருடன் இருந்தால் போதும் என்ற எண்ணத்தில் தான், இதுவரை தன் குழந்தை என்று கூறி வந்தவள், இப்போது தன் குழந்தை இல்லை என்று கூறுகிறாள், என்று னன்கு தெரிந்தது. தெரியவே, உயிருடன் உள்ள குழந்தை மூத்த ராணியின் குழந்தை என்று தீர்ப்பளித்தான்.

ஆண்டவர்கள் அருளிச் செய்த இவ்வுபதேசக்கதை உணர்த்தும் கருத்துக்களாவன: *மன்னனின் அறிவாற்றல் போல் சூதனமாக செயல்படும் அறிவு எல்லோருக்கும் வேண்டும். மேலும் இந்த கதையில் மன்னர் தம் வாளால் குழந்தையை வெட்ட முனையும் போது மூத்த ராணியின் உள்ளம் கொண்ட மாற்றம் முக்கியமானது. தம் வயிற்றில் பிறந்த செல்வம் எங்கிருந்தாலும் வாழந்தால் போதும் என்று தக்க சமயத்தில் தக்க முடிவு எடுத்த பகுத்தறிவு எண்ணம் எல்லோருக்கும் இருக்க வேண்டும். பிடிவாதமாக போராடக் கூடாது. இது போன்ற கருத்துக்களை இந்த கதையின் மூலமாக அன்று வெளியாக்கினார்கள்.*



# வெற்றிலை வியாபாரியும் கூலியாளும்

ஓர் ஊரில் கூலியாள் ஒருவன் இருந்தான். அவன் தினமும் கூலிவேலை செய்து பிழைப்பவன். அவ்வூரில் சுமைதூக்கிக் கூலிபெற்று அதை கொண்டு தானும் தன் மனைவியுமாக வாழ்ந்து வந்தான். அக்கூலியாள் வசித்த ஊர்பக்கம் ஒரு மலை உண்டு. அம்மலைமேல் அழகான சிற்றூர். அங்கு எல்லாவகை வசதிகளும் உண்டு. ஆனால் அங்குள்ள கடை வியாபாரிகள், தங்களுக்கு வேண்டிய சரக்குகளை வாங்க மலையடிவாரத்திற்கு வந்தேயாக வேண்டும். அடிவாரத்தில் சரக்குகளை வாங்கின உடனே வழக்கமாகச் சுமை தூக்கிக் கொண்டு மலை ஏறும் கூலியாட்கள் மூலம் சுமந்து கொண்டு மலை ஏறிச் செல்வார்கள். கூலிகளும் மலைமேல் உள்ள ஊரில் சரக்கை இறக்கி விட்டு தக்க கூலி வாங்கிக் கொண்டு கீழே இறங்குவார்கள்.இக்கதையில் வரும் கூலியாளுக்கு ஒரு நாள் கூலியே கிடைக்கவில்லை. மலையிலிருந்து அடிவாரத்திற்குச் வரும் வியாபாரிகள் அன்று மாலை வரை எவருமே வரவில்லை. இதனால் கூலிக்காரன் மிகவும் சோர்வடைந்திருந்தான். தெய்வத்தை நினைத்து மிகவும் நொந்து கொண்டிருந்தான்.

மாலை நேரத்திற்கு முன்னே சுமை கிடைத்தால் தான் மலைக்குச் சென்று சரக்கினை இறக்கிவிட்டு இரவுக்கு முன் அடிவாரம் வந்து சமையலுக்கு வேண்டிய உணவுப் பொருள்களை வாங்கிக் கொண்டு வீட்டிற்குச் செல்ல முடியும். ஆனால் பொழுதோ சாய்ந்து கொண்டிருந்தது. அந்த நேரத்தில் மலைமேல் செல்லவிருக்கும் ஒரு வெற்றிலை வியாபாரி ஒரு பெரிய வெற்றிலை மூட்டையைச் சுமந்து செல்ல ஒரு கூலியாளைத் தேடிக் கொண்டிருந்தான்.அங்கிருந்த இந்த ஒரே ஒரு கூலியாளைப் பார்த்ததும் அவ்வியாபாரிக்கு சந்தோஷமாக இருந்தது. ''இந்த

வெற்றிலேக் கட்டை மலேமேல் கொண்டு போக வேண்டும். கூலி தருகிறேன். எடுத்துக் கொள்'' என்ருன். கூலி கிடைக்காதா என்று இவ்வளவு னேரம் ஏங்கிக் கொண்டிருந்த கூலியாள் பொழுது சாய்வது கண்டு மலேமேல் சென்றுவர னேரமாகிவிடும், சிரமமும் அதிகம் என்றெண்ணியவனுய்ப் பேசாமல் இருந்நான்.

வெற்றிலே வியாபாரி மீண்டும் அழைத்தான். ''என்னுல் வர முடியாது'' என்று கூலியாள் மறுத்துவிட்டான். ''அப்போது அந்த இடத்தில் வேறு கூலியாளும் இல்லே. வெற்றிலேக் கட்டை மலேக்கு கொண்டு போக வேண்டும். பொழுது வேகமாகச் சாய்ந்து கொண்டிருக்கிறது. மலேயடிவாரத்தில் இரவு தங்கவும் முடியாது. இந்த னிலேயில் வியாபாரி தத்தளித்துக் கொண்டிருந்நான். ''அப்பா - வேறு எந்தக் கூலியாளும் இங்கு இல்லே. னீதான் இருக்கிருய். உனக்கு வேண்டிய கூலி தருகிறேன். வா'' என்ருன். ''கூலியைக் கூட்டித் தருவீரா?'' என்ருன் கூலியாள். ''எவ்வளவு கூலி வேண்டும்?'' என்று வியாபாரி கேட்டதற்கு ''எனக்கு ஐம்பது ருபாய் கொடுத்தால் வருவேன்'' என்ருன். அந்த வெற்றிலேக் கட்டுச் சுமையை மலேக்கு தூக்கிச் செல்லப் பத்து ருபாய் தான் னியாயமான கூலியாகும். கூலியாள் ஐம்பது ருபாய் என்றதும் ''அவ்வளவு கொடுக்க முடியாது'' என்ருன் வெற்றிலே வியாபாரி. சிறிது னேரம் இருவரும் விடாமல் பேரம் பேசினுர்கள். வியாபாரி னயமாக பேசி முடிவாக ஹற்பது ருபாய்க்குக் கூலியாக சம்மதிக்க வைத்தான். கூலியாளும் வெற்றிலேக் கட்டைத் தூக்கிக் கொண்டு வியாபாரியுடன் மலேமீது ஏறத் துவங்கினுன்.

வெற்றிலேக் கட்டுசுமை சற்று பெரியதாக இருந்நது. அதனுல் பாரம் அவன் தலேயை வெகுவாக அழுத்தியது. மிகுந்த சிரமத்துடன் மலே ஏற வேண்டியதாக இருந்நது. சிறிது

தூரம்தான் சென்றான். "இம்மூட்டை ரொம்ப பாரமாக இருக்கிறது. கழுத்து வலிக்கிறது. நீங்க ஒரு பாட்டுப் பாடுங்க அதைக் கேட்டுக் கொண்டே போனால் வலி தெரியாது. அதனால் ஒரு பாட்டு பாடுங்களேன்" என்றான் கூலியாள்.

"பாடத் தெரியும். ஆனால் சும்மா பாட மாட்டேன்"

"பின் என்ன வேணும்?"

"நான் பாட்டுப் பாடக் கூலி தர வேண்டும்."

"எவ்வளவு கூலி வேண்டும்"

"ஒரு பாட்டுக்குப் பத்து ருபாய் வேண்டும்"

"சரி தருகிறேன் பாடுங்கள்" என்றான் கூலியாள்

வெற்றிலை வியாபாரி கூலியாளின் முன் வேகமாக நடந்து சென்றான். "அனாதை ஆண்டிக்கு இரக்கம் காட்டு" என்று ஒரு பாடலை பாடிக்கொண்டே வேகமாக நடந்து சிறிது தூரம் சென்று அங்குள்ள ஒரு பாறையின் மீது அமர்ந்துக் கொண்டான். வியாபாரியின் பாடல் கூலி ஆளை என்னவோ கவர்ந்தது. கூலியாள் வியாபாரியைப் பார்த்து " இன்னும் எவ்வளவோ தூரம் போக வேண்டி உள்ளது. அதனால் இன்னும் ஒரு பாட்டுப் பாடு" என்றான். "பத்து ருபாய் கூலி தரவேண்டும்" என்று வியாபாரி கேட்க "தருகிறேன் பாடுங்கள்" என்றான். உடனே வெற்றிலை வியாபாரி "கொண்ட மனைவி இடத்தில் உற்றது சொல்லாதே" என்று ஒரு பாடலை பாடி அவன் முன்னால் வேகமாக நடந்து சென்று ஒரு பாறையின் மேல் அமர்ந்தான்.

கூலியாள் மேலும் சிறிது தூரம் சென்ற பிறகு மீண்டும் ஒரு பாட்டு பாட வேண்டும் என்று வியாபாரி கேட்டான். முன்போலவே வெற்றிலை வியாபாரி இப்பாட்டுக்கும் பத்து

ருபாய் கூலி கொடுக்க வேண்டும் என்று கூறிவிட்டு ''ராஜனீதியின் முன் உண்மை வெல்லும்'' என்று ஒரு வாசகத்தை பாடலாக பாடி விட்டு கூலியாளுக்கு முன் னடந்து சென்ருன். இதற்குள் மலே உச்சியில் உள்ள ஊர் வந்துவிட்டது. வெற்றிலே வியாபாரி சொன்ன இடம் வந்தது. கடைமுன் கூலியாள் தன் தலேமேல் இருந்த வெற்றிலேக் கட்டை இறக்கி வைத்தான். வைத்துவிட்டு மலேயடிவாரத்தில் பேசிய ஞற்பது ருபாய் கூலியைக் கேட்டான். வெற்றிலே வியாபாரி தான் பாடிய மூன்று பாட்டுசளுக்குமான கூலி முப்பது ருபாயைப் பிடித்துக் கொண்டு பத்து ருபாய் தர முன் வந்நான். கூலியாளோ வேறு வழியின்றி தயங்கிவாறு மீதியை வாங்கி கொண்டான்.

கூலியை வாங்கிக் கொண்டு மலேயிலிருந்து இறங்கத் தொடங்கினுன். வரும் வழியில் மலேப்பாதையில் ஓரத்தில், எவருடைய ஆதரவுமில்லாத ஓர் ஆண்டி இறந்து கிடப்பதையும், சுற்றிலும் மக்கள் சூழ்ந்து கொண்டு ஆண்டியின் உடலே எரியூட்டுவதற்குப் பேசிக் கொண்டிருப்பதையும் பார்த்தான்.ஆண்டி இறந்து கிடைப்பதைப் பார்த்தவுடன் சற்று முன் வெற்றிலே வியாபாரி பாடிய பாட்டு இவன் னினேவுக்கு வந்நது. ''அனுதை ஆண்டிக்கு இரக்கம் காட்டு'' என்ற பாட்டு இவன் செவியில் ஒலித்தது. அனுதையின் உடலேப் பார்த்து மிகவும் இரக்கம் கொண்டான். இரக்கத்தின் மிகுதியினுல் அழுதான். கூலியாள் இப்படி இரக்கமுற்று அழுவதை கண்டதும், அங்கிருந்த சிலர் கூலியாளேப் பார்த்து ''உன்னிடம் பத்து ருபாய் இருந்நால் கொடு, அதைக் கொண்டு உன் உறவினரை தகனம் செய்ய முடியும்,'' என்ருர்கள்.கூலியாள் அதற்கு தயங்கிவாறு சம்மதித்தான். தன்னிடமிருந்த, பத்து ருபாயையும் உடனே அவர்களிடம் கொடுத்தான். உடனே அவர்கள் ''இதை னீ வைத்துக் கொள்'' என்று ஆண்டியின்

அழுக்குபடிந்த துணி முட்டையை இவனிடம் கொடுத்துவிட்டார்கள். ஆண்டியின் துணி முட்டையுடன் கூலியாள் மலையில் இருந்து விரைந்து கீழே இறங்கி வந்தான். ஆண்டியின் முட்டையின் மீதே அவன் கவனம் இருந்தது. அடிவாரம் வந்தவுடன் முட்டையில் என்னதான் இருக்கிறது என்று பார்த்து விடவேண்டும் என்று எண்ணிக் கொண்டே முட்டையைப் பிரித்தான். என்ன ஆச்சரியம்?

அழுக்குதையின் முட்டைக்குள் 20,000/- ரூபாய் இருந்தது. ஆண்டியின் வாழ்நாள் முழுவதும் சேமித்து வைத்த பணத்தை அத்துணிமுட்டையில் வைத்திருக்க வேண்டும் என்று எண்ணியவாறே முட்டையை கட்டிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தான். கூலியாள் வழக்கமாக தினமும் கூலிவேலை முடித்துக் கொண்டு வீடு திரும்பியதும் தன் மனைவியிடம் ஐந்து ரூபாய் கொடுப்பது வழக்கம். அவள் அப்பணத்திலேயே அன்றைய சாப்பாட்டுக்கு வேண்டியதையெல்லாம் வாங்கிக் கொண்டு வந்து சமைப்பாள்.

அன்று கூலியாள் இருபது ரூபாய் கொடுத்தான். "என்ன? இன்னைக்கு இருபது ரூபாய். எப்படி வந்தது?" என்று கேட்டாள். வெற்றிலை வியாபாரி பாடிய இரண்டாம் பாட்டு அவன் நினைவுக்கு வந்தது. "கொண்ட மனைவியிடம் உற்றதைச் சொல்லாதே" என்ற பாடல் அவன் நினைவிற்கு வந்ததும் அவன் மனைவியிடம் ஒன்றும் பேசவில்லை. சிலநாள் கழிந்தது. கூலியாளின் வாழ்க்கை மாறத் தொடங்கியது. வீடு வாசல் சொத்துக்கள் என அவன் வாழ்க்கை வளமுடன் வளர்ந்தது. நகைகளும் பட்டுப்புடவைகளும் அவன் மனைவியை அலங்கரித்தன.

கூலியாளின் பக்கத்து வீடும் இவனை போல் கூலி வேலை செய்து பிழைக்கும் குடும்பமே. அக்குடும்பக்காரிக்கு

இவள்மேல் பொருமை வளர்ந்தது. னம்மைப்போல் தினக்கூலிக்கு வேலை செய்த இவர்கள் இன்று இவ்வளவு சொத்துடையவர்களாக ஆனது எப்படி என்று அவள் சிந்தனை ஓடியது. ஓடவே கூலிக்காரன் மனைவியிடம் மெல்லப் பேச்சுக் கொடுத்தாள். திடீரென இவ்வளவு பெரிய வாழ்க்கை வசதிகள் வரக் காரணமென்ன என்று கேட்டாள். கூலிக்காரன் மனைவி அதெல்லாம் எனக்குத் தெரியாது என்று கூறினுள். பக்கத்து வீட்டுக்காரி விடாமல் னச்சரித்துக் கொண்டே இருந்நாள். கணவனிடமிருந்து ஒரு மனைவி முக்கியமான விஷயத்தைப் பற்றிக் தெரிந்து கொள்ள வில்லையென்ருல் என்ன பயன்? மனைவிக்குத் தெரியாத விஷயங்ஙள் இருக்கலாமா? என்றெல்லாம் கேட்டவண்ணம் இருந்நாள்.

இதன் காரணமாக ஒரு ஞள் கூலிக்காரன் தனது மனைவிக்கு செல்வம் வந்நதன் காரணத்தை சொல்லியே ஆக வேண்டும் என்ற சூழ்னிலை வந்நது. அப்போது வெற்றிலை வியாபாரிக்கு இரண்டாம் பாடல் னினைவுக்கு மீண்டும் வந்நது. மனைவி பலவாறு வற்புறுத்துகிருளே என்பதற்காக னடந்ந உண்மைச் செய்தியை முழுமையாகச் சொல்லாமல் சிறிது மாற்றிச் சொல்லிப் பார்க்கலாம் என்று தீர்மானித்தான். ஆகவே பொய்யும் மெய்யும் கலந்நு கூறினுன். "அன்று மிகச் சிரமப்பட்டு வெற்றிலைக் கட்டுச் சுமைக்கு ஞற்பது ரூபாய் கூலி பேசி முடித்து மலைக்குப் போனதும் பத்து ரூபாய்தான் கொடுத்தான். எனக்கு மிகவும் வருத்தமாக இருந்நது. எனக்கு அப்போதிருந்ந வருத்தத்தைத் தாங்ங முடியாமல் தற்கொலை செய்து கொள்ள எண்ணினேன். அதற்காக அம்மலையில் செங்ஙுத்தான ஓர் இடத்தில் இருந்நு கீழே விழுந்நேன்... என்ன ஆச்சரியம்?

"கீழே எழுந்நு பார்த்தால் ஒரு பஞ்ஞணை மெத்தையில் இருந்நேன். அங்ஙு னிறைய பணம் இருந்நது. அப்பணம்தான்

ணும் இவ்வளவு போகமாக வாழக் காரணம்'' என்ருன். இக்கூலியாள் கூறியவற்றை அப்படியே பக்கத்து வீட்டுக்காரியிடம் கூறினுள். பக்கத்து வீட்டுக்காரி தன் கணவனிடம் இதை அப்படியே கூறிவிட்டு ''னீங்களும் இத்தனே வருஷங்களாக கூலி வேலே செய்து சம்பாதிக்கிறீங்க என்ன பிரயோஜனம்? இதைப் போல் னீங்களும் செய்தால் எவ்வளவு பணம் கிடைக்கும்? கொஞ்ளும் னினேச்சு பாருங்களேன்!'' என்று பொரிந்து தள்ளினுள்.

கணவனே மலேயுச்சிக்கு சென்று தற்கொலே செய்து கொள்ளுமாறு தூண்டினுள். மறுனுள் பக்கத்து வீட்டுக் கூலிக்காரன் தன் மனேவி சொன்னபடியே மலேமேல் ஏறினுன், செங்குத்தான இடத்திற்கு வந்நான், கீழ்னேக்கிப் பாய்ந்நு விழுந்நான்.

அவன் பாறைகளின் மேல் விழுந்து சின்ன பின்னமாகச் சிதைந்நு இறந்நான். கணவன் இப்படி இறந்நது கண்டு மனேவி கோவெனக் கதறினுள்; அழுதாள்; இந்நக் கொலேக்குப் பக்கத்து வீட்டுக் கூலியாளே காரணம் என்று கூறி அந்ந னுட்டு மன்னனிடம் சென்று முறையிட்டாள்.

கூலியாளே னேக்கி மன்னன் னடந்நதைக் கூறுமாறு உத்தரவிட்டார். கூலியாளுக்கு வெற்றிலே வியாபாரி கூறிய மூன்ரும் பாட்டு னினேவுக்கு வந்நது. ''ராஜ னீதிமுன் உண்மை வெல்லும்'' என்ற பாடலடி னினேவுக்கு வரவே கூலிக்காரன் அன்று னடந்ந னிகழ்ச்சிகளே உள்ளபடியே கூறினுன்.

''மலே அடிவாரத்தில் னுற்பது ரூபாய் கூலிபேசி வெற்றிலேக் கட்டை மலேக்குத் தூக்கி கொண்டு போனதையும், வழியில் வியாபாரியைப் பாடச் சொன்னதையும், அவன் பாட்டுக்குப் பத்து ரூபாய் கூலிகேட்டு மூன்று பாட்டு

பாடியதையும், பின் தானும் அதற்குச் சம்மதித்து, மலைமேல், 40 ரூபாய் கூலியில் 30 ரூபாய் போகப் பத்து ரூபாய் பெற்றுத் திரும்பியதையும், வரும் வழியில் அனுதை ஆண்டி இறந்து கிடைந்தது கண்டு முதல்பாட்டு னினைவுக்கு வந்து கையில் இருந்த பத்து ரூபாயையும் அனுதையைத் தகனம் செய்யக் கொடுத்து விட்டதையும் அதற்காக அவன் முட்டையை வாங்கிச் சென்றதையும், அம்முட்டையைப் பிரித்து பார்க்க 20,000/- ரூபாய் இருந்ததையும் அதன் உண்மையை மனைவி கேட்க, இரண்டாம் பாட்டின் படி கருத்தை மாற்றிச் சொன்னதையும், அதனுல் விளைந்த விளைவையும் ஒன்று விடாமல் மன்னன் அவையில் கூலிக்காரன் சொல்லி முடித்தான்.

மன்னன் கூலிக்காரன் கூறியவற்றையெல்லாம் கேட்டான். இரக்கம் உணர்வோடு ஆரம்ப முதல் னடந்துக் கொண்ட கூலிக்காரனின் எதார்த்த உள்ளத்தைக் கண்டு வியந்நான். ஆகவே, அவனையும் அவன் மனைவியையும் மன்னன் விடுதலை செய்தான்.

ஆண்டவர்கள் உபதேசித்தருளிய இக்கதையில் வரும் வெற்றிலை வியாபாரி ஓர் மெய்க்குருபிரானை னினை வூட்டுகின்றுர். அழி அவாவினனுயும் படுபாதகத் திமிரனுயும் எமன் பிடியில் - அகப்பட்டு பொய்யில் சிக்கியிருந்த னம்மையெல்லாம் ஆண்டவர்கள் வெற்றிலை வியாபாரி போல வந்து வம்படி பண்ணி வலிந்து ஆட்கொண்டார்கள்.

மலைமீது வெற்றிலைக் கட்டினைச் சுமந்து செல்லக் கூலியாளிடம் வெற்றிலை வியாபாரி பலவாருக இதமாகப் பேசி இணங்ங வைக்கின்றுர். முதலில் கூலியாள் மலைமீது செல்ல மறுக்கிருன். வியாபாரி விடவ்லலை. கூலியாளைச் சம்மதிக்க வைத்து மலைமீது அழைத்துச் செல்கிருர்.

அதேசமயம் அன்றுடம் கூலிபெற்றுச் சமைத்துண்ணும் கூலிக்கார-
ஞயிருந்நாலும் வியபாரியின் ஒவ்வொரு பாடலேயும் பணம் கொடுத்துக்
கேட்கச் சம்மதித்த அவனின் மனம் சாதாரண மனம் அன்று! அது எதார்த்த
மனம்! வியாபாரி பாடிய மூன்று பாடல்களேயும் அப்படியே பதிய
வைத்துக்கொண்ட னன்மனம்! பாடலடிகளைக் கேட்டதோடுமல்லாது
அனேத்தையும் உடனே வாழ்வில் செயலாக்கிக் காட்டவும் துணிந்துவிட்ட
திண்ணிய எண்ணங்கொண்ட வண்ணமனம் என்று தெரிகிறது.
அதுபோன்ற எதார்த்தமனம் கொண்டவனுக நும் இருக்க வேண்டும்.

வெற்றிலே வியாபாரி என்று குறிப்பிடப்பட்டு இருக்கும் இந்ந
மெய்ஞ்ஞானி பாடிய மூன்று தத்துவ பாடலடிகளேயும் கூலியாள் உள்ளம்
சம்மதிக்கக் கேட்டதோடு னில்லாமல் முழுமையாக அவற்றை னம்பி னடக்கத்
தொடங்கினுன். இதன் பயனுக அவன் வாழ்வுளில் எத்திற முயற்சியாலும்
காணமுடியாத, பெற முடியாத பெருஞ் செல்வத்தை மிக எளிதாகப்
பெறுகிறுன். இச்செயல் தருகின்ற கருத்துபடி "ஆண்டவர்கள்
வாய்மைக்குள் ஆகிவிடுவது ஒன்றுதான் னமது வேலே" என்ற வாக்கியம்
னம் னினேவிற்கு வருகிறது.

ஆண்டவர்கள் திருவாக்கைப்படித்து உள்ளத்தில் வைத்து
னுள்தோறும் எண்ணி வாழ்வோமாக!



## நித்திய திருடன் நித்திய பதவி பெற்ற கதை

நம் நாட்டில் பழம்பெரும் நதிகள் ஒன்று சேரும் இடங்களில் ஸ்நானம் செய்வது புண்ணியம் என்ற நம்பிக்கை பழங்காலந்தொட்டு இருந்து வருகிறது. வட நாட்டிலே அரித்துவாரம் என்ற தலம் ஐம்பெரும் நதிகள் ஒன்று சேரும் தலமாகும். ஐந்து நதிகள் சங்கமாகும் அந்த அரித்துவாரத்திலே மூழ்கி ஸ்நானம் செய்தால் அது நாள் வரை செய்த பாபங்கள் அனைத்தும் நீங்கி மோட்சம் கிட்டும் என்பது வெகு காலந்தொட்டு மக்கள் இடையே இருந்து வரும் நம்பிக்கையாகும். ஆகவே அந்த அரிதுவாரத்திலே பல்லாயிரக்-கணக்கான பக்தர்கள் புனித நீராடுவார்கள். நாட்டின் பல பாகங்களில் இருந்து யாத்திரீகர்கள் வந்த வண்ணமாய் இருப்பார்கள்.

இத்தலப் பெருமையைப் பற்றி கயிலாயத்தில் சிவ பெருமானுக்கும் பார்வதிதேவிக்கும் ஓர் உரையாடல் நடந்தது.

பார்வதி: "தேவா! பாரத பூமியில் உள்ள அரித்துவார சங்கமத்தில் பல்லாயிரக்கணக்கான மக்கள் ஸ்நானம் செய்கிறார்கள். அவர்கள் தங்கள் பாபங்களைப் போக்கிக் கொள்ளவதற்காகவா அப்படி செய்கிறார்கள்?" என்று கேட்டார். அதற்கு சிவபெருமான் "ஆம் தேவி! மக்கள் தாம் செய்யும் பாபங்களைப் போக்கிக்கொள்ள வேண்டும் என்று தான் மூழ்கி எழுந்து செல்கிறார்கள்" என்றார்

அதற்கு பார்வதி: தேவா! அரித்துவார சங்கமத்தில் மூழ்கி எழுந்து செல்லும் இந்த ஏராளமான பக்தர்களைப் பார்த்தால் அவர்கள் அத்தனை பேருக்கும் கயிலாயத்திலே இடமே இருக்காதே" என்றார்.

அதற்கு சிவபெருமான்: "இச்சங்கமத்தில் மூழ்கி எழுந்தால் பாபங்கள் போய்விடும் என்ற தெளிவான உறுதியான

னம்பிக்கை கொண்டு முழ்கினுல் தான் அவ்வாறு பாவங்களை போக்கிக் கொள்ள முடியும். மோட்சமும் கிடைக்கும். அவ்வாறு னம்பிக்கையுடன் னினைப்பவர்கள் ஒரு சிலர் தானே!'' என்ருர்.

அதற்கு பார்வதி: அப்படியானுல் இப்புண்ணிய சங்கமத்தில் னீராடும் அத்தனை மக்களுக்கும் மோட்சம் கிடைக்காதா தேவா?'' என்று கேட்டார்.

அதற்கு சிவபெருமான்: ''ஆம் தேவி! திட சித்தம் உள்ளவர்களுக்கு மட்டும்தான் மோட்ச பதவி சித்தியாகும், இத்தகைய திட சித்தம் கொண்டவர்கள் லட்சத்தில் கோடியில் ஒரு சிலர் தான் இருப்பார்கள். அவர்களுக்கு மட்டும்தான் இப்பதவி சித்திக்கும், இதை தெளிவாக அறிந்து கொள்ள வேண்டுமென்ருல் ஞன் உனக்கு ஒரு வழி சொல்கிறேன் பார்!'' என்ருர்.

அதற்கு பார்வதி ''சொல்லுங்கள் தேவா! ஞன் அப்படியே னடக்கிறேன்'' என்ருர். அதற்கு சிவபெருமான்: ''ஞம் இருவரும் அரிதுவார சங்கமத்துக்கு மாறு வேடத்தில் போக வேண்டும். எவராலும் காணச் சகிக்காதபடி உடம்பின் அங்கங்களெல்லாம் குறைந்தழுகிச் சிதைந்து போன ஒரு குஷ்டரோகியாகப் பக்தர்கள் ஸ்ஞனம் செய்ய வரும் படித்துறையின் பக்கமாக ஞன் இறந்து கிடப்பேன், னீ மகாலட்சுமியைப் போல அழகுள்ள மனைவியாக என் உடலருகே இருந்து அழுதுகொண்டிருக்க வேண்டும். குஷ்டரோகியின் உடலைத் தொட்டுத் தூக்கி அடக்கம் செய்து ஈமக் கடனை யார் செய்கிருர்களோ அவர்கள் புண்ணியவான்கள், அவர்களுக்குத்தான் மோட்சப்பிராப்தி உண்டு, புனித னீராட வருகின்ற மக்களில் மெய்யான பக்தர் யார் என்பதை அப்போது னீ தெரிந்து கொள்வாய்'' என்ருர்

அதற்கு பார்வதி: ''தேவா! அப்படியே செய்வோம்'' என்ருர்.

சிறிது னேரத்திற்கெல்லாம் அரித்துவார சங்ஙமத்தில் எல்லாப் பக்தர்களும் யாத்திரிகர்களும் வந்து செல்லும் முக்கிய படித்துறையின் அருகே எல்லாரும் காணும் படிச் சிவ பெருமான், காணச் சகிக்காத குஷ்ட னோயாளியாக இறந்து கிடந்நார். அப்பிணத்தின் அருகே பார்வதி தேவி மகாலட்சுமியைப் போல் யௌவன அழகுடைய மனைவியாக அமர்ந்து கதறி அழுதுகொண்டிருந்நார்.

படித்துறை வழியாக வெள்ளம்போல் வருவதும் போவதுமாக இருக்கின்ற பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் அங்ஙமெல்லாம் குறைந்நழுகித் துர்னாற்றம் வீசிக்கொண்டிருந்ந குஷ்டரோகியின் பிணவுடலைப் பார்த்தும் பார்க்காதவர்களைப் போலச் சென்று கொண்டிருந்நார்கள். பலர் முகம் சுளித்துக் கொண்டு சென்றார்கள். இன்னும் பலர் குஷ்டரோகியின் அருகே அழகே உருவாக அமர்ந்து அழுது கொண்டிருந்ந பெண்ணைப்பார்த்து இரக்கப்பட்டுச் சென்றார்கள். பல மணி னேரமாகியும் அப்பிணவுடலை தொட்டு தூக்கி அடக்கம் செய்து ஈமக் கடன் முடிக்க யாரும் முன் வரவில்லை.

இவ்விதமாக அன்றையப் பொழுது போய்க் கொண்டிருந்நது. அப்போது இவ்விளம் பெண்ணின் பரிதாப னிலையைக் கண்ட னான்கு பேர் தமக்குள் ஒரு முடிவு செய்து கொண்டு அப்பெண்ணிடம் ''அம்மா னாங்ஙள் ஈமக் கடன் செய்து விடுகிறோம். னீ கவலைப்படாதே'' என்று ஆறுதல் கூறினர்.

''ஐயா! உங்ஙளுக்கு மிகவும் னன்றி. அப்படியே செய்யுங்ஙள். ஆனால் இங்ஙே இறந்து கிடக்கும் என் கணவர் சாகும் தருவாயில் ஒன்றை மட்டும் என்னிடம் சொல்லி விட்டு இறந்நார்கள்.'' என்றார்.

''சாகும் போது என்னம்மா சொன்னார்?''

''என்னை தொட்டுத்தூக்கி அடக்கம் செய்து ஈமக் கடன்களை செய்ய வருகிறவங்ஙள் ஏழு னரகத்துக்கும் கீழான னகரத்துக்குச்

செல்வார்கள் என்பதை மட்டும் சொல்லும்படிச் சொன்னார்கள்'' என்றாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அந்தக் குஷ்ட ரோகிக்கு ஈமக்கடன் செய்ய வந்த நல்வரும் அச்சமும் பயமும் அடைந்தார்கள். நமக்கு வேண்டவே வேண்டாம் இந்த நரகப்பிராப்தி என்று ஒரு மனதாகக் கூறிவிட்டு போய்விட்டார்கள்.

பொழுது போய்கொண்டிருந்தது. நீராட வரும் பக்தர்கள் கூட்டம் கொஞ்சமாகக் குறைய ஆரம்பித்தது. குஷ்டரோகிக்கு ஈமக் கடன் செய்து முடிக்க மீண்டும் யாரும் முன் வர வில்லை.

அப்போது அந்த மாநகரத்திலே தினமும் திருடிப்பிழைக்கும் நித்திய திருடன் ஒருவன் இருந்தான். தினந்தோறும் திருடிவிட்டு அரித்துவார சங்கமத்தில் நீராடி விட்டு பின் வீடு செல்வான். அன்றன்று திருடுவதனாலும் கொள்ளையடிப்பதனாலும் சேரும் பாபங்களை அப்புண்ணிய சங்கமத்தில் மூழ்கி எழுவதனால் போய்விடுகின்றன என்பதில் அசையாத நம்பிக்கை அவனுக்கு உண்டு. அன்றாடம் செய்யும் பாபங்கள் நீங்கி இறுதியில் நிச்சயம் மோட்சம் உண்டு என்பதில் திடமான நம்பிக்கை அவனுக்கு இருந்தது. ஆகவே அந்த நித்திய திருடன் தினமும் திருடிவிட்டு பிறகு சங்கமத்தில் குளித்து மன நிம்மதியோடு வீடு செல்வான்.

அன்றும் அந்த நித்திய திருடன் ஊரில் திருடிவிட்டு இரவு நேரத்தில் அந்த சங்கமத்தில் நீராட வந்தான். நீராடப் படித்துறையில் இறங்குபோது ஒரு பெண்ணின் அழுகுரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். படித்துறை மேலே பாதை ஓரமாக இறந்து கிடக்கும் தொழுநோயாளியையும் அழுதுகொண்டி-ருக்கும் அவன் மனைவியையும் பார்த்தான். உடனே அவன் மனம் இளகியது. ஈமக்கடன் முடிக்க எவர் ஆதரவுமின்றி அப்பெண் அழுதுகொண்டிருப்பது கண்டு அத்திருடன் மிகவும் வருந்தினான்.

"அம்மா! உன் நிலையை பார்த்தால் மிகவும் வருத்தமாக இருக்கிறது. நான் இப்பிணத்தை அடக்கம் செய்து விட்டு ஈமக் கடன் முடிக்கிறேன்" என்றான். "ஐயா! நீங்க நல்லா இருப்பீங்க! அப்படியே செய்யுங்கள். ஆனால் என் கணவர் சாவதற்கு முன்பு தன்னைத் தொட்டு தூக்கி ஈமக்கடன் செய்பவர்களுக்கு சொல்லவேண்டியதாக ஒரு விஷயத்தைச் சொன்னார்" என்றார்.

"என்ன சொன்னார்? ...சொல்" என்றான்.

"தன்னைத் தொட்டுத் தூக்கி ஈமக்கடன் செய்ரவங்க ஏழு நரகத்திற்கும் கீழான நரகத்திற்கு போவாங்க" என்பதை மட்டும் சொல்லச் சொன்னார்" என்றாள்.

இதைக் கேட்ட அந்த நித்திய திருடன் திடக்குறியோடு புன் முறுவல் செய்து "அப்படியா சொன்னார்? எந்தப் பாவம் செய்தாலும் இந்தப் புண்ணிய சங்கமத்திலே மூழ்கி எழுந்தால் போய்விடுமே" என்று திடமாக சொல்லி, பார்க்கவே அருவெறுக்கும் நிலையிலிருந்த அக்குஷ்டரோகியின் பிணவுடலைத் தன்னிரு கைகளால் வாரியணைத்துத் தூக்கி அப்பால் கொண்டுச் சென்றான். சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு குழியைத் தோண்டினான். பிணத்தை உள்ளே கிடத்தி மண்ணை மூடி அடக்கம் செய்தான். பிறகு சங்கமத்தில் நீராட இறங்கினான். கணப்போதில் அப்பெண் மறைந்தார். வானத்தில் பார்வதி சமேதராக இடபவாகனத்தின் மீது சிவபெருமான் அந்த நித்திய திருடனுக்கு காட்சியளித்தார்கள்.

நாம் நமது தெய்வத்தின்மீது வைக்கும் நம்பிக்கை எவ்வளவு உறுதியாக இருக்க வேண்டும் என்று தெய்வம் அருளிய மேற்கூறிய கதை எடுத்துக்காட்டுகிறது.

*"நம்பினோர்க்கு தானே நலாம் பதம்".*



## இரு மச்சான்கள் சண்டையிட்ட கதை

ஓர் ஊரில் இரண்டு மச்சான்கள் இருந்தார்கள். அவர்கள் இருவரும் சேர்ந்து ஆடுகளை சந்தைக்கு ஓட்டிச் செல்வார்கள். சந்தையில் அவ்வாடுகளை விற்றுவிடுவார்கள்.

ஒரு நாள் சந்தையில் இரு மச்சான்களும் தாம் வாங்கிய ஆடுகளையெல்லாம் காலையில் இருந்து ஒவ்வொன்றாக விற்றுக் கொண்டே இருந்தார்கள். அன்று நன்றாக வியாபாரம் நடந்தது. எல்லா ஆடுகளும் நல்ல லாபத்திற்கு விற்பனை ஆயின. கடைசியில் ஒரே ஒரு ஆடுதான் மீதம் இருந்தது. அதுவும் நல்ல விலைக்கு விற்பனை ஆயிற்று. அந்தச் சமயத்தில் ஏற்கனவே இருண்டிருந்த வானம் கனமாக மழையைக் கொட்டியது. காலை முதல் வியாபாரம் செய்து கொண்டிருந்தவர்கள், சந்தையில் சாமான்கள் வாங்க வந்திருந்தவர்கள் எல்லாம் தம்தம் சாமான்களை வாரி எடுத்துக் கொண்டு மழைக்கு ஒதுங்கி நிற்பதற்காக இடங்களைத் தேடி ஓடினார்கள்.

சிறிது நேரத்தில் சந்தையில் மழைக்குத் தங்கும் இடங்களில் எல்லாம் சந்தைக்கு வந்தவர்கள் நின்று கொண்டார்கள். ஓர் ஆள் நிற்பதற்குக் கூட எங்கும் இடமில்லை. அந்த அளவிற்கு எல்லா இடங்களிலும் மக்கள் நெருக்கி அடித்துக் கொண்டு நின்றுகொண்டிருந்தார்கள்.

மழையும் விடாமல் பெய்துகொண்டிருந்தது. அப்போது இரு மச்சான்களும் காலையில் இருந்து வியாபாரம் செய்ததில் வந்த பணத்தையெல்லாம் விரைவாக வாரியெடுத்து தங்கள் மடியில் திணித்துக் கொண்டு மழையில் ஓடினார்கள். ஓடிகொண்டே இருவரும் மழையில் நனையாமல் தங்க இடம் இருக்கிறதா என்று பார்க்கிறார்கள். எந்த இடத்திலும் ஓர் ஆள் நிற்பதற்குக் கூட இடம் இல்லை. இவர்கள் ஓடும் திசையில் சிறிய தூரத்தில் ஒரு கொட்டகை - ஆனால் அங்கும் இடமில்லை. அப்போது இரு மச்சான்களும் அந்த கொட்டகையில் இடம்பெற

ஒரு யுக்தி செய்தார்கள். மழையில் நனைந்து கொண்டே ஒரு மச்சான் இன்னொரு மச்சான் கன்னத்தில் பளீரென்று திடீரென்று அறைந்தான். அறை வாங்கியவன் உடனே அறை கொடுத்த மச்சானை திரும்ப அறைந்தான். கண நேரத்தில் இருவரும் ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டார்கள்.

எதிர்பாராத இந்தக் காட்சியை எதிர்த்திசையில் இருக்கும் கொட்டகையில் மழைக்காக நின்றிருந்தவர்கள் பார்த்தார்கள். காலையில் இருந்து ஒற்றுமையாக ஆடு வியாபாரம் செய்து கொண்டிருந்தார்கள். அதுவும் மச்சான்கள். இப்படி அடித்துக் கொள்கிறார்களே என்றெண்ணினார்கள். கொட்டகையில் மழைக்காக நின்றிருந்த அனைவரும் இவ்விரு மச்சான்களின் சண்டையை பார்க்கவும் விலக்கவும் ஒவ்வொருவராக கடும்மழையையும் பாராமல் சண்டை நடக்கும் இடத்திற்கு கொட்டகையை விட்டு ஓடி வந்தார்கள். கூட்டம் இரு மச்சான்களைச் சூழ்ந்து வேடிக்கை பார்க்க ஆரம்பித்தது.

அப்போது சூழ்ந்து கொண்ட கூட்டத்திற்கிடையே இருந்து அந்த இரு மச்சான்களும் கீழே குனிந்து சண்டையிடுவது போலே ஏமாற்றி தரையிலேயே ஊர்ந்து வந்து கூட்டத்தின் காலடியில் நுழைந்து கூட்டத்தை விட்டு வெளியேறினார்கள். எந்தக் கொட்டகையில் இருந்து அவ்வளவு மக்களும் ஓடி வந்தார்களோ அந்தக் கொட்டகையை நோக்கி இருவரும் ஓடினார்கள். கொட்டகை காலியாக இருந்தது. மழையால் நனைந்தும் நனையாமலும் இருவர் மடியிலும் திணித்துவைத்திருந்த ரூபாய் நோட்டுகளை விரைவாக அடுக்கி எண்ணினார்கள். எண்ணி முடித்து சமமாகப் பங்கிட்டுக்கொண்டு பையில் பத்திரமாக வைத்துக் கொண்டார்கள்.

மச்சான்கள் சண்டையை விலக்கவும் வேடிக்கை பார்க்கவும் வந்த கூட்டம், மச்சான்களைக் காணாமல் திகைத்துத் திரும்பிப் பார்க்கும்போது, அவர்கள் மழைக்காக நின்றிருந்த அதே கொட்டகையில் அவ்விருவரும் தத்தம் கணக்கை முடித்துக் கொண்டு நிற்பதைக் கண்டார்கள்.

னம் தேவபிரானவர்கள் இக்கதையை உபதேசித்ததிலிருந்து சில கருத்துக்களைப் பார்ப்போம். ஆடுவிற்ற பணத்தை வாரிச் சுருட்டி மடியில் திணித்துக்கொண்டு கன மழையில் னனைந்து கொண்டே இடந்தேடி ஓடிவரும் இரு மச்சான்களுக்கும் சந்தையில் தங்க இடமில்லை. மடியில் கட்டிக்கொண்டிருக்கும் பணத்தை மழையில் னனையாமல் காக்க வேண்டும். பிறகு வியாபாரக்கணக்கைச் சரிபார்த்துப் பணத்தைப் பிரித்தெடுத்துக் கொள்ள வேண்டும். இதைச் செய்து முடிப்பதற்குக் கொஞ்சம் இடம் விடுங்கள் என்றால் யாராவது இடம் கொடுப்பார்களா? கொடுக்க மாட்டார்கள்.

''னமக்கு இங்கு னிற்பதற்கே இடமில்லை. உங்கள் இருவருக்கும் எங்கே இடம்?'' என்றல்லவா ஒவ்வொருவரும் கூறுவார்கள்.

ஆகவே இரு மச்சான்களுக்கும் சூதானம் தேவையாக இருந்தது. அதன் காரணமாகவே இடம் கிடைத்தது.

சூதானமாகிய யுக்தியைக் கொண்டு காரியமாற்ற வேண்டும் என்பதை வற்புறுத்தும் ஆண்டவர்களின் திருவாக்கினை இங்கே காண்போமாக. *"பீடி சிகரெட் விட்டு விடும் படியும், உலகில் எல்லோரும் னாறித்தான் சாகிறார்கள் என்றும் இந்த எல்லைக்கு வந்நால் மட்டுமே அது இல்லை என்றும், னேராக இடித்து இங்கு வந்நவர்களிடம் னீங்கள் பேச ஆரம்பித்தால் இங்கு புதிதாக வருபவர்களுக்கு னாணம்தான் உண்டாகும். சிலருக்கு வெறுப்பு வந்நும் கோபப்படுவார்கள். ஆனால் அதையே னாம் பேசினால் வந்நவர்களுக்கு வெறுப்பு வராது. ஏனெனில் னாம் அவரவர்களுடைய அறிவுக்குத் தக்கப்படி சூதானமாக பலவாறு பேசி ஒருஎல்லையில் அவர்களைக் கொண்டு வந்நு விடுவோம். அப்போது அவர்கள் ஆச்சரியமும் மகிழ்ச்சியுமுறுவார்கள். அந்நச் சூதானம் அந்த யுக்தி கொண்டு னீங்களும் பேசவேண்டும்"* என்று அருளி உள்ளார்கள்.

## தப்பிலி ராஜா

முட்டாள் ராஜா ஒருவன் இருந்நான். மேலும் அவன் ஒரு தப்பிலி. அவனிடம் ஒருனுள் ஒரு புத்திசாலியான குருடன் தன்னுடைய சாமர்த்தியத்தைக் காட்டி சன்மானம் பெற எண்ணி வந்நானும். அந்ந ராஜா மகா குயுக்தியுடன் அவனை பரீட்சை பண்ணப் போவதாக சொல்லி ஒரு வைரத்தைக் கொண்டு வரச்சொல்லி "இது என்ன? சொல் பார்க்கலாம்"! என்று கேட்டானும். ராஜா மனதிற்குள் இவன் குருடன் ஆகவே இவனுல் சரியாக விடை சொல்ல முடியாது என்று இறுமாந்நிருந்நானும்.

குருடனே அதைக் கையால் தொட்டுப் பார்த்து "இது வைரமில்லை. போலி" என்றுனும். ராஜா ஒத்துக்கொள்ள வில்லையாம். உடனே குருடன் "அதை உடையுங்குள் போலி என்று தெரியும்" என்றுனும். உடனே அதை ராஜா உடைத்துப் பார்த்தால் உள்ளே பூச்சிக் கூடுபோல் இருந்நதாம். ஐய்யய்யோ! னமக்குக் கண் இருந்நும் இது போலி வைரம் என்று தெரியவில்லையே. இந்நக் குருடன் கண்டுபிடித்து விட்டானே என்று ஆச்சரியப்பட்டானும். குருடன், ராஜா தனக்கு இதற்காக ரொம்பப் பெரிய சன்மானமாகக் கொடுப்பார் என்று ஆவலுடன் எதிர்பார்த்து இருந்நானும். அந்ந முட்டாள் ராஜாவோ மகா கஞ்ஞுச்சே. அரண்மனைச் சேவகனைக் கூப்பிட்டு "இந்நா இந்நக் குருடனுக்கு அவன் போலி வைரம் என்று கண்டுபிடித்ததற்கு சன்மானமாக ஒரு வேளைசோறுபோடு" என்றுனும். குருடனுக்கோ ஒரே ஏமாற்றமாகி விட்டதாம்.

இரண்டார்வதாக குருடனை சோதனை பண்ண எண்ணி அந்ந முட்டாள் ராஜா ஒரு குதிரையைக் கொண்டுவந்நு வைத்து "இது பஞ்ஞு கல்யாணி குதிரையாக்கும். இதற்கு என்ன சொல்கிருய்?"

என்றுனும். குருடன் அந்நக் குதிரையின் முகத்தை தொட்டுப் பார்த்தானும். அது என்னடா என்றுல் எருமை மாடாட்டம் பெருமுச்சு விட்டுக் கொண்டிருந்நதாம். ஆகவே குருடன் "இது ஜாதிக் குதிரை அல்ல. பஞ்ஞ கல்யாணி குதிரையும் அல்ல. இது எருமைப் பால் குடித்து வளர்ந்ந குதிரை" என்றுனும்.

ராஜா னம்ப மறுத்து விட்டானும். ஆகவே குருடன் தான் சொல்வதை னிருபிக்க வேண்டி அந்நக் குதிரையை னீர்வளம் னிறைந்ந இடத்திற்கு ஓட்டிப் போகச் சொன்னுனும். ஒரு குளக்கரைப் பக்கம் போன உடன் அது ஓடிப்போய் தண்ணீருக்குள் எருமை மாடாட்டம் னின்று விட்டதாம். (சபையில் சிரிப்பு). அப்புறம் தான் ராஜா "ஆமாம். இது எருமைப்பால் குடித்து வளர்ந்ந குதிரை" என்று ஒத்துக் கொண்டானும். உடனே குருடனுக்கு சன்மானமாக 2 வேளை சோறு போடும்படி உத்திரவு இட்டானும். இப்போதும் குருடனுக்கு பெருத்த ஏமாற்றமாய்ப் போய் விட்டதாம்.

மூன்றாவதாக ராஜா குருடனிடம்" னல்லது. னும் கேட்ட இரண்டு கேள்விகளுக்கும் சரியான விடையளித்து விட்டாய். இனி மூன்றுவதாக னுன் எப்படிப்பட்டவன் என்று சொல்லு" என்றுனும். குருடன் ராஜ தர்பாரையும் பொருட்படுத்தாது "னீ தப்பிலி. தப்பிப் பிறந்நவன்" என்றுனும். ராஜா உடனே கடுங்கோபத்துடன் சிம்மாசனத்தை விட்டு எழுந்நு "னீ என்னே அவமானப்படுத்தி விட்டாய். உன்னே என்ன செய்கிறேன் பார் என்று கர்ஜித்தானும். அதற்கு குருடன் "னுன் சொன்னதில் கொஞ்ஞம் கூட சந்நேகமில்லே. முதல் கேள்விக்கு சரியான விடையளித்தற்கு ஒரு வேளேச் சோறு போட உத்திரவு இட்டீர்கள். இரண்டாவது கேள்விக்கு விடையளித்ததிற்கு பெரிய சன்மானமாக எதாவது கொடுத்திருக்கலாம். அதற்கும் ஒன்றும் கொடுக்காமல் இரண்டு வேளே சோறு போடு என்று

உத்திரவிட்டீர்கள். தப்பிலிக்குத் தான் இந்த கஞ்சு புத்தி வரும். ஆகவே நீர் நிச்சயமாக ஒரு தப்பிலிதான். வேணுமானால் மகாராணியைப் போய்க் கேட்டுப்பார்'' என்றானாம்.

உடனே ராஜா கோபமாக அந்தப்புரத்திற்கு ஓடிப் போய் மகராணியிடம் ''அம்மா! நான் நிஜமாக உங்களுக்குப் பிறந்தவன் தானே? உண்மையைச் சொல்லிவிடுங்கள்.'' என்று கோபமாக கத்தினான். ராணியார் பயந்து போய் உண்மை தெரிந்து போய்விட்டதே என்று நினைத்து. ''இல்லை. நீ என் வயிற்றில் பிறந்தவனில்லை. மகாராஜாவுக்கு புத்திர பாக்கியமே இல்லாமல் போய் விட்டது. அரசாளுவதற்கு பரம்பரை வேண்டுமே என்று சொல்லி மந்திரி யாருக்கும் தெரியாமல் தெருவில் சென்று கொண்டிருந்த பிச்சைக்காரியின் குழந்தையை கொண்டுவந்து கொடுத்தார். அந்த குழந்தை தான் நீ. நீ தப்பிப் பிறந்தவன் தான்'' என்றாளாம்.

*குருடன் சாமர்த்தியத்தை ராஜா மதிக்காததால் உலகிற்கு உண்மை தெரியவந்து அவமானம் அடைந்தான்.*

*''போலி குருமார்களும் தப்பிலி ராஜா போலத்தான். அவர்களுக்கு மெய்ஞ்ஞானமும் தெரியாது, மெய்ஞ்ஞானிகளின் அருமையும் தெரியாது. பெருமையும் தெரியாது. ஆனால் எல்லாம் தெரிந்தவர்கள் போல இவர்கள் நடகமாடுவார்கள். உலகத்திற்கு உண்மை தெரியும் போது தான் இவர்கள் தப்பிலிராஜா போல அவமானம் அடைவார்கள்.'' என்று திருவாய் மலர்ந்தருளினார்கள்.*



# பஞ்சாமிர்தக் கதை

இன்றைக்குச் சுமார் நூறு அல்லது நூற்றிஇருபது ஆண்டுகளுக்கு முன்னால் பஸ் போக்குவரத்து அதிகம் இல்லாத காலம். கிராமப் புறங்களில் வசிப்பவர்கள் குடும்பத்துடன் தொலைதூரத்தில் உள்ள கோயிலுக்குப் போக வேண்டும் என்றால் தனியாக மாட்டு வண்டி கட்டிக்கொண்டுதான் போக வேண்டும். பஸ் வசதியும் ரயில் வசதியும் இல்லாத ஊர்களில் இருந்து தனியாக மாட்டு வண்டி கட்டிக்கொண்டு போய்வருவது வழக்கமாக இருந்தது.

ஒரு சமயம் பழனிக்குப் பல காத தொலைவில் உள்ள ஒரு கிராமத்தில் வசித்து வந்த குடும்பத்தார் பழனி கோயிலுக்குச் சென்று சுவாமி தரிசனம் செய்து வர வேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொண்டார்கள். இப்படிக் குடும்பத்துடன் கோயிலுக்குச் சென்று வருபவர்கள் தமக்குத் துணையாக இதில் அனுபவமுடைய ஒரு வழி காட்டியைக் கூடவே அழைத்துச் செல்லுவர்கள். வழிகாட்டித் தொழில் செய்பவர்கள் பலர் உண்டு. இவர்கள் சொல்கின்றபடியே கோயிலுக்குச் செல்லும் குடும்பத்தார்கள் கேட்டு நடப்பார்கள்.

அனுபவசாலியான அந்த வழிகாட்டி பழனி கோயிலுக்குச் செல்லும் அந்தக் குடும்பத்தாரிடம் எவரும் தங்க நகைகளைப்போட்டுக் கொண்டுவரக் கூடாதென்று கூறிவிட்டார். ஆகவே கோயிலுக்குச் செல்லும் பெண்மணிகள் அனைவரும் தாம் அணிந்திருந்த நகைகளை எல்லாம் கழற்றி வீட்டிலேயே வைத்து விட்டார்கள். அக்காலத்தில் கிராமப்புறங்களில் இருந்து பெரு நகரங்களுக்குச் செல்லச் சரியான சாலைவசதிகள் இல்லை. சிறு சிறு காட்டுப் பிரதேசங்களைக் கொடிவழிகள் மூலமாகக் கடந்தே செல்ல வேண்டும். இந்த இடங்களில் திருடர்கள் மறைந்திருந்து வெளிப்பட்டு வண்டிகளை மடக்குவார்கள். வண்டிக்குள் இருப்பவர்களிடம் நகை நட்டு பணம் அத்தனையும் கொள்ளையடிப்பார்கள்.

பழனிக்குச் சென்ற இக்குடும்பத்தார் ஒரு இடையூறுமின்றித் திவ்யமாகச் சுவாமிதரிசனம் செய்து விட்டு மாட்டுவண்டியில் சொந்தகிராமத்துக்குத் திரும்பிக்கொண்டிருந்தார்கள். வண்டி பழனியை விட்டுப் பல மைல் தூரத்தை கடந்து ஜன னடமாட்டமில்லாத மரங்ஙள் புதர்கள் அடர்ந்த ஒரு சிறு காட்டுப் பகுதிக்குள் சென்று கொண்டிருந்தது. அப்போது இரவு னேரம். கும்மிருட்டில் வண்டி மெதுவாகச் சென்று கொண்டிருந்தது. அந்த னேரத்தில் வண்டிக்குள் இருந்த ஒரு குழந்தை வெளிக்குப் போக அவசரப்படுத்தியது. இரவு னேரம்-காட்டுப் பகுதி - வண்டியை னிறுத்திவிட்டுக் குழந்தையைக் கீழே இறக்குவதற்கு யாருக்கும் விருப்பமில்லை. குழந்தையோ தொந்தரவு செய்கிறது. என்ன செய்வதென்றே அந்த னேரத்தில் யாருக்கும் தெரியவில்லை.

வண்டிக்குள் இருந்த ஒரு வயதான "பாட்டி சமயோசிதமாக ஒரு யோசனை செய்தது. பக்கத்தில் மூடியுடன் கூடிய காலியான ஒரு பஞ்சாமிர்த தகர டப்பா கிடந்தது. அதை எடுத்து வைத்துக் குழந்தையை அதில் இருக்கச் செய்தது. பிறகு அந்த டப்பாவை னன்றாக மூடி வண்டிக்குள்ளேயே ஒரு பக்கமாக அந்தப்பாட்டி வைத்துவிட்டது.

இந்த னிகழ்ச்சிக்குப்பின் வண்டி சிறிது தூரந்தான் சென்றிருக்கும். வண்டி செல்லும் பாதையில் மரங்ஙளிடையே மறைந்திருந்த னான்கு திருடர்கள் திடீரென்று வண்டியை னிறுத்தினார்கள். கைகளில் வைத்துக் கொண்டிருந்த கத்தி கம்புகளைக் காட்டி மிரட்டினார்கள். "யாரும் னகரக் கூடாது. போட்டிருக்கிற னகைகளையெல்லாம் உடனே கழட்டிக் கொடுத்துடுங்ஙு. உம்... சீக்கிரம்" என்று கூறி வண்டிக்கு முன்னும் பின்னும் மிரட்டினார்கள். இருந்தால் தானே கொடுப்பார்கள். வண்டிக்குள் அமைதி னிலவியது. திருடர்கள் னால்வரும் விட்டபாடில்லை. வண்டியை சோதனை இட்டார்கள்.

ஒரு னகை கூடக் கிடைக்கவில்லை. வந்த திருடர்களுக்கு ஒரே ஏமாற்றமாகப் போய் விட்டது. தாலிச் சரட்டில் உள்ள பொன்னை பறிப்பதற்குக் கூட வாய்ப்பில்லை. காரணம் தாலிச் சரட்டில் உள்ள பொன்னைகூட வீட்டிலேயே கழற்றி வைத்துவிட்டு மஞ்சுள் கொம்புளைப் பெண்கள் கட்டியிருந்நார்கள்.

கொள்ளையடிக்க வந்த திருடர்கள் வெறுங்கையுடன் போவதா என்று ஆத்திரத்தில் வண்டிக்குள் ஏதாவது கிடைக்குமா என்று தேடிக் கொண்டிருந்நார்கள். அப்போது வண்டிக்குள் இருந்த பாட்டி சற்றுமுன் குழந்தை கழித்த அந்த டப்பாவைச் சோதனை இடும் திருடர்கள் பார்க்காதபடி அதாவது அவர்கள் கண்களுக்குத் தெரியாதபடி மறைத்து வைத்தது. அசூசையான அந்த டப்பா திருடர்கள் கண்ணில் படாமல் இருக்கட்டும் என்ற எண்ணத்திலேயே அந்தப்பாட்டி அப்படி செய்தது.

ஆனால் சோதனையிட்டு கொண்டிருந்த திருடர்களில் ஒருவன் பாட்டி எதையோ மறைப்பதை எப்படியோ பார்த்து விட்டான். தனக்குத் தெரியாமல் மறைப்பதைக் கண்டதும் ஏதோ முக்கியமானது. அதனால்தான் இப்படி மறைக்கிறது என்று எண்ணிய திருடன் "ஏய் பாட்டி! என்னத்தை இப்படி மறைச்சி மறைச்சி வைக்கிற- இப்படிக் கொண்டா அதை" என்றான். அந்தக் கிழவி "ஏம்பா.... அதை மட்டும் எடுக்காதீங்க .... அதுவேண்டாம்பா உங்களுக்கு." என்று அவர்களிடம் அடக்கமாகக் கெஞ்சியது. ஆனால் திருடர்கள் விடுவதாக இல்லை. பாட்டி மறைத்து வைத்த டப்பாவை ஒரு திருடன் எடுத்து வைத்துக் கொண்டான். இவ்வளவு னேரம் சோதனை இட்டும் ஒன்றும் கிடைக்காமல் ஏமாந்த திருடர்களுக்கு இந்தப் பஞ்சாமிர்தமாவது கிடைத்ததே என்று திருப்தி உண்டாயிற்று. ஆகவே அந்த வண்டியை போக விட்டார்கள்.

வண்டி மீண்டும் தன் பயணத்தைத் தொடர்ந்தது. தகர டப்பாவை எடுத்துக் கொண்ட னான்கு திருடர்களும் தம் ஊரை

ளேக்கி னடந்நார்கள். அந்நத் திருடர்கள் தம் திருட்டுத் தொழிலைச் செய்வதற்கு இரவு னேரங்ஙளில் ஊரை விட்டுப் புறப்படும் போது அவ்வூர்க் கோடியிலுள்ள கோயிலில் கூடுவார்கள். னிறைய னகை, காசு பணம் கிடைக்க வேண்டும் என்று கோயில் தெய்வத்தை வேண்டிக் கொள்வார்கள். அதன் பிறகே அங்ஙிருந்நு திருடுவதற்கு கிளம்புவார்கள். கொள்ளையடித்து முடிந்நு ஊர் திரும்பும் போது மீண்டும் அக்கோயிலுக்கு வருவார்கள்.

திருடியவற்றைப் பங்ஙு போட்டுக் கொண்டு வீட்டிற்குப் போவார்கள். இப்படியே அன்றும் இந்ந ஞன்கு திருடர்களும் வழக்கமாக அக்கோயிலை னேக்கி வந்நு கொண்டிருந்நார்கள். "இன்னக்கி னமக்கெல்லாம் ஒண்ணுமே கிடைக்கல. ஏதோ ஞம் இந்நச் சாமியைக் கும்பிட்டுபோன புண்ணியத்திலே இந்நப் பஞ்சாமிர்தமாவது னமக்குக் கிடைச்சிருக்கு. ஆகவே, ஞம் சுத்தம் பத்தமா குளிச்சிட்டு ஆளுக்குக் கொஞ்சம் எடுத்துக்கலாம்" என்று கையில் அந்ந டப்பாவை வைத்திருந்ந திருடன் சொன்னன்.

"ஆமா ... இதுவும் சரிதான்... அப்படியே செய்வோம்" என்று மற்றொரு திருடன் அதை ஆமோதித்தான். ஞன்கு திருடர்களும் அதை ஆமோதித்தனர். சிறிது னேரத்திற்கெல்லாம் ஞன்கு திருடர்களும் கோயில் பக்கத்தில் இருந்ந ஒரு பெரிய கிணற்றை அடைந்நார்கள். அது இறைக்கும் கிணறு. னீர் ரொம்ப ஆழத்தில் இருந்நது. சால் கொண்டு இறைப்பதற்குப் போடப்பட்டுள்ள கற்பலகையின் மீது முதலில் குளித்துவிட்டுச் சாப்பிடலாம் என்று சொன்ன திருடன் கையில் டப்பாவுடன் உட்கார்ந்து கொண்டான். டப்பாவில் இருப்பது கோயில் பிரசாதம். ஆகையால் கண்ட இடத்தில் கீழே வைக்கக்கூடாது. கையில்தான் வைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்ற புனித எண்ணத்தோடு அமர்ந்திருந்நான். மற்ற மூன்று திருடர்களும் "ஞங்ங மூன்று பேரும் கீழ் இறங்ஙிக் குளிச்சிட்டு வாரோம்.

ஜாக்கிரதையாய் பார்த்துக்கோ.'' என்று கூறிவிட்டு ஒருவர்பின் ஒருவராகப் படிக்கட்டுகளில் இறங்கினார்கள். "நாம் கீழே குளிக்கும் சமயம் பார்த்து நம்மையெல்லாம் ஏமாற்றிவிட்டு நமக்குத் தெரியாமல் இவன் மட்டும் டப்பாவில் உள்ள கோயில் பிரசாதத்தைச் சாப்பிட்டு விடப்போகிறானே'' என்ற எண்ணத்தில் அப்படிக் கூறிவிட்டுக் கீழே இறங்கினார்கள்.

கிணற்றில் இறங்கிய மூன்று திருடர்களும் அவசர அவசரமாக தம் துணிகளையெல்லாம் நீரில் நனைத்து துவைத்து விட்டு குளித்துக் கொண்டிருந்நார்கள். மேலே டப்பாவை வைத்திருந்த திருடனுக்கு உள்ளே இருக்கும் பஞ்சாமிர்தத்தை எண்ணி நாவில் நீர் ஊறியது. கிணற்றுள் இருப்பவர்கள் குளித்துவிட்டுக் மேலே வருவதற்குள் நம் கையில் உள்ளதை அவர்களுக்குத் தெரியாமல் கொஞ்சம் எடுத்துச் சாப்பிட்டு விட வேண்டும் என்று எண்ணத் தொடங்கினான். டப்பாவைப் பார்த்துக் கொண்டே எண்ணினான். அதற்காக கீழே குளிப்பவர்களிடம் பேச்சுக் கொடுத்துக் கொண்டே அவர்களைப் பார்த்தபடியே மெள்ள டப்பாவின் மூடியைத் திறந்நான். கண்ணிமைக்கும் நேரத்தில் தன் இரு விரல்களை அதனுள் விட்டு ஒரு சுற்று சுற்றி அவன் எடுத்துச் சடக்கென்று மிக விரைந்து வாயில் போட்டுக்கொண்டு வாயை மூடிக் கொண்டான். டப்பாவையும் மூடி விட்டான்.

டப்பாவின் சரக்கு இன்னதென்று அப்போதுதான் அவனுக்கு தெரிந்நது. வெளியில் சொன்னால் வெட்கக்கேடு. என்னத்தைச் சொல்வது? எப்படி சொல்வது? வெளியில் துப்பிவிடலாம் என்று துப்பினால் கிணற்றுள் இருப்பவர்கள் பார்த்துத் தெரிந்து கொண்டால் அது அவனுக்குப பெரிய மானக் கேடு என்று மடக்கென விழுங்கினான். அடுத்த கணமே, கீழே குளித்துக் கொண்டிருப்பவர்களும் இதை சாப்பிட வேண்டும் என்று எண்ணித் திட்டமிட்டான். சிறிது நேரத்தில் கிணற்றுள்

குளித்துக் கொண்டிருந்த மூவருள் ஒருவனுக்கு மேலே இருப்பவன் னமக்கெல்லாம் தெரியாமல் சாப்பிட்டு விடக்கூடாது என்றெண்ணம் உண்டாயிற்று. ஆகவே அவன், அதாவது இரண்டாவது திருடன் மிக அவசரமாகக் குளித்து விட்டு ஈர உடையுடன் மேலே வந்தான்.

"ஞன் குளிச்சாச்சு, னீ கீழே இறங்கிக் குளிச்சுட்டு சீக்கிரமா வா... இதை எங்கிட்டே கொடுத்துட்டுப்போ...." என்று அவனிடமிருந்து டப்பாவை பய பக்தியோடு வாங்கிக் கொண்டான்.

"இது பிரசாதம்பா. ஞன் எப்படி வைச்சிருந்தேஞே அப்படியே வச்சிருக்கணும்". என்று செல்லிக்கொண்டே முதல் திருடன் கிணற்றில் இறங்கிஞன். முதல் திருடன் தான் சாப்பிட்டதைப் போலவே இவனும் இதை சாப்பிட வேண்டும் என்பதற்காகவே இப்படிச் சொல்லிவிட்டுச் சென்ருன்.

முதல் திருடன் என்ன எண்ணிக் கொண்டு சொன்ஞேே அந்த எண்ணம் வீண் போக வில்லே. குளித்துவிட்டு ஈர உடையோடும் பயபக்தியோடும் மேலே இருந்த முதல் திருடனிடமிருந்து பிரசாத டப்பாவை வாங்கிக் கொண்ட இரண்டாம் திருடன் இது தான் தக்க சமயம் என்று எண்ணி, கிணற்றில் மூவரிலும் ஞமே முந்திக் கொள்ளவேண்டும் என்றெண்ணிஞன். பசியோடிருந்த அவனுக்குக் கையில் இருந்த பிரசாத டப்பா ஞக்கில் னீர் ஊற வைத்தது. இந்த னல்வாய்ப்பை ஏன் வீணுக்க வேண்டும் என்று எண்ணிஞன். கீழே குளித்துக் கொண்டிருந்தவர்களிடம் பேச்சுக் கொடுத்துக் கொண்டும் அவர்களேப் பார்த்துக் கொண்டும் கையிலிருந்த டப்பாவைத் திறந்தான். இருவிரல்களே டப்பாவினுள் விட்டுத் துழாவி எடுத்தான். கணனேரத்திற்குள் வாயிலிட்டு விழுங்கிவிட்டு வாயை மூடிக் கொண்டான். இரண்டாம் திருடனுக்கும் திடீர்

அதிர்ச்சி. வெளியே சொன்னு வெட்கக் கேடு. வெளியே தெரிந்நா மானக்கேடு, ஆகவே வெளியே சொல்ல முடியுமா? முடியாதே.

இதற்குள் கீழே குளித்துக் கொண்டிருந்த மூன்று திருடர்களும் ஈர உடையுடன் மேலே வந்நார்கள். மேலே வந்த மூவரில் முதல் திருடன் தன்னைப் போலவே தன்னிடமிருந்து டப்பாவை இரண்டாம் திருடனும் சாப்பிட்டிருப்பான் என்று உறுதியாக எண்ணினான். முதலிரண்டு திருடர்களும் ஒருவரை ஒருவர் இவ்வாறே எண்ணினார்கள். ஆனால் வெட்கக் கேட்டை வெளியே சொல்ல முடியவில்லை. இருப்பினும் இந்தச் சரக்கைச் சாப்பிடாத மற்ற இருவரையும் எப்படியாவது சாப்பிட வைக்க வேண்டும் என்று எண்ணமுடையவர்களாகவே பேசிக்கொண்டு பக்கத்தில் இருந்த கோயிலை அடைந்தார்கள்.

"இதை நாம் மட்டும் ஏன் இங்கே சாப்பிட வேண்டும்? வீட்டிற்கும் கொண்டு போனால் மற்றவர்களும் சாப்பிடக்கொடுக்கலாமே. இப்போ ராத்திரி னேரம். ஆகவே இதை இந்தக் கோயில் உள் சுவற்றில் உசரமா இருக்கிற ஒரு மாடத்திலே வைச்சுடலாம். நாளைக் காலையிலே நாம் வந்து எடுத்துப் போகலாம்." என்றான் முதல் திருடன். இதைக் கேட்ட இரண்டாவதாகச் சாப்பிட்ட திருடன் "ஆமாம்..... அதுதான் சரி. அப்படியே செய்யலாம்" என்று கூறினான். பிறகு இரண்டாம் திருடன் அக்கோயில் சுவற்றில் மிக உயரத்திலுள்ள ஒரு மாடத்தில் அந்த டப்பாவை வைத்தான். பிறகு நான்கு திருடர்களும் அவரவர் வீட்டிற்குத் திரும்பினார்கள்.

சாப்பிட்ட இரு திருடர்களும் "நாம் வீட்டிற்குப் போனவுடன் எப்படியும் சாப்பிடாத ரெண்டு பேரும் பொழுது விடிவதற்குள் ஒருவர் பின் வருவராகக் கோயிலுக்கு வந்து சாப்பிடட்டும்" என்று எண்ணிக் கொண்டே போனார்கள். இப்படி இவர்கள் எண்ணிய எண்ணங்களும் வீண்போகவில்லை.

அப்படியே னடந்நது. இரவு னேரங்ஙளில் வெளியே திருடிக் கொண்டு வரும் கணவன்மார்கள் தத்தம் வீட்டுக் கதவைத் தட்டும் போதே அந்நத் தட்டுதலில் இருந்நு திருடிக் கொண்டு வந்நது கொஞ்சமா அதிகமா அல்லது வெறுங்ஙையோடு வந்நிருக்கிறுர்களா என்பதை மனைவிமார்கள் தெரிந்நு கொண்டு விடுவார்கள். திருடப்பட்டவை அதிகம் எனத் தெரிந்நால் மிகவும் ஆர்வத்துடன் வந்நு கதவைத் திறப்பார்கள். ஒன்றுமே இல்லாமல் வெறுங்கையோடு வந்நிருக்கிறுர்கள் என்றுல் பெரும் எரிச்சலுடன் வந்நு கதவைத் திறப்பார்கள். தாமதமாகவும் வந்நு திறப்பார்கள்.

முதலில் சாப்பிட்ட திருடன் தன் வீடு னேக்கிச் சென்றுன். கதவைத் தட்டினுன். தூக்கத்தில் இருந்நு அத்திருடனின் மனைவி தூக்கம் தெளிந்நு எழுந்நாள். மீண்டும் கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. இன்று வெறுங்ஙையோடுதான் கணவர் வந்நிருக்கிறுர் என்று மனைவிக்கு தெரிந்நுவிட்டது. ஆகவே மன எரிச்சலுடன் மெள்ளத் தாமதமாக னடந்நு வந்நாள்.

இதனைக் பொறுக்கமாட்டாத திருடன் சற்று பலமாகத் தட்டி.... ''எலே.... சீக்கரம் கதவைத்திற'' என்று கத்தினுன். இதனைக் கேட்டுக் கோபமடைந்ந அவன் மனைவி எரிச்சலோடு கதவைத் திறந்நு கொண்டே ''ஞய்ப்பீ தின்னவன் மாதிரி ஏன் இப்பிடிக் கத்தரே'' என்று வெடுக்கெனக் கூறி விட்டு உள்ளே சென்றுள். மனைவி சொன்னதைக் கேட்ட திருடனுக்குப் பேரதிர்ச்சி! ஒரே வியப்பு - ஆச்சரியம். கிணற்றடியிலே யாருக்கும் தெரியாம தின்னது இவளுக்கு எப்படி தெரிந்நது? என்று எண்ணி வியந்நான். பேச வாய்வரவில்லை எப்படி வரும்? மனைவி சொன்னது உண்மைதான் என்று சொல்ல முடியுமா? வெளியில் சொன்னுலும் வெட்கக்கேடு. வெளியில் தெரிந்நாலும் மானக்கேடு அல்லவா? ஆகவே பேசாமல் உள்ளே சென்றுன்.

வயிறு குலுங்கக் குலுங்க வாய்விட்டுச் சிரிக்கும் பெரிய வெடிக் சிரிப்புக் கதையினை தங்களைச் சுற்றி அமர்ந்திருந்த பிள்ளைகளைப் பார்த்து சொல்லிவிட்டுச் சிறிது கூடச் சிரிப்பின் சலனமில்லாமல் ஆண்டவர்கள் வீற்றிருந்தார்கள்.

இந்த கதையினை னம் தேவபிரானவர்கள் அருளியதை கேட்கும்போது ஒரு பெரும் தீர்க்க தரிசனம் னமக்கு னினைவிற்கு வருகிறது. திக்கெல்லாம் புகழும் மக்கமா னகரில் எழுந்தருளிய புனித கோமள ஞன் மறையரசு னீங்கா னன்னிலத்து வேந்தராகிய மனுக்குல னுயகம் முகம்மது (சல்) ஆலனபியவர்கள் மூலமாக இறக்கப் பெற்ற குர் ஆண் தபுசீரின் இடத்தே ஆண்டவர்களை குறித்து எழுதியுள்ள செய்தி தான் அது.

*"மேலான உவமானம் பதித்தேறிவிளக்குவோர்*

*கீழ்மையி னுவமானம் கொடுக்கஞ்ஞார் மகதியென்*

*உரை சதுர் மறை சூரா - இரண்டாயத்*

*தசமிரண்டது மூன்றிலே....."*

*-ஆதிமெய் உதயபூரண வேதாந்தம்.*



# காளிதாசன் கதை

ஒரு நாட்டு சேனாதிபதி மந்திரியும் முனைக்கிளையில் உட்கார்ந்து கொண்டு அடிக்கிளையைவெட்டுகின்ற ஒரு முட்டாளான மட்டியைப் பார்த்தார்களாம். ஆனால் அவனுடைய சுந்தர முகம் இவர்களையே மயங்கச் செய்ததாம். தங்கள் குமாரர்களில் ஒருவனை படிப்பறிவு இல்லாததால் மணக்க மறுத்துவிட்ட அவர்களின் இளவரசியை இவனைக்கொண்டு வந்து பழி தீர்த்து அவனை அவமானம் செய்ய வேண்டும் என்ற தீய எண்ணம் இருவருக்கும் அப்போது வந்தது. உடனே அவனை சர்வபூஷணங்களமாக அலங்கரிக்கச் செய்து இளவரசிமுன் மணமகனாக நிறுத்தினார்கள். இந்த சதி தெரியாமல் முன் ஜன்ம விதி வசத்தால் இந்த சுந்தரனை இளவரசி சம்மதித்து மணந்து கொண்டாள். அன்று இரவு மணவறையில் மாப்பிள்ளையை அனுப்பி வைத்தார்கள். அவன் உள்ளே முதலில் கட்டிலை நோக்கிச் செல்ல காலடி எடுத்து வைத்த பொழுது இங்குள்ள ரத்னகம்பளம் மெத்மெத்- தென்று வழவழப்பாய் இருப்பது கண்டு இது ஏதோ என்று பயந்தானும். பிறகு மெத்தையை தொட்டுப்பார்த்தப் போது அது அமுங்கிய உடனே அதற்குள் ஏதோ இருக்கிறதென்ற நடுங்கினனும். இப்படியே ஒவ்வொரு பொருளாய்த் தொட்டுப்பார்த்துப் பார்த்து பயந்நான். இவனுக்கு கரடு முரடானவையே பழக்கம். இந்த அறையின் வாசனையும் ஸ்பரிசமும் அவன் தலைக்கு கிறுகிறு என்ற மயக்கத்தையும் கொடுத்தது. அவனுக்கு அமர எந்த இடமும் சரிபட்டுவரவில்லை. கடைசியாக இளவரசி கைகால் அலம்ப கட்டி வைத்திருந்த ஒரு முற்றத்தில் போய் அதுதான் சரியான இடமாக அவனுக்கு பட்டு அங்கேயே நிம்மதியாகப் படுத்து தூங்கிவிட்டான்.

இளவரசி மகா அலங்கார வைபோகத்துடன் அறையில் நுழைந்து ஞணத்தோடு இவர் எங்கே என்று பார்த்தாள். இவனைக்காணுமல் சுற்றுமுற்றும் பார்த்து ஏதோ னம்முடன் ஒளிந்து கண்ணுமுச்சி விளையாடுகிருர் என்று எண்ணி சந்தோஷமாக எல்லா இடத்தையும் தேடிப்பார்த்தாள். கதவுக்குப் பின்னல் திரைகளுக்குப் பின்னல், னிலைக் கண்ணுடிக்குப் பின்னல் கட்டிலுக்கடியில் என்று எங்கெங்கும் தேடினுள். கடைசியாக மனம் அலுத்து முற்றத்திற்குப் போக வந்தபோது அங்கு இவன் படுத்திருப்பதைப் பார்த்தாள். ஒரே ஆச்சரியமாக சரி என்று மந்தகாச சிரிப்புடன் பன்னீர் கும்பாவைக் கையில் எடுத்து கொண்டு வந்து அருகில் னின்று இவன் மீது அதை தெளித்தாள். இவன் ஆடுமேய்க்கும் ஞாபகத்தில் ஆடுதான் தன்மீது முத்திரம் விடுகிறது என்று னினைத்து தூக்க கலக்கத்தில் "சீ வாய்க்கால் இருக்க, வரப்பு இருக்க, வாயிலே வந்து ஏன் போறே?" என்று உரக்க வாய்விட்டு முணங்கினுன். அப்பத்தான் இளவசரசி தாம் ஏமாற்றப்பட்டதை தெரிந்து கொண்டாள். ஆனுல் தெரிந்து கொண்டாலும் மனக் கலக்கமடையாமல் உறுதியுடன் திடமாக இருந்து அரண்மனை வித்வான்களை வரழைத்து இவனுக்கு பாடம் கற்பித்தாள். இவனை சிறந்த அறிஞுகவும் கவியாகவும் ஆக்கி அரசனுக்கினுள்.

*இந்த காளிதாஸ் யார் தெரியுமா? வேறு யாருமல்ல. என் முன்னுல் இருக்கும் இந்த காளிதாசர்கள் தான்!" என்று மகிழ்ச்சியுடன் தங்கள் பிள்ளைகளைப்பார்த்து அருளினுர்கள்.*

# ஜனக மகாராஜன் கதை

ஜனக மகராஜா மிதிலையில் சிறப்பாக ராஜ்ய பாரம் செய்து வருகிறார். அவருடைய நாட்டிலே சன்னியாசிகள் நிறைய பேர் இருந்நார்கள். அந்த சன்னியாசிகள் ஜனக மகராஜா எல்லாவிதமான சம்பத்துக்களுடன் அரசாட்சி செய்வதை கண்டு பொறாமை கொண்டனர். தாங்கள் இகத்தில் எந்த விதமான இன்பமும் இல்லாமல் சதா பிரம்மத்தை நினைத்துக்கொண்டு இருப்பதாகவும், ஜனகர் பிரம்மத்தை அறிந்திருந்தும் அதை மறந்து இந்த உலக சுக துக்கங்களில் ஆழ்ந்துவிட்டார் என்றும் ஏளனமாக நினைத்தார்கள். தன்னுடைய நாட்டில் உள்ள அந்த சன்னியாசிகளின் கெட்ட விதமான அந்த கருத்தை ஒற்றர்கள் மூலம் ஜனக மகராஜா அறிந்து அவர்களுக்கு நல்ல பாடம் கற்பிக்க வேண்டும் என்று முடிவு செய்தார்.

ஒரு நாள் தன்னுடைய நாட்டில் உள்ள சன்னியாசிகள் அனைவரையும் அரண்மனைக்கு அழைத்தார். சன்னியாசிகள் அனைவரும் வந்திருந்தனர். அந்த சன்னியாசிகளை அரண்மனை சேவகர்கள் இராஜோபச்சாரமாக வரவேற்றனர். சன்னியாசிகள் அனைவரும் கோவணம் அணிந்திருந்தனர். அவர்கள் அனைவரையும் நன்றாக குளிக்கவைத்து பரிமள கந்தங்கள் பூசப் பெற்று உடுத்துவதற்கு பட்டு ஜரிகை வேஷ்டிகள் வழங்கப் பெற்றன. எனினும் சன்னியாசிகள் தாங்கள் அணிந்து வந்திருந்த கோவணத்தை திரும்பி எடுத்துச் செல்ல நன்றாக துவைத்து, கொடியில் உலர்த்துவதற்காக காயப் போட்டனர். அப்பொழுது சூரைக்காற்று ஒன்று அடித்தது. சன்னியாசிகள் கொடியில் காயவைத்த கோவணங்கள் எல்லாம் காற்றில் பறக்க ஆரம்பித்தன. தங்களுடைய கோவணங்கள் காற்றில் பறப்பதை ஜரிகைவேஷ்டி அணிந்து அலங்காரமாக அமர்ந்திருந்த

சன்னியாசிகள் பார்த்தனர். அவர்கள் திரும்பிச் செல்லும் போது கோவணங்கள் வேண்டுமே என்ற கவலையால் மனம் பதை பதைத்து காற்றில் பறந்த கோவணங்களை அலறி அடித்துக் கொண்டு தேடிஓடி அவரவர் கோவணங்களை தேடி தேடி எடுத்து வந்து பத்திரப்படுத்திக் கொண்டனர்.

சன்னியாசிகள் அனைவருக்கும் விருந்து ஏற்பாடு செய்ய பெற்றிருந்தது. அரசனுடைய விருந்து என்றால் கேட்க வேண்டுமா? ஏராளமான பதார்த்தங்களும், விதவிதமான உணவு வகைகளும் தலைவாழை இலையில் பரிமாறப்பட்டிருந்தன. சன்னியாசிகள் அனைவரும் விருந்து உண்ணுவதற்காக இலைக்கு முன்பாக அமர்ந்தனர். ஆனால் அப்போது அங்கு பார்த்தால் ஒவ்வொரு சன்னியாசியின் தலைக்கு மேலும் ஒரு கத்தி குதிரை மயிரில் கட்டி தொங்கவிடப்பட்டிருந்தது. சன்னியாசிகள் அனைவரும் நன்றாக உணவு அருந்துமாறு கேட்டுக்கொள்ளப் பெற்றனர். ஆனால் சன்னியாசிகள் பயந்து பயந்து உணவு அருந்தினர். காரணம்... மயிரிழையில் தலைக்கு மேல் கத்தி தொங்கிக் கொண்டிருந்ததால் அந்த கத்தி அறுந்து தங்கள் தலைமேல் விழுந்து உயிருக்கு ஆபத்து ஏற்பட்டுவிட்டால் என்ன செய்வது என்ற பயத்துடன் உணவை அருந்தி முடித்தனர்.

உணவு அருந்தியபின் சன்னியாசிகள் அனைவருக்கும் தாம்பூலம் வழங்கியபின் அரச சபை கூட்டப்பெற்றது. ஜனகர் சன்னியாசிகளை பார்த்து உணவு அருந்தினீர்களே ருசி தெரிந்ததா? என்று கேட்டார்.

சன்னியாசிகள் என்ன பதில் சொல்லுவார்கள். தலைக்கு மேல் கத்தி இருந்ததால் தாங்கள் ருசியை அறியவோ உணவு அனுபவித்து உண்ணவோ இயலவில்லை என்பதை அப்போது சன்னியாசிகள் உணர்ந்திருந்தனர். அப்போது ஜனகர்

சன்னியாசிகளை பார்த்து சென்னார். உங்களைப் போலவே னானும் இருக்கிறேன். இந்தப் பெரிய ராஜ்ய பாரத்தையும் அத்தோடு கூடிய பெருமைகளையும். சிறப்புகளையும் அனுபவிப்பதாக மற்றவர்களுக்கு தோன்றினாலும் எனக்கு அவைகளினால் ஏற்படும் எந்த மகிழ்ச்சியும் இல்லை. இறைவனுடைய கட்டளைபடி இந்தப் பெரிய ராஜ்ய பாரத்தை சுமந்து கொண்டிருக்கிறேனே அன்றி வேறு இல்லை என்றார். இதைக் கேட்ட சன்னியாசிகள் அனைவருக்கும் னல்ல புத்தி வந்து அமைதியாக தங்களுடைய ஆசிரமங்களுக்குச் சென்றனர். என்று ஆண்டவர்கள் இந்தக் கதையை அருளி னிறுத்தினார்கள்.

*குறிப்பு: இந்தக் கதையின் கருத்து ஞானிகள் உலக இன்பங்களை அனுபவிப்பது போல் தோன்றினாலும் உண்மையில் அவர்கள் மனம் அதில் லயித்து இருக்கவில்லை, உலகத்தின் இரட்சிப்புக்காகவும், உலகமக்களுக்கு வழிகாட்டுவதற்காகவுமே ஞானிகள் உலகத்தில் வாழ்கிறார்கள் என்று அறியலாம். இந்தக் கதையில் வரும் சன்னியாசிகள் புறத்தில் எல்லாவற்றையும் விட்டு அகத்தில் பிரம்மத்தில் லயித்து இருப்பதாக காட்டிக் கொண்டது பொய் என்பதை அவர்கள் கிழிந்த கோவணத்தின் மீது வைத்த பற்றிலிருந்து தெரிந்துகொள்கிறோம். அதே சமயம் ஜனக மகராஜா அரசாட்சியையும் அத்துடன் கூடிய சுகபோகங்களையும் அனுபவிப்பது போல் தோன்றினாலும் அகத்தே சதா சர்வகாலமும் பிரமத்தில் லயித்து இறைவனின் கட்டளைப்படி ஆட்சி புரிந்து வந்தார் என்பதையும் தெரிந்து கொள்ளுகிறோம்.*

## தூங்கு மூஞ்சி செட்டியார் கதை

ஓர் ஊரில் இரண்டு செட்டியார்கள் இருந்தார்கள். அவர்கள் கருப்பட்டி வியாபாரம் செய்து வந்தார்கள். அவர்கள் இருந்த ஊருக்கு வெகுதொலைவில், வாரச் சந்தை கூடும் அந்த னட்களில் கருப்பட்டிகளைச் சந்தைக்குக் கொண்டுபோய் வியாபாரம் செய்து வருவது அவர்கள் வழக்கமாக இருந்தது.

வழக்கம் போல் வாரச்சந்தைக்குப் போவதற்காக முன்னுளே கருப்பட்டிகளையெல்லாம் சாக்குப் பைகளில் போட்டு முட்டையாகக் கட்டினார்கள். பிறகு முட்டைகளைச் சரிபார்த்து வண்டியில் ஏற்றினார்கள். வண்டியில் மாடுகளைப் பூட்டினார்கள். பல ஆண்டுகளாக இருந்து வந்தமாடுகளை விற்றுவிட்டு அப்போதுதான் புதுமாடுகள் வாங்கி இருந்தார்கள். இவர்கள் வாங்குவதற்கு முன் அம்மாடுகள் ஒருவனிடம் பல ஆண்டுகளாக செக்கிழுத்தே பழக்கப்பட்டவை. செக்கிழுத்த-மாடுகள் செட்டியார்கள் கைக்கு வந்த உடனே, கருப்பட்டி முட்டைகள் ஏற்றியவண்டியை இழுத்துக் கொண்டு சந்தைகூடும் ஊரைநோக்கி வீதியிலே சென்றன. ஆடி ஆடி அசைந்துகொண்டே அந்த வண்டி நெடுந்தூரம் சென்று கொண்டிருந்தது. வண்டியில் செட்டியார்களுக்கு மெல்ல தூக்கம் வர ஆரம்பித்தது. சிறிது நேரத்திற்குள் இருவரும் தூக்கத்தில் ஆழ்ந்து விட்டார்கள். வண்டிமட்டும் போய்க்கொண்டே இருந்தது. சந்தை கூடும் இடத்திற்குப் பாதிதூரம் இருக்கும் போது வண்டி செல்லும் பாதையில் ஒரு திருப்பம் வந்தது. அத்திருப்பத்திற்குப் பக்கத்திலே ஒரு வெட்ட வெளியான இடம் தெரிந்தது. காலமெல்லாம் செக்கிழுத்த மாடுகள் அவை அல்லவா? ஆகவே பாதைக்குப் பக்கமாக இருந்த வெட்ட வெளியை மாடுகள் பார்த்தவுடன் பழைய ஞாபகம் வந்துவிட்டது.

உடனே பாதையை விட்டு விலகி, வெட்டவெளியான இடத்திற்கே சென்றன. சென்றதும் அங்கேயே செக்கிழுப்பது போல் சுற்றி சுற்றிவர ஆரம்பித்தது. இதற்குமுன் செக்கிழுத்தே பழக்கப்பட்ட மாடுகள் ஆதலால், அந்த வெளியிடத்தில் வட்டச்சுற்றிலேயே நெடுநேரம் சுற்றிக் கொண்டிருந்தன. சுற்றி சுற்றியே அம்மாடுகள் தமக்கென ஒரு வட்ட வடிவப்

பாதையையே அமைத்துக்கொண்டு விட்டன. அந்த இடத்தின் தரைச்சற்று மென்மை ஆனதால், மாட்டு வண்டிச்சக்கரங்கள் நேரம் ஆக ஆகப் பூமியில் ஆழப் பதிந்து கொண்டே இருந்தன. சுமார் ஒன்றரை அடி ஆழத்திற்கு வண்டிச்சக்கரங்கள் சுற்றுவதற்கு ஆழமான வட்டமான பாதையாக ஆழம் அமைந்து விட்டது. மாடுகளோ சுற்றியபடியே இருந்தன. உள்ளே இருந்த செட்டியார்களும் சுகமாக தூங்கிக்கொண்டே இருந்தார்கள். இரவெல்லாம் கழிந்து பொழுதும் விடிந்து விட்டது. அப்பொழுதும் மாடுகள் வண்டியை இழுத்துக்கொண்டு சுற்றிக்கொண்டே இருந்தன.

அன்று சந்தை கூடி படுஜோராக வியாபாரம் நடந்து கொண்டிருந்தது. பகற்பொழுது கழிந்து மாலைவந்து கொண்டிருந்தது. சந்தைக்குச் சென்றவர்கள் எல்லாம் திரும்பிக்கொண்டிருந்தார்கள். இந்த செட்டியார்களுக்குச் சொந்தமான ஊரைச் சேர்ந்தவர்களும் சந்தை முடிந்து அந்த வழியாகத் திரும்பிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் வெட்ட வெளியிடத்திலே ஒரு மாட்டுவண்டி சுற்றிக் கொண்டிருப்பதை பார்த்தார்கள். உடனே அவர்கள் அருகில் சென்று பார்த்தார்கள். தங்கள் ஊர் செட்டியார்களின் வண்டி அது என்று அறிந்து வண்டியை நிறுத்திவிட்டு உள்ளே பார்த்த போது இரு செட்டியார்களும் தூங்கிக்கொண்டிருப்பதை கண்டு அவர்களை எழுப்பினார்கள். ஒன்றரை அடி ஆழத்திற்குப் புதையுண்டு போயிருந்த வண்டிச் சக்கரங்களை எல்லோருமாகச் சேர்ந்து தூக்கிப் பாதைக்குக் கொண்டு வந்தார்கள். பிறகு இரண்டு செட்டியார்களுக்கும் விபரம் தெரிந்தது. வேறுவழியின்றி வந்த வழியே வண்டியை திரும்ப ஓட்டிக்கொண்டு ஊர்வந்து சேர்ந்தார்கள். என்று ஆண்டவர்கள் இந்த கதையை எடுத்துச்

சொல்லி அருளினார்கள். இக்கதையை உவமையாகக் கொண்டு அறிந்து கொள்ள வேண்டிய நுண்ணிய கருத்துக்கள் பல உள்ளன. அவற்றுள் ஒன்று வருமாறு:

ஆண்டவர்கள் அருளிச் செய்த இவ்வுபதேசக் கதை செக்குமாடு மாதிரி மெய்யைப் பெற்றுக் கொண்டவர்களுக்கெல்லாம் ஓர் எச்சரிக்கை - உஜார் - செய்வதாக அமைந்திருக்கிறது.



## கிறுக்குப் புலவன் கதை

ஒரு நாட்டை ஒரு மன்னன் ஆண்டு கொண்டிருந்தான். மன்னன் தயாள குணம் கொண்டவன். தன்னை நாடி வந்த புலவர்களுக்கெல்லாம் இல்லை என்று சொல்லாமல் கொடுத்து வந்நான். புலவர்கள் தம்மிடம் வந்து பாடிப் பொன்னும் பொருளும் பெற்றுச் செல்லவேண்டும் என்பதில் அதிக விருப்பமுடையவனாக இருந்தான். இதனால் அம்மன்னனின் பேரும், புகழும் நாடெல்லாம் பரவியது.

அம் மன்னனுக்கு உடன் பிறந்த தம்பி ஒருவன் இருந்தான். அம்மன்னனுக்கு இருக்கும் பேரும் புகழும் கண்டு அவன் தம்பி பொறாமை கொண்டான். நாடாளுவதற்கு ஆட்சி

பீடமேறும் வாய்ப்பே தனக்கில்லையே என்று பொருமையால் தினமும் புழுங்கினுன்.

ஒரு சமயம் மன்னன், ஒரு குறிப்பிட்ட ஞளன்று ஞட்டில் உள்ள புலவர்கள் எல்லோரும் அரசவைக்கு வந்து தம்முன்னுல் பாடிப் பொன்னும் பொருளும் பட்டாடை ஆபரணங்களும் பெற்றுச் செல்லலாம் என்று ஞட்டில் ஆங்காங்கு முரசு கொட்டி அறிவிக்குமாறு செய்தான்.

மன்னன் அறிவிப்பைக் கேட்ட புலவர்கள் அனைவரும் அரசவை ஞேக்கி அன்று காலை முதலாக வர ஆரம்பித்தார்கள். மன்னனுடைய ஞட்டில் எல்லாப் பகுதிகளில் இருந்தும் மற்ற அயல் ஞடுகளில் இருந்தும் புலவர்கள் திரளாக வந்நார்கள். அரண்மனை மண்டபத்தே மன்னருக்கு முன்னுல் அலங்கார மேடையில் அமர்ந்து பலவகையாக மன்னனை ஏற்றியும் போற்றியும் பாடினுர்கள். பாடின புலவர்களுக்கெல்லாம் மன்னன் தங்கத் தாம்பளத்திலே பொன்னையும் பொருளையும் னவரத்தின ஆபரணுதிகளையும், பட்டும் பீதாம்பரங்களையும் வைத்து மன மகிழ்ச்சியுடனும், மன னிறைவுடனும் கொடுத்து அனுப்பியபடி இருந்நான்.

அவ்வூரிலே ஒரு கிறுக்குப் புலவன் இருந்நான். மற்ற புலவர்களைப் போல ஆடம்பரமோ டாம்பீகமான ஆரவாரமோ அவனிடம் இல்லை. அவன் அணிந்திருந்ந ஆடைகள் அழுக்கேறியும், ஆங்காங்கு கிழிந்தும் இருந்நன. அவன் பேசுவதும், பாடுவதும் யாருக்கும் புரியாது, பிடிக்காது. இதனுலேயே மக்கள் அவனைக் கிறுக்குப் புலவன் என்று கூறிவந்நார்கள்.

புலவர்கள் எல்லாம் மன்னனைப் பாடிப் பொற்காசுகளைப் பெற்றுச் சென்று கொண்டிருந்ந அந்ந ஞளிலே மக்களில் சிலர் கிறுக்குப் புலவனைப் பார்த்து 'னீயும் மன்னனைக் கண்டு பாடிப்

பரிசு பெற்று வரலாமே' என்று கிண்டலாக கூறி அரசவைக்குப் போகுமாறு வற்புறுத்தினர்கள்.

னேரமோ சென்று கொண்டிருந்நது. பரிசளிப்பு வைபவம் முடிய சிறிது னேரமே இருந்நது. மக்கள் இப்படி தொடர்ந்து வற்புறுத்திக் கூறியதை உண்மை என்று னம்பி கிறுக்குப் புலவனும் மன்னனைக் கண்டு பாடிப் பரிசு பெறலாம் என்றெண்ணி அரசவைக்குச் சென்றான்.

கிறுக்குப்புலவன் அரச கொலுமண்டபத்தை அடைந்நதும், அங்ஙிருந்ந புலவர்கள் எல்லாம் கொல் என்று னகைத்தார்கள். பட்டுப்பீதாம்பர ஆடைகளுடனும், காதிலும், கழுத்திலும் பொன்னுபரணங்ஙளுடனும், ஆடம்பரத்தோடு விளங்ஙும் அவையோர்களுக்கு முன்னால் கிழிந்ந, அழுக்கேறிய ஆடையை அணிந்து சென்ற கிறுக்குப்புலவனை எல்லோரும் ஏளன னகை பிறங்ஙப்பார்த்தார்கள்.

இவன் என்ன பாட்டுப் பாடப்போகிறான் என்று பல வாய்கள் முணுமுணுத்தன. இதனால் அரசு மண்டபத்திலே ஒரே சல சலப்பு உண்டாயிற்று. எல்லோரையும் அமைதியா-யிருக்குமாறு மன்னன் கையசைத்து காட்டி, அக்கிறுக்குப் புலவனுக்கு பாட அனுமதி அளித்தான்.

கிறுக்குப் புலவன் மன்னன் முன்புள்ள மேடையில் சென்று அமர்ந்நான். மன்னனைப் பார்த்துப் பின்வருமாறு பாடினன்.

"னீ பார்க்கிற பார்வையும், னீ தீட்டுகிற தீட்டும் எனக்குத் தெரியும்! தெரியும்!" என்ற இருவரிகளை ஏதோ கிறுக்குத்தனமாக உளறி கூறிவிட்டு, டேையில் இருந்து கீழே இறங்ஙி அமர்ந்நான். அரசவையில் இருந்ந அனைவரும் இப்புலவன் பாடிய கவிதைப் வரிகளை கேட்டு "கொல்" என்று சிரித்தார்கள்.

ஆனால் மன்னன் மட்டும் சிரிக்கவே இல்லை, காலையில் இருந்து, பல நூற்றுக்கணக்கான புலவர்கள் பலப்பல விதமாக மன்னனை ஏற்றியும், போற்றியும் பாடிப் பரிசு பெற்றுச் சென்றிருந்நார்கள். அவர்கள் பாடிய பாடலின் வார்த்தைகள் எவையும் அம்மன்னன் உள்ளத்தில் பதியவேயில்லை.

ஆனால் கிறுக்குப் புலவன் கூறிய கிறுக்கு வார்த்தைகள் மட்டும் மற்றெல்லாப் புலவர்கள் பாடியவற்றிலிருந்து முற்றிலும் வேறாக அவனை தாக்குவது போல் இருந்ததால் மன்னன் மனத்தில் னன்கு பதிந்துவிட்டது. அவ்வார்த்தைகள் மறவாமல் இருக்கும்படி மன்னன் தனக்குத்தானே பல முறை கூறிபார்த்துக் தன் மனதில் பதித்துக் கொண்டான்.

அவையில் பாடின எல்லாப் புலவர்களுக்கும், மன்னன் எவ்வாறு பரிசளித்தானோ அவ்வாறே அக் கிறுக்கு புலவனுக்கு தக்க மரியாதைகள் செய்து, பொன்னும் ஆபரணங்களும், பட்டாடைகளும் கொடுத்து அனுப்பி வைத்தான்.

வாய்க்கு வந்தபடி ஏதோ ஒரிரு வார்த்தைகள் கூறிய இப்புலவனுக்கும் மன்னன் எல்லாப் புலவர்களுக்கும் கௌரவம் செய்தது போல் செய்கிறாரே என்று எல்லோரும் எண்ணினார்கள். ஆனால் வெளியில் காட்டிக் கொள்ள இயலவில்லை.

இந்த சமயத்தில் மன்னனைக் கொல்ல, அவன் தம்பி எத்தனையோ உபாயங்களை யோசித்துக் கொண்டிருந்ததான். எதையுமே சரியாக னிறைவேற்ற முடியவில்லை. இறுதியில் அண்ணனுக்கு வழக்கமாக க்ஷவரம்செய்யும் நாவிதன் வாயிலாக கொலைசெய்யும் திட்டம் ஒன்றை தேர்ந்நெடுத்திருந்நான்.

மன்னனுக்கு வழக்கமாக க்ஷவரம் செய்யும் நாவிதனைக் கண்டு "மன்னரைக் கொலை செய்துவிட்டு நான் பட்டத்துக்கு

வந்நால் உனக்கு மந்திரி பதவி கொடுப்பேன். ஆகவே இப்போதைக்கு இதைப் பெற்றுக்கொள்'' என்று பல லட்சம் ருபாய்களை லஞ்சமாக கொடுத்தான்.

நாவிதன் முதலில் மறுத்தாலும் இறுதியில், பேராசையால் இக்கொலையைச் செய்ய சம்மதித்தான். மன்னனுக்கு க்ஷவரம் செய்யும் போது எவரும் எதிர்பார்க்காத வகையில் க்ஷவரக் கத்தியைத் திடீர் என்று கழுத்தில் பாய்ச்சித் தலையை துண்டித்துவிட வேண்டும் என்பது தான் மன்னனின் தம்பி வகுத்த திட்டமாகும்.

மறுநாள் மன்னனுக்கு க்ஷவரம் செய்யும் நாளாகும். நாவிதன் தயார் நிலையில் மன்னனுக்கு க்ஷவரம் செய்ய வந்து இருந்நான். க்ஷவரக் கத்தியைக் கூர்மையாக்குவதற்காகத் தோல் பட்டையில் தீட்டிக் கொண்டிருந்நான்.

நாவிதன் உள்ளம் அன்றையதினம் அமைதியிழந்து தவித்துகொண்டிருந்நது. ஆபத்தான செயலை மன்னன் தம்பியின் வற்புறுத்தலால் செய்கிறோமே, மாட்டிக்கொண்டால் என்ன ஆவது என்ற எண்ணம் அடிக்கடி அவன் மனதில் தோன்றி ஒருவித பயங்கலந்த பதட்டத்தை அளித்துக் கொண்டிருந்நது. இத்தகைய நிலையில் அவன் கத்தியைத் தீட்டிக் கொண்டிருக்கும்போது மன்னன் வழக்கமாக க்ஷவரம் செய்து கொள்வதற்கு அந்த இடத்துக்கு வந்நான். தனக்கு க்ஷவரம் செய்யும் நாவிதன் கத்தியைத் தீட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். நாவிதனும் அரசனைப் பார்த்துக்கொண்டே கத்தியைத் தீட்டிக் கொண்டிருந்நான்.

அப்போது அவன் பார்த்த போது மன்னன் நினைவிற்கு அன்றைய முன்தினம் அக்கிறுக்குப் புலவன் சபா மண்டப

மேடைக்கு வந்து அமர்ந்த தோற்றமும், அவையோர் அப்புலவனைக் கண்டு எள்ளி னகை செய்த காட்சியும் இவைகளையெல்லாம் பொருட்படுத்தாமல் கிறுக்குப்புலவன் கூறிய கவிதையில் அமைந்த வார்த்தைகளும் அவன் மனதில் திரும்ப திரும்ப வந்தது. அந்த வரிகளை அவ்வப்போது னினைவு படுத்திகொண்டிருந்தான். ஆகையால் அப்போதும் " னீ பார்க்கிற பார்வையும் னீ தீட்டுகிற தீட்டும் எனக்குத் தெரியும்-தெரியும்" என்று முன் தினம் சபையில் கிறுக்குப்புலவன் கூறிய கிறுக்கு பாடல்வரியை அப்படியே எதார்த்தமாக வாய்விட்டு ஞாபகத்திற்காக சத்தமாக முணு முணுத்தான்.

தோலில் கத்தியை பட்டைத் தீட்டிக் கொண்டிருந்த னுவிதன் மன்னன் கூறிய வார்த்தைகளைக்கேட்டதும் அதிர்ச்சி அடைந்தான். வெலவெலத்து அவன் கைகள் னடுங்கின. இவ்வளவு திட்டவட்டமாக தான் செய்யவிருந்த பெரும் கொலைச் செயலைத்தான் அவர் அறிந்து அப்படி கூறுகிறார் என்று எண்ணிப் பெரும் பீதி அடைந்து னீட்டிக் கொண்டிருந்த கத்தியை கீழே போட்டுவிட்டு மன்னன் காலடியில் விழுந்து கதறி மன்னிப்பு கேட்டான்.

"மகாராஜா! என்னை மன்னிச்சிடுங்க! னீங்க சொன்னது உண்மைதான். உங்க தம்பியின் பேச்சைக்கேட்டு பேராசையால் கத்தியாலே உங்க தலையை வெட்ட இருந்தேன். னீங்க எப்படியோ கண்டு பிடித்து உண்மையை இப்ப சொல்லிவிட்டீங்க! என்னை மன்னிச்சுடுங்க மகாராஜா' என்று மன்னனைக் கொலை செய்ய அவர் தம்பி தீட்டிய திட்டங்களை எல்லாம் கூறி விட்டு மன்னிப்பு வேண்டி கதறி கதறி மன்றாடினான்.

தம்பியால் னேரவிருந்த மரண அபாயத்தில் இருந்து தாம் தப்பியதையும் இவ்வாறு தப்புதவற்கு காரணமாக இருந்த அந்தக் கிறுக்குப் புலவனின் பாடல் வரிகளானது தன் உயிரையே ரக்ஷித்த மந்திரமாகவும் மன்னன் அப்போது னினைத்தான்.

தம் வாழ்வில் தம் தம்பியால் னேரவிருந்த பேராபத்தைத் தடுப்பதற்காகவே அன்று அந்த கிறுக்குப் புலவன் தீர்க்க தரிசனமாக தெரிந்து அங்கு வந்து பாடியதாக எண்ணி னன்றியுடன் அவனை னினைத்தான்.

உடனே அக்கிறுக்குப் புலவனை எங்கிருந்தாலும் தேடி அழைத்துக் கொண்டு வருமாறு மன்னன் ஆணை இட்டான். மன்னன் அப்புலவனுக்கு மீண்டும் தம் மனம் விரும்பிய அளவிற்குப் பொன்னும் பொருளும் பட்டாடைகளும் னிரம்பக் கொடுத்து உபசாரம் செய்து வணங்கினான்.

கிறுக்கு புலவனைப் போல கிறுக்கு சாமியார்கள் உலகில் ஏராளமாக உளருவதையும், இதையெல்லாம் கிறுக்குத் தனமாக உலகில் என்ன வெல்லாமோ அர்த்தங்கள் கற்பிக்கப்பெற்று ராஜமரியாதைகள் னடக்கிறது என்பதையும் மூடத்தனமான உளருதல்களை கூட இப்படியெல்லாம் கிறுக்கு தனமாகச் சம்மந்தப்படுத்தி உலகத்தினர் னடந்து கொள்கிறார்கள் என்பதையும் கூறி அதனால் தான் பொய்ச் சாமியார்கள் உலகத்தில் வளர்ந்துவருகிறார்கள் என்பதனையும் எடுத்து உணர்த்தவே இந்தக் கதையை ஆண்டவர்கள் அருளினார்கள்.





பரம்சார்ந்த இச்சீர்காரிய

வெளியீட்டிற்கு உதவியவர்களும்

அச்சிட்டோரும் :

**அழகன் அச்சகம்,**

12, கலவை சாலை, ஆற்காடு-632 503.

போன்: 04172-235583, 235754,

செல்: 9442807346, 9486969437.






